# மறுமணம்

சு. குருசாமி







கலைமகள் காரியாலயம்

மயிலாப்பூர் :: சென்னை




[விலை ரூ. 2/—




# பொருளடக்கம்


| | | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | சிட்டாட்டம் | .. | 1 |
| 2. | சந்தகாதஞ் செட்டியார் | .. | 8 |
| 3. | செயலும் சிந்தனையும் | .. | 15 |
| 4. | மாப்பிள்ளை எப்படி? | .. | 23 |
| 5. | ஏமாற்றம் | .. | 30 |
| 6. | 'அந்தப் பழம்..' | .. | 37 |
| 7. | திருப்பதியில் | .. | 42 |
| 8. | மீண்டும் முயற்சி | .. | 48 |
| 9. | கடிதமும் பதிலும் | .. | 56 |
| 10. | விசித்திரக் காதல் | .. | 60 |
| 11. | கண்கள் சந்தித்தன | .. | 66 |
| 12. | பாட்டியும் தாத்தாவும் | .. | 72 |
| 13. | கல்யாணக் குதூகலம் | .. | 76 |
| 14. | மாப்பிள்ளையின் கோபம் | .. | 80 |
| 15. | அழகர் கோவில் | .. | 87 |
| 16. | சந்தேகம் | .. | 95 |
| 17. | தொண்டு நிலயம் | .. | 103 |
| 18. | கிளை விட்டுக் கிளை தாவல் | .. | 110 |
| 19. | இராப்பள்ளிக்கூடம் | .. | 119 |
| 20. | மாரியப்ப செட்டியார் மறைவு | .. | 126 |
| 21. | விடை பெறுதல் | .. | 132 |
| 22. | கோழையா? தொண்டனா? | .. | 137 |
| 23. | மறுமண ஏற்பாடு | .. | 143 |
| 24. | மனமாற்றம் | .. | 148 |
| 25. | பிரிந்தவர் கூடுதல் | .. | 151 |

## ஆக்கியோன் குறிப்பு

இந்நாவலைத் தொடர் கதையாகத் தமது பத்திரிகையில் வெளியிட்டு உதவிய 'தினமணி' ஆசிரியர் அவர்களுக்கும், இதை அழகிய உருவத்தில் புத்தகமாக வெளியிட்டிருக்கும் "கலைமகள்" காரியாலயத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகும்.

சு. குருசாமி.

# மறுமணம்

## அத்தியாயம் 1

## சீட்டாட்டம்

அலைகளை ஓயாது வீசிக்கொண்டிருக்கும் கடல் ஓரத்திலே சென்னையில் ஒரு ஹாஸ்டல். அதிலுள்ள ஓர் அறையில் மாணவர் சிலர் சீட்டுக் கச்சேரியில் ஈடுபட்டிருந்தனர். இயற்கையாகவே அதனுடன் அரட்டைக் கச்சேரியும் சேர்ந்துகொண்டது.

"இன்று சாரதா மசோதாவை ஆதரித்து இத்தனை பேர்கள் பேசினர்களே; இவர்களில் எத்தனை பேர் பால்ய மனைவியர்களுக்குக் கணவன்மார்களோ, ஈசுவரன்தான் அறிவான்" என்றான் ஒருவன்.

"இன்றைக் கூட்டத்தில் பேசியவர்களில் ஏழு பேர் நம்முடைய ஹாஸ்டலிலேயே இருக்கிறார்கள். இவர்களுக்கு நாளைக்கே, 'உனக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. உடனே புறப்பட்டு வா' என்று தந்தி வருகிறதா இல்லையா என்று பாருங்கள்" என்று மற்றொருவன் சொன்னான்.

"அப்படி வந்தால் இந்த வாய் வீரர்கள் எல்லாரும் என்ன செய்வார்கள்?"

"வேறென்ன செய்வார்கள்? மூச்சுவிடாமல் அடுத்த மெயிலிலேயே புறப்பட்டுச் சென்று, மூணுக்கு விடாமல் அடுத்த முகூர்த்தத்திலேயே கல்யாணத்தை முடித்துக் கொண்டு வந்து சேர்வார்கள்!"

"அதிருக்கட்டும்; சீட்டைப் பார்த்து இறங்குங்க ஐயா!" என்றான் காரியத்தில் கண்ணான ஒருவன்.

"இந்த விஷயம் இன்னும் ஒருவருக்கும் தெரியாது போலும். இன்றைய விவாதத்திற்குத் தலைமை வகித்த இந்தப் பாஸ்கரன் இருக்கிறாரே, இப்பொழுது ஒன்றும் பேசாமல் மௌனம் சாதிக்கும் இவருக்கு, இரண்டு குழந்தைகள் இருக்கின்றன என்பது உங்களுக்கெல்லாம் தெரியாது போலிருக்கிறது!"

"அதுதான் இன்றைக்கு அத்தனை உணர்ச்சி ததும்பப் பேசினாரோ?"

"எல்லாம் சொந்த அனுபவம், ஐயா! இல்லையானால் அத்தனை உணர்ச்சி வருமா?"

"'உள்ளத்தில் உண்மை ஒளி உண்டாயின் வாக்கினிலே ஒளி உண்டாகும்' என்ற பாரதியார் வாக்கும் பொய்க்குமா?" என்றான் இன்னொருவன்.

"இப்பொழுதாவது உண்மையை ஒப்புக்கொள்கிறாரா என்று பார். மௌனமாகக் கள்ளப் புன்னகை செய்துகொண்டிருப்பதைப் பாருங்கள்."

"நேற்றுக்கூட இவருக்கு ஒரு கடிதம் வந்தது. மேல் விலாசத்தைப் பார்த்தபோது, பெண்ணின் கையெழுத்து மாதிரி இருந்தது. ஓஹோ! அப்படிச் சொல்லுங்கள். அதை ஏன் அவ்வளவு தூரம் மறைத்தார் என்பது எனக்கு இப்பொழுதுதான் விளங்குகிறது!"

"என்ன, பாஸ்கரன், குழந்தைகள் எல்லாம் ஷேமமாக இருக்கிறார்களா?" என்று சிரித்துக் கொண்டே ஒருவன் கேட்டான்.

"அடடே! இந்த விஷயம் எனக்கு முன்னாலேயே தெரியாமல் போய்விட்டதே! தெரிந்திருந்தால் கூட்டத்திலேயே இவருடைய மானத்தை வாங்கியிருப்பேனே! எதிர்க்கட்சிக்கு இது ஒரு நல்ல ஆதாரமாயிருந்திருக்குமே?"

நீதிபதிபோல் ஒருவன் நடித்துக்கொண்டு, "ஸ்ரீ பாஸ்கரன், உம்மீது வந்திருக்கும் குற்றச் சாட்டுகளுக்கெல்லாம் பதிலளிக்க உமக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்திருக்கிறோம்" என்று சொன்னான்.

பாஸ்கரன் அப்பொழுதும் பேசாது சிரித்துக்கொண்டே விளையாட்டைக் கவனித்துக்கொண் டிருந்தான்.

"என் ஐயா, ஒரு மனுஷனைப் பிடித்து இத்தனை பேர் சேர்ந்து 'கோட்டா'ப் பண்ணுகிறீர்கள்? பாஸ்கரனுக்கு மனைவியுமில்லை, குழந்தையுமில்லை. எனக்கு நன்றாய்த் தெரியும். ஆனால் என்னுடைய பிரார்த்தனை என்னவென்றால், இவர் இத்தனை உணர்ச்சியுடன் இன்று பால்ய விவாகத்தைக் கண்டித்துப் பேசியதற்குக் கடவுள் என்று ஒருவர் இருந்தால் அவருக்கு ஹாஸ்ய உணர்ச்சியும் இருக்குமானால், இவருக்கு இன்றைக்கே கல்யாணம் நிச்சயம் செய்ய வேண்டுமென்பதே!" என்றான் ராமச்சந்திரன். அவன் பாஸ்கரனின் நெருங்கிய நண்பர்களில் ஒருவன்.

"பக்தர்களெல்லாம் இதுவரையில் கடவுளைத் தந்தையாகவும், தாயாகவும், குழந்தையாகவும், காதலியாகவும், காதலனாகவுந்தான் கற்பனை செய்திருக்கிறார்கள். இந்தக் கலியுக நவீன பக்தர்தாம் கடவுளைக் கல்யாணத் தரகராக வரிக்கிறார்" என்றான் இதுவரைக்கும் மௌனம் சாதித்த பாஸ்கரன்.

"நான் பக்தனோ, இல்லையோ, என்னுடைய பிரார்த்தனைக்குக் கடவுள் செவி சாய்க்கிறாரா இல்லையா என்று பாரும்."

இந்தச் சமயத்தில் அடுத்த அறையிலிருந்து, "பக்தா! உன் பிரார்த்தனையைக் கேட்டோம். வெகு சீக்கிரத்தில் நிறைவேற்றி வைப்போம். பயப்பட வேண்டாம், பக்தா!" என்று ஒரு குரல் கேட்டது.

இதைக் கேட்டதும் சீட்டாடிக்கொண் டிருந்த அனைவரும் இடி இடி என்று நகைத்தார்கள்.

இந்த மாதிரியே பேச்சும் விளையாட்டும் நடந்துகொண்டிருந்தன.

கட்டற்றுக் காட்டாற்று வெள்ளம் போன்ற வாழ்க்கை நடத்துபவர்கள் கல்லூரி மாணவர்கள். அவர்களுக்குக் கவலையோ பொறுப்போ கட்டுப்பாடோ ஒன்றும் இல்லை. மாதந்தோறும் பணம் வந்து சேர்கிறது. அது யாரிடமிருந்து, எப்படி வருகிறது என்றுகூட அவர்கள் சிந்திப்பதில்லை. மாதந்தோறும் அவர்கள் தபால்காரனுக்கு இரண்டணுக் கொடுக்க, அதற்குப் பதிலாக அவன் அவர்களுக்கு ரூபாய் ஐம்பதோ, அறுபதோ, எழுபதோ கொடுத்துவிட்டுப் போகிறுன் என்பது அவர்களுடைய எண்ணம் போலும்! இத்தகைய கவலையற்ற வாழ்க்கையில் வேடிக்கைக்கும் விளையாட்டிற்கும் பஞ்சம் ஏது?

அவர்கள் அங்ஙனம் விளையாடிக்கொண்டிருக்கையில் சொல்லி வைத்ததுபோல் ஒரு புதிய மனிதர் வந்து, "பாஸ்கரஞ் செட்டியார் இங்கே இருக்கிறுரா?" என்று கேட்டார்.

"சாக்ஷாத் இவரேதான் பாஸ்கரஞ் செட்டியார்" என்று அங்கிருந்த ஒவ்வொரு மாணவனும் பாஸ்கரனுடைய முதுகில் ஒவ்வோர் அடி கொடுத்தான்.

"ஓ! இவர் செட்டியரா?" என்றுன் ஒருவன்.

பாஸ்கரன் பிரமை பிடித்தவன்போல் புதிதாக வந்த மனிதரைப் பார்த்தான். இதுவும் நண்பர்களுடைய விளையாட்டின் ஒரு பாகமா? அவர் உண்மையிலேயே தன்னைப் பார்க்க வந்த மனிதர்தாமா? தார் வைத்துக் கட்டிய அவருடைய ஜரிகை வேஷ்டி, பட்டு அங்க வஸ்திரம், சில்க் ஷர்ட், தலையிலுள்ள அவருடைய வைதிகக் குடுமி, சற்றே நரைத்திருந்த அவருடைய ரோமம், மத்திய வயதைக் குறிப்பிடக்கூடிய அவருடைய தோற்றம் இத்தனையும் எப்படி வேஷமாக இருக்க முடியும்?

இத்தகைய சிந்தனையில் பாஸ்கரன் ஆழ்ந்திருந்தபோது, அவனுடைய நண்பர்களில் ஒருவன், "என்ன ஐயா, உம்மைத்

தேடி வந்தவரை ஏன் என்றுகூட ஒரு வார்த்தை கேட்காமல் இருக்கிறீர்? உட்காரச் சொல்லும், ஐயா!" என்றான்.

அச்சமயம் சீட்டாட்டத்தில் அமர்ந்திருந்த ஒரு மாணவன் ஓர் அவசர ஜோலியாக வெளியில் எழுந்திருந்து சென்றான். உடனே மாணவர்களெல்லாம் ஒருவரை ஒருவர் அர்த்தபுஷ்டியுடன் நோக்கினார்கள். எல்லோரும் பாஸ்கரனையும் புன்சிரிப்புடன் பார்த்தனர். பின்பு அவர்களில் ஒருவன் தைரியமாய், "உங்களுக்கு ஆக்ஷேபம் இல்லாவிட்டால் இந்தக் காலி இடத்தில் அமர்ந்து எங்களுடன் கலந்துகொள்ளலாம்" என்றான்.

கல்லூரி மாணவர்களாகிய அவர்களுக்கு யாரைப் பற்றியும் அக்கறை இல்லை.

தமக்குக் கிடைத்த இவ்வதிசய வரவேற்பைக் கண்டு புதிதாக வந்தவர் ஒரு நிமிஷம் திகைத்தார். பின்பு என்ன நினைத்தாரோ தெரியவில்லை, "சந்தோஷத்துடன் கலந்து கொள்ளுகிறேன்" என்று காலி ஆசனத்தில் அமர்ந்தார்.

பாஸ்கரன் அவரை வியப்புடன் நோக்கி, "நீங்கள் ........" என்று ஆரம்பித்தான்.

"சீட்டை இறங்குங்கள், பாஸ்கரன். நேரமாய் விட்டது" என்றான் ஒருவன்.

"நான் உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்" என்று புதிதாக வந்தவர் பாஸ்கரனை நோக்கிப் புன்முறுவலுடன் கூறி மாணவர்களைக் காட்டிலும் அதிக உத்ஸாகத்துடன் சீட்டாட்டத்தில் கலந்துகொண்டார்.

ஆட்டம் முடியும்போது எழு மணி நெருங்கிவிட்டது. மாணவர்கள் எல்லோரும் தங்கள் தங்கள் அறையை நோக்கிச் சென்றார்கள். வழியில் ஒருவன், "உம்முடைய பிரார்த்தனை நிறைவேறிவிடும் போலத்தான் தோன்றுகிறது!" என்றான்.

"'கண்ணன் - என் கல்யாணத் தரகன்' என்று நான் ஒரு பாட்டு எழுதப் போகிறேன்" என்று அவன் மறுமொழி கூறினன்.

"ஐயோ! அவர் கல்யாணத் தரகர் அல்ல, ஐயா! அவருடைய ஜரிகை வேஷ்டியையும், பட்டு அங்கவஸ்திரத்தையும் பார்த்தால் அவர்தாம் பாஸ்கரனுடைய மாமனராகப் போகிறவர் என்று தோன்றுகிறது."

இப்படியே அவர்கள் குதூகலமாகப் பேசிக்கொண்டு சென்றார்கள்.

* * * *

புதிதாக வந்திருந்த அம்மனிதரைப் பாஸ்கரன் விசாரிக்க ஆரம்பித்தான். அவர் வந்த விசேஷம் என்ன என்று பாஸ்கரன் அவரைக் கேட்டபோது, "மங்களகரமான விஷயந்தான். சாவகாசமாகச் சொல்கிறேன்" என்றார்.

அந்தச் சமயத்தில் சாப்பாட்டு மணி அடிக்கவே, பாஸ்கரன் அவரைச் சாப்பிட அழைத்துக்கொண்டு சென்றான்.

சாப்பாட்டு அறையை நோக்கிச் செல்லும்போது பாஸ்கரனுடைய மனத்தில் வித விதமான எண்ணங்கள் தோன்ற ஆரம்பித்தன. புதிதாக வந்திருக்கும் அம் மனிதர் யார்? மகளுக்கு மாப்பிள்ளை பார்க்க வந்திருக்கிறாரா? ஒருவேளை கல்யாணத்தை நிச்சயம் செய்துவிட்டு, மாப்பிள்ளையை நேரில் ஒரு தடவை பார்த்துவிட்டுப் போகலாம் என்று வந்திருக்கிறாரா? அவனுக்குச் செய்திகூடத் தெரிவிக்காமல் அவனுடைய கல்யாணத்தை நிச்சயப்படுத்திவிடுவார்களா? ஆனல் அப்படி நடந்திருந்தாலும் அதில் ஒன்றும் ஆச்சரியம் இல்லையல்லவா? 'ஆயினும் அப்படி எல்லாம் இராது' என்று பாஸ்கரன் தன்னைத் தேற்றிக்கொண்டான். 'ஆனல் அப்படி நடந்திருந்தால் என்ன செய்வது?' என்று அவனுடைய மனம் உசாவியது. என்ன செய்யலாம்? நிச்சயமாக அதை எதிர்க்க வேண்டியதுதான். எதிர்ப்பதற்குரிய தைரியம் அவனுக்கு உண்டா? அப்புறம் அவனுடைய படிப்பு

என்னுவது? பணம் அனுப்புவதை நிறுத்திவிட்டால், அவனுடைய வாழ்க்கைக் கனவுகளெல்லாம் சிதறிப் போய்விடுமே! அதற்குப் பயந்து தன் மனத்துக்குச் சரியல்ல என்று தோன்றும் ஒரு காரியத்திற்கு அவன் இணங்குவதா? அப்புறம் நண்பர்கள் முகத்தில் அவன் விழிக்க முடியுமா? ஆனல் அப்படி எல்லாம் இராது. மாப்பிள்ளையைப் பார்த்துவிட்டு மணம் பேசலாம் என்று நினைத்து வந்திருப்பார். இங்கே அவருக்குக் கிடைத்த வரவேற்பும், அவர் கண்ட காட்சியும் அவர் மனத்தை முற்றும் மாற்றிவிடும். எந்தத் தந்தைதான் தம்முடைய மகளைச் சீட்டாடிப் பொழுது போக்குபவனுக்குக் கல்யாணம் செய்து கொடுப்பார்? இந்த எண்ணம் பாஸ்கரனுடைய மனத்துக்குச் சிறிது ஆறுதலை அளித்தது.

இச்சமயம் இருவரும் சாப்பாட்டறையை அடைந்தார்கள்.

# அத்தியாயம் 2

# சந்தநாதஞ் செட்டியார்

பாஸ்கரனுடைய தாய் சுந்தரியம்மாள் அவனுக்கு இரண்டு வயசாக இருக்கும்பொழுதே இறந்து விட்டாள். மரணவஸ்தையில் இருக்கும்பொழுது, அவள் தன் ஒரே புதல்வனாகிய பாஸ்கரனை மெலிந்த கரத்தினால் பிடித்துக்கொண்டு சுற்றிச் சுற்றி மீண்டும் மீண்டும் பார்த்த பார்வையானது மிகப் பரிதாபகரமாக இருந்தது. 'இரண்டு வயசுக் குழந்தையை விட்டு விட்டுப் போகிறேனே! தாயில்லாத இந்தக் குழந்தையின் கதி என்னாகுமோ?' என்று அவள் ஏங்கினாள். அவனைத் தன்னுடன் கூட்டிச் செல்வதற்கு மார்க்கம் இருந்தால், அவசியம் கூட்டியே சென்றிருப்பாள். அவனை யார் வசம் ஒப்பித்துவிட்டுச் செல்லலாம் என்றே மரணவஸ்தையிலும் தன்னைச் சுற்றிலும் மீண்டும் மீண்டும் அவள் 'பேந்தப் பேந்த' விழித்தாள். தான் மறைந்ததும் ஓர் இளம் பெண்ணை இரண்டாவது தாரமாகக் கல்யாணம் செய்துகொள்ளப் போகும் இளங் கணவரிடம் பால் மணம் மாறாத பச்சைக் குழந்தையை அவள் எப்படி விட்டுச் செல்வாள்? பின் என்ன நினைத்தாளோ தெரியவில்லை. மனிதர்கள் சாகுந்தறுவாயில் எண்ணும் தெளிவற்ற எண்ணங்கள் வெளிவராமலே போய்விடுமோ? தன்னைச் சுற்றிலும் இருந்த மனிதர்களை நம்பிவிட்டுச் செல்வதைப் பார்க்கிலும், ஈசன் கையிலேயே ஒப்பித்தல் மேல் என்று நினைத்தாளோ? மைந்தனுடைய கையை விட்டாள். சிறிது நேரத்தில் அவளுடைய உடலில் ஒட்டிக்கொண்டிருந்த உயிரும் அவளை விட்டுப் பிரிந்தது.

பாஸ்கரனுடைய தந்தை குப்புசாமி செட்டியார் இரண்டாந்தாரம் கல்யாணம் செய்துகொண்டார். மனைவியை இழந்த

கணவன்மார் எல்லோரும் சொல்வதுபோல், அவரும் தமக்காக அல்லாமல் தம் குழந்தையைக் கவனித்துக்கொள்வதற்கு வீட்டில் ஒருத்தி இருக்கவேண்டுமே என்பதற்காகவே மறுமணம் செய்து கொண்டார். ஆனாலும் அவருக்கு மனைவி வாய்த்தாளே ஒழிய, பாஸ்கரனுக்குத் தாய் வாய்க்கவில்லை.

ஆயினும் எட்டு வயசு வரைக்கும் குழந்தையை வளர்க்க வேண்டிய பொறுப்பு அவருக்கு இருக்கவில்லை. பாஸ்கரனின் தாயைப் பெற்ற பாட்டி தன்னுடைய கிராமத்திற்குப் பிள்ளை யைத் தூக்கிக்கொண்டு சென்றுவிட்டாள். அது குக்கிராமம். பள்ளிப் பிராயம் வரைக்கும் எப்படியோ குழந்தையை வளர்த்து விட்டாள். பள்ளி, சள்ளி ஒன்றும் இல்லாத கிராமத்தில் அதற்கப்புறமும் பையனை எப்படி வைத்திருப்பது? 'படிக்கப் போகிற பிள்ளையைப் பாட்டி கிராமத்தில் வைத்திருந்து கெடுத்துவிட்டாள்' என்று ஊரார் ஏச மாட்டார்களா? ஆகையினால் இனிப் பிள்ளை பாடு, தகப்பனார் பாடு என்று குப்புசாமி செட்டியாரிடம் பையனை ஒப்பித்துவிட்டாள்.

குப்புசாமி செட்டியாருக்கு வியாபாரம். அவருடைய தகப்பனாரும் அதே ஊரில் வசித்துவந்தார். அவருக்கும் வியாபாரந்தான் ஜீவனம். இருவரும் தனிக் குடித்தனம், தனி வியாபாரம் நடத்திவந்தார்கள்.

குப்புசாமி செட்டியாரின் சிறிய தந்தை ஒருவர் பக்கத்தில் இருந்த ஊரில் பஞ்சு வியாபாரம் செய்துகொண் டிருந்தார். ஊரில் அவருக்கு நல்ல செல்வாக்கு உண்டு. சந்தநாதஞ் செட்டி யார் என்றால் சாத்தூரில் அழுத பிள்ளையும் வாய் மூடும் என்பார்கள். அத்தனை சீருடனும் சிறப்புடனும் அவர் வாழ்ந்து வந்தார். பஞ்சு வியாபாரத்தில் அவர் மிகவும் கைவந்தவர். அவரால் முன்னுக்கு வந்த சிறு வியாபாரிகள் பலர். அவர் வெளியில் செல்லும்பொழுதெல்லாம், ஐந்தாறு சிறு வியா பாரிகள் அவருக்குப் பின்னால் கைகட்டிக்கொண்டு செல் வார்கள். சாத்தூரிலுள்ள பஞ்சரைக்கும் யந்திரசாலைகளில்

எல்லாம் அவருக்கு நல்ல மதிப்பு உண்டு. நூறு மணிகள்; நூற்றிருபது மணிகள் ஓடிக்கொண் டிருந்த அநேக யந்திரசாலை களில் அவருடைய பருத்தியைத்தான் வாரக் கணக்கிலும் சிற்சில சமயம் மாதக் கணக்கிலும் அரைத்துக்கொண் டிருப் பார்கள்.

பஞ்சு வியாபாரம் சூதாட்டத்தைப் போன்றது. ஒரு சமயம் பஞ்சு விலை திடீரென்று ஏறிவிடவே, சந்தநாதஞ் செட்டி யாருக்கு லக்ஷக்கணக்கில் நஷ்டம் வந்துவிட்டது. சாத்தூர் முழுவதும் ஒரே பரபரப்பாக இருந்தது. 'சந்தநாதஞ் செட்டி யார் தொலைந்துவிட்டார். இதிலிருந்து இனி அவர் கரை ஏற முடியாது' என்றே எல்லோரும் பேச ஆரம்பித்தார்கள். ஆனால் அவர் நஷ்டமடைவதால், கெட்டுப்போகிறவர் அவர் ஒருவர் மட்டுமல்ல. எஞ்சின் ஒன்று தண்டவாளத்தினின்றும் கீழே இறங்கினால் அந்த எஞ்சினுடன் எப்படி அதனுடன் பூட்டப் பட்டிருக்கும் அநேக வண்டிகளும், அவைகளிலிருக்கும் நூற்றுக் கணக்கான பிரயாணிகளும் நாசமடைகிறார்களோ, அதேபோல் அவரை நம்பியிருந்த எண்ணற்ற சிறிய வியாபாரிகளுக்கும், அவரால் பிழைத்துக்கொண் டிருந்த பல குடும்பங்களுக்கும் ஜனங்களுக்கும் பிழைப்பில்லாமல் போய்விடும். அவர் விரும்பி யிருந்தால் அவருடைய சொத்தில் ஒரு பெரும் பகுதியைத் தம் மனைவியின் பெயருக்கு ஒதுக்கி வைத்துவிட்டு அவ்வாபத்தி னின்றும் சுலபமாகத் தப்பியிருக்கலாம். ஆனால் பெருந்தன்மை யுள்ள அவருடைய மனம் அங்ஙனம் செய்ய இசையவில்லை.

சாத்தூரிலுள்ள பஞ்சு வியாபாரிகள் எல்லாம் கூடியிருக் கிறார்கள். சந்தநாதஞ் செட்டியார் கணக்கில் லக்ஷக்கணக்கில் பற்று விழுந்துவிட்டது. ஆபீஸ் துரை அவரை அழைத்துப் பணத்திற்கு எந்த வகையில் வழி செய்வதாக அவருடைய உத்தேசம் என்று கேட்டான். அதற்கு அவர் என்ன பதில் சொல்லப்போகிறார் என்று வியாபாரிகளெல்லாம் அவரையே மிகுந்த ஆவலுடன் பார்த்துக்கொண் டிருந்தார்கள். அவர்களில்

பலர் சந்தநாதஞ் செட்டியார் தூக்குப் போட்டுக்கொண்டு இறந்துவிடுவார் என்று நினைத்தார்கள். அவர்கள் எல்லோரும் ஆச்சரியப்படும்படி மிகுந்த கம்பீரத்துடன் சந்தநாதஞ் செட்டியார் எழுந்து நின்றார்; "துரையவர்கள் அனுமதி கொடுத்தால், என்னுடைய சொத்து முழுவதையும் உங்கள் கடனுக்காக ஈடு காட்டிவிட்டு, உடுத்திருக்கும் இந்த ஒற்றை வேஷ்டியுடன் சாத்தூரை விட்டு இன்றே போகத் தயார். அதில் எனக்குச் சிறிதும் கவலை யில்லை. இப்பொழுது நான் நஷ்டம் அடைந் திருக்கும் இந்த லக்ஷங்கள் அல்ல, இதற்கு மேலும் அநேக லக்ஷங்கள் சம்பாதிப்பேன் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இதனால் உங்களுடைய கடனில் ஒரு பாகங்கூடச் செல்வதா யில்லை என்பதுடன், என்னை நம்பியிருக்கும் கணக்கற்ற வியாபாரிகளின் கதி என்ன ஆகுமோ என்று நினைக்கும்போது தான் எனக்கு வருத்தமாக இருக்கிறது" என்று சொன்னார்.

இத்தகைய ஆபத்திலும் சிறிதேனும் மனந் தளராமல், தைரியமாகப் பேசிய சந்தநாதஞ் செட்டியாரைக் கண்டு, வெள்ளைக்காரத் துரைகூட மிகவும் வியந்தான். அவர் சாதாரண மனிதரல்ல, மற்ற வியாபாரிகளைப்போல் அவரையும் தான் மதித்தது தவறு என்று அவனுக்கு அப்பொழுதுதான் தெரிந்தது.

"உம்மை ஓட்டாண்டியாக்க வேண்டும் என்பது என் னுடைய நோக்கம் அல்ல. ஆயினும் இதற்கு ஏதாவது வழி கண்டுபிடித்தாக வேண்டும் அல்லவா?" என்றான் துரை.

"துரையவர்கள் மனம் வைத்தால், இந்த ஆபத்திலிருந்து எல்லோரும் தப்புவதற்கு ஒரு மார்க்கம் இருக்கிறது."

"தைரியமாய் அதைச் சொல்லும். உமக்காக நான் என்ன வேண்டுமானாலும் செய்யத் தயார்."

"துரையவர்கள் கிருபை கூர்ந்து எனக்கு மூன்றுமாதக் கெடு கொடுக்கவேண்டும். அந்த மூன்று மாதத்தில் ஒரு தடவைகூட இத்தொகையைப் பற்றிப் பிரஸ்தாபிக்கக் கூடாது.

அந்தத் தவணை முடிவதற்குள் நான் உங்களுக்குச் செலுத்த வேண்டிய கடன் தொகையை முழுவதையும் செலுத்திவிடு கிறேன். என்மீது நம்பிக்கை மட்டும் தங்களுக்கு இருக்குமானுல் தாராளமாக இதைச் செய்யலாம்'' என்ருர் சந்தநாதஞ் செட்டியார்.

தன்னுடைய கூரிய கண்களால் துரை ஒரு முறை செட்டியாரை உற்று நோக்கினுன். அவர் மோசம் செய்யக் கூடியவரல்ல என்று அவனுக்கு நிச்சயமாகத் தோன்றியது. அவர் கேட்ட மூன்று மாதத் தவணையை அளித்தான். அக் காலம் முடிவதற்குள் செட்டியார் முழுக் கடன் தொகையையும் செலுத்திவிட்டார். அந்த வருஷம் அந்த நஷ்டத்திற்கு மேல் அவருக்குக் கிடைத்த லாபம் மூன்று லக்ஷ ரூபாய்!

துரை ஒரு நாள் அவரைப் பார்த்து, "செட்டியாரே! நீர் சாதாரண மனிதரல்ல!'' என்ருன்.

இந்தச் சம்பவத்திற்குப் பின்பு சந்தநாதஞ் செட்டியாருடைய புகழ் சாத்தூரில் அதிகமாகப் பரவியது.

ஆனுல் செட்டியாருடைய புகழுக்கு அவர் சம்பாத்தியஞ் செய்யும் திறமை மட்டும் காரணமல்ல. பணம் சம்பாதிப்பதில் அவர் எவ்வளவு திறமை பெற்றிருந்தாரோ, அதைவிட அநேக மடங்கு அதிகமான சாமர்த்தியம் அதைச் செலவழிப்பதில் அடைந்திருந்தார்.

சந்தநாதஞ் செட்டியார் படித்த படிப்பெல்லாம், அவரே சொல்வதுபோல் பத்தரைத் துட்டுப் படிப்புத்தான். அவருக்குக் கல்வி கற்பித்த திண்ணைப் பள்ளிக்கூட உபாத்தியாயருக்கு அவர் கொடுத்த மொத்தச் சம்பளம் பத்தரைத் துட்டுத்தானும்! ஆனுல் அவருக்குத் தமிழ் அபிவிருத்தியிலும் கல்வி அபிவிருத்தி யிலும் அளவு கடந்த மோகம் இருந்தது. தம்முடைய சொந்தச் செலவில் அவர் ஓர் உயர்தரக் கலாசாலை நடத்திக்கொண் டிருந்தார். பஞ்சு வியாபாரத்தை நம்பிப் பள்ளிக்கூடம் நடத்துவது ஏறக்குறைய லாட்டரிச் சீட்டில் போட்ட பணத்தை

நம்பி நடத்துவதற்கு ஒப்பாகும். ஆயினும் பிறருடைய உதவி எதையும் எதிர்பாராமல் அந்தப் பள்ளிக்கூடத்தைக் கடைசி வரைக்கும் நடத்திக்கொண்டே வந்தார்.

தமிழ் அபிவிருத்திக்காகத் 'திருவள்ளுவர் சங்கம்' ஒன்றும் அவரால் நடத்தப்பட்டு வந்தது. அதில் வருஷந்தோறும் கூடும் வித்துவான்களுக்கும் புலவர்களுக்கும் அவர் செய்யும் மரியாதையும் சம்மானமும் பண்டைத் தமிழகத்துச் சிற்றரசர்களையும் வள்ளல்களையுமே ஞாபகமூட்டும். அன்னதானச் சத்திரம் ஒன்றும் அவர் பெயரால் நடந்துவந்தது.

இத்தகைய சீரும் சிறப்பும், பேரும் புகழும் படைத்திருந்த சந்தநாதஞ் செட்டியாருக்கு ஈசன் ஒரு விதத்தில் மட்டும் கிருபை செய்யவில்லை. பிள்ளையில்லாத குறைதான் அவருக்குப் பெருங் குறையாக இருந்தது. தம் குழந்தை என்று அன்பு செலுத்துவதற்கு ஒரு குழந்தை இல்லாததால்தானோ என்னவோ, அவ்வன்பு பேரன்பாய் விரிந்தது. அவர் காப்பாற்றிய அநாதைகள் அனந்தம். அவர் செய்துவைத்த தர்மக் கல்யாணங்கள் எண்ணில!

சந்தநாதஞ் செட்டியார் ஏதோ ஒரு ஜோலியாய் ஒரு தடவை திருமங்கலத்திற்குச் சென்றிருந்தார். சிற்றப்பாவை மிகுந்த உபசாரத்துடன் குப்புசாமி செட்டியார் வீட்டுக்குச் சாப்பிட அழைத்துச் சென்றார். தந்தையிடம் இருந்த மரியாதையைக் காட்டிலும், சிற்றப்பாவிடம் குப்புசாமி செட்டியாருக்கு அதிக மரியாதையும் பய பக்தியும் உண்டு. அதில் ஆச்சரியமும் இல்லை.

சாப்பிட்டுக்கொண் டிருக்கும்பொழுது, "எங்கடா குப்பு, பாஸ்கரனைக் காணோம்?" என்று சந்தநாதஞ் செட்டியார் கேட்டார்.

இந்தக் கேள்விக்குக் குப்புசாமி செட்டியார் சரியாகப் பதில் சொல்லவில்லை. "எங்காவது சுற்றிக்கொண் டிருப்பான்" என்று மென்று விழுங்கினார்.

விஷயங்களை வெகு விரைவில் புரிந்துகொள்ளும் இயல் புள்ளவர் சந்தநாதஞ் செட்டியார்.

"அவன் சாப்பிட்டுவிட்டானா?"

இனி விஷயத்தை மறைக்க முடியாது என்று குப்புசாமி செட்டியாருக்குத் தோன்றியது. "அவனுக்கு இப்பொழுது ஹோட்டலில்தான் சாப்பாடு" என்றார்.

"அவனுடைய படிப்பு எப்படி இருக்கிறது?"

"ஒழுங்காகப் பள்ளிக்கூடம் போகமாட்டேன் என்கிறான்."

"வெகு அழகாயிருக்கிறது, நீ பிள்ளை வளர்க்கிற லக்ஷணம்! பிள்ளை வளர்க்கத் திறமில்லாவிட்டால் பேசாமல் என்னிடம் கொண்டுவந்து விட்டுவிடவேண்டியதுதானே? நான் அங்கே அன்னதானமும் வித்தியா தானமும் செய்துகொண் டிருக்கிறேன். இங்கே குலத்துக்கு ஒரு பிள்ளை ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு ஊர் சுற்றிக்கொண் டிருக்கிறானாம்! என்னுடைய தர்மத்தின் அழகு நன்றாயிருக்கிறது!" என்று சந்தநாதஞ் செட்டியார் சீறினார்.

சாப்பிட்டுவிட்டு இருவரும் கடைக்குச் சென்றபோது பாஸ்கரன் அங்கே உட்கார்ந்திருந்தான். அவனுடைய முகத்தில் சிறிதேனும் களை இல்லை. மழை முகம் பாராச் செடி எப்படி இருக்கும்? அது போன்றவன்தானே தாய்முகம் பாராச் சேயும்?

"என்னுடன் சாத்தூருக்கு வருகிறாயாடா? கூட்டிக் கொண்டு செல்கிறேன்" என்றார் சந்தநாதஞ் செட்டியார்.

மாற்றாந்தாயின் கொடுமைகளினால் கூம்பியிருந்த அவனுடைய உள்ளம் மலர்ந்தது; "உம்" என்றான்.

பாஸ்கரனை வளர்க்கும் பொறுப்பு முழுவதையும் சந்தநாதஞ் செட்டியார் அன்று ஏற்றுக்கொண்டார்.

பாஸ்கரனுடைய அறைக்கு வந்த புதிய மனிதர் அவரிட மிருந்துதான் வருவதாகச் சொன்னார். எதற்காக?

அத்தியாயம் 3

# செயலும் சிந்தனையும்

பாஸ்கரனுடைய விருந்தினர் போய்விட்டார். அவர் சொன்ன விஷயங்கள் அவனுடைய மனத்தை மிகவும் அலேத்தன. அவனுக்கு ஒருவேலேயும் ஓடவில்லே. படிப்பிலோ விளேயாட்டிலோ கேளிக்கைகளிலோ மனம் செல்லவில்லே. அவர் கூறிய விஷயத்தைப்பற்றியே அவனுடைய மனம் சிந்திக்க ஆரம்பித்தது. வேண்டுமென்று அவன் அதைப்பற்றி யோசிக்க வில்லே. சாப்பிடும்போதும் படிக்கும்போதும், கல்லூரியில் பாடங்களேக் கவனித்துக்கொண் டிருக்கும்போதும், நண்பர் களுடன் பேசிக்கொண் டிருக்கும்போதும், நடக்கும்போதும், படுத்திருக்கும்போதும் அவனுடைய உள்ளம் அவனேயும் அறியாமல் அதையே நோக்கிச் சென்றது.

இது இப்படி இருக்க, அவனுடைய நண்பர்கள் அவனேக் கேலி பண்ண ஆரம்பித்தனர்.

"அடே! பாஸ்கரன் இன்னும் புறப்படவில்லேயா? அன்று அவருடன் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்த பொழுது, இவனும் ஊருக்குப் புறப்படுகிருன் என்றல்லவா நினேத்தேன்?" என்பான் ஒருவன்.

"முகூர்த்தத்திற்கு இன்னும் நாள் இருக்கிறது, ஐயா! அதற்குள்ளாகவா போகச் சொல்லுகிறீர்கள்?" என்பான் இன்னெருவன்.

"எங்களுக்கெல்லாம் அழைப்பு அனுப்புவீரா, இல்லேயா, ஐயா?" என்று கேட்பான் ஒருவன்.

"அழைப்பு அனுப்பினுலும் சரி, அனுப்பாவிட்டாலும் சரி; அதைப்பற்றிக் கவலேயில்லே. ஆனல் கல்யாணம் முடிந்து

வந்ததும் நமக்கு விருந்து மட்டும் அவசியம் வைத்துவிட வேண்டும்" என்பான் மற்றொருவன்.

"ஒருவருடைய பிரார்த்தனை இவ்வளவு சீக்கிரம் நிறைவேறும் என்று நான் கனவிலும் கருதவில்லை" என்பான் ஒருவன்.

"கடவுள் இல்லை என்று சொல்கிறார்களே, முழு மூடர்கள்!" என்று சொல்லிச் சிரிப்பான் வேறொருவன்.

"'கண்ணன் - என் கல்யாணத் தரகன்' என்று அவர் ஒரு பாட்டு எழுதியிருக்கிறாரே, நீர் பார்த்தீரா?"

"ஐயோ! அதைப் பாஸ்கரனுக்கே காட்ட வேண்டும். நான் போய் வாங்கிக்கொண்டு வருகிறேன்" என்று ஒருவன் ஓடுவான்.

நடந்த விஷயங்கள் முழுவதையும் அறிந்திருந்தால் அவர்கள் இவ்வளவு தூரம் பாஸ்கரனைக் கேலி செய்திருக்க மாட்டார்கள்.

பாஸ்கரனுடைய விருந்தினரின் பெயர் மாரியப்ப செட்டியார் என்பது. அவர் சொன்ன விஷயம் சுருக்கமாக இதுதான். அவருடைய மகளைப் பாஸ்கரனுக்குத் திருமணம் பேசி முகூர்த்தமும் நிச்சயமாகிவிட்டது. மாப்பிள்ளையை ஒரு தடவை பார்க்க வேண்டும் என்ற எண்ணத்துடனேயே அவர் சென்னைக்கு வந்திருந்தார்.

"மாப்பிள்ளையை நீங்கள் பார்க்க வேண்டும் என்று நினைத்தீர்களே; பெண்ணை நான் பார்க்க வேண்டும், அந்தப் பெண் என்னைப் பார்க்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கவில்லையா?" என்று பாஸ்கரன் அவரைக் கேட்டான்.

"அத்துடன் இன்னொரு விஷயம். ஜோஸ்யர்கள் எல்லாம் ஜாதகத்தைப் பார்த்துவிட்டுப் இந்தப் பெண்ணிற்கு இதுதான் மாப்பிள்ளை. இந்த மாப்பிள்ளைக்கு இதேதான் பெண். வேறு எங்கும் பார்க்கவே வேண்டாம் என்கிறார்கள். ஜாதகப் பொருத்தம் அவ்வளவு நன்றாக இருக்கிறது."

"ஜாதகப் பொருத்தம் மட்டிலும் இருந்தால் போதும் என்பது உங்கள் அபிப்பிராயமா?"

"பெண்ணைப்பற்றி நீங்கள் கொஞ்சங்கூட யோசிக்க வேண்டாம். என் மகளை நானே புகழ்ந்துகொள்ளக் கூடாது. அதெல்லாம் சாதாரணமாய் நம் வீட்டில் பிறக்கிற குழந்தை யல்ல. ராஜகுலத்தில் பிறக்க வேண்டியது. ஏதோ தவறுதலாய் நம்ம வீட்டில் பிறந்துவிட்டது."

"பெண்ணின் பெயர் என்ன?"

"ராஜேசுவரி!"

இதற்குப் பின் இருவரும் மௌனமாக இருந்தார்கள். சிறிது நேரத்திற்குப்பின் மாரியப்ப செட்டியார் மீண்டும் சொல்ல லுற்றார்: "பெண்ணைப்பற்றி நீங்கள் கவலைப்படவே வேண்டாம். பெண் நல்ல சிவப்பு. இதற்கு மேலும் நான் என்ன சொல்வது? என் பெண்ணைப்பற்றி நானே வர்ணிப்பது நன்றாக இருக்கிறதா? இன்னொரு விஷயம் மட்டும் நான் சொல்வேன். பெண்ணுடைய ஜாதகம் அதிருஷ்ட ஜாதகம். அவளுடைய அதிருஷ்டத்தால் உங்களுக்கு உயர்ந்த உத்தியோகம் வரும். எல்லா ஜோஸ்யர் களும் அப்படித்தான் சொல்கிறார்கள்."

"இவ்வளவு விஷயம் நடந்திருக்கிறது. என்னை ஒரு வார்த்தை கேட்கவில்லையே! எனக்கு நீங்கள் சொல்லித்தானே தகவல் தெரிகிறது? கல்யாணப் பத்திரிகை மட்டுந்தான் எனக்கு வருமோ?"

"உங்கள் சம்மதத்தைக் கேட்டிருக்கத்தான் வேண்டும். ஆனால் பெண்ணை வந்து பார்த்தவுடன் உங்கள் தாத்தாவுக்குப் பூரண திருப்தி ஏற்பட்டுவிட்டது. பையனைக் கேட்க வேண்டிய அவசியங்கூட இல்லை என்று நினைத்து உடனே முடிவு செய்து விட்டார். மேலும் உங்கள்மீது அவருக்கு ரொம்ப நல்ல அபிப்பிராயம். நீங்கள் அவர் சொல்லைத் தட்டவே மாட்டீர்கள் என்றும் சொன்னார். பெரியவர்கள் செய்வது பிள்ளைகள் நன்றாக

இருப்பதற்காகத்தான். சிறு வயசிலிருந்தே உங்களை வளர்த்தெடுத்து இவ்வளவு தூரம் படிக்க வைத்தவருக்கு நீங்கள் நன்றாக இருக்க வேண்டுமென்று ஆத்திரம் இருக்காதா? அவருக்கு இல்லாத ஆத்திரமா மற்றவர்களுக்கு இருக்கப் போகிறது?" என்று மாரியப்ப செட்டியார் சொன்னபோது, அதற்குமேல் பாஸ்கரனுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை. ஆயினும் அவன் மனம் முற்றும் சமாதானம் அடையவில்லை. 'இவர்கள் யார் என் கல்யாணத்தைப்பற்றித் தீர்மானிப்பதற்கு?' என்று நினைத்தான்.

சிறிது நேரத்திற்குப் பின், "பெண்ணிற்கு என்ன வயசாகிறது?" என்று கேட்டான்.

"மாசி மாதத்தோடு பதின்மூன்று நிறைகிறது."

"அதற்குள் என் இப்படி அவசரப்பட்டுக் கல்யாணம் செய்கிறீர்கள்?"

"சாரதாச் சட்டம் வரப் போகிறதென்று சொல்கிறார்களே; அதற்காகத்தான்."

"ஓஹோ!"

இதற்கு அப்புறம் சம்பாஷணையை மேலும் நடத்த வேண்டிய அவசியம் இருப்பதாகப் பாஸ்கரனுக்குத் தோன்றவில்லை. மாரியப்ப செட்டியாருக்கு அவன் செய்த உபசாரங்களில் ஒரு குறைவும் இல்லை. அவர் வந்ததற்கு மறுதினம் கல்லூரிக்கு ரஜா எழுதிக் கொடுத்துவிட்டு, அவரைச் சென்னையிலுள்ள பல இடங்களுக்குக் கூட்டிச் சென்று காண்பித்தான். கடைசியில் அன்றிரவு அவர் ஊருக்குச் சென்றபோது அவருடன் ரெயில் நிலையத்திற்குச் சென்று அவரை வண்டியேற்றி அனுப்பிவிட்டே திரும்பினான்.

இதையெல்லாம் கண்டபோது, மாரியப்ப செட்டியாருக்கு வெகு சந்தோஷம். மாப்பிள்ளையையும் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. தம்முடைய புத்திரியின் விவாகம் ஏறக்குறைய

முடிந்துவிட்டதாகவே எண்ணி அவர் மனம் பூரித்தார். தமக்கு இவ்வளவு நல்ல சம்பந்தம் கிடைக்கும் என்று அவர் கனவிலும் கருதவில்லை. ஆகையால் அவர் மிக்க சந்தோஷத்துடன் ரெயிலில் சென்றுகொண் டிருந்தார். ஆனால் அதே சமயம் பாஸ்கரன் என்ன தீர்மானத்துடன் தன்னுடைய அறைக்குத் திரும்பினான் என்பதை அவர் அறிந்திருந்தால், அவர் அத்தனை சந்தோஷப்பட்டிருக்க மாட்டார்.

பாஸ்கரன் அறைக்குத் திரும்பியதும் தன்னுடைய தாத்தாவுக்கு ஒரு நீண்ட கடிதம் எழுத ஆரம்பித்தான். கல்யாணம் நடக்காதவாறு நிறுத்திவிட வேண்டுமென்பது அவனுடைய தீர்மானம். அக்கடிதத்தில் பால்ய விவாகத்தின் கொடுமைகளெல்லாம் விரிவாக விவரிக்கப்பட்டன. வேதங் களிலும் சாஸ்திரங்களிலும் பால்ய விவாகத்திற்கு ஆதரவு இல்லையென்றும் பிற்காலத்தில் இந்தியாவில் அந்நியர் வந்த போது அது ஹிந்து மதத்தில் புகுந்த கெட்ட பழக்கமென்றும், இப்பொழுது அதற்கு அவசியமில்லை என்றும், அநாவசியமான ஒரு வழக்கத்தை அர்த்தமில்லாமல் அனுஷ்டிப்பது மூடத்தனம் என்றும், பால்ய விவாகம் ஹிந்து மதத்தில் ஆதியில் இல்லை என்பதற்கு நம்முடைய கல்யாணச் சடங்குகளிலேயே பல ஆதாரங்கள் இருக்கின்றன என்றும் அக்கடிதத்தில் விவரித் திருந்தான். மேலும் கல்யாணம் என்பது ஒரு புனிதமான சம்பந்தம் என்றும், அது ஒரு நாள் இரண்டு நாளோடு அறுந்து போகக் கூடியது அன்று என்றும், அத்தகைய காரியத்தை அது சம்பந்தப்பட்டவர்கள் சம்மதமின்றி, அவர்களுக்குத் தெரிவிக்கா மலுங்கூடச் செய்வது தகாதென்றும் எழுதியிருந்தான். இவ் வளவு முக்கியமான விஷயத்தைத் தீர யோசியாமல் தீர்மானித்தது தவறு என்று சொல்லி, திருக்குறளிலிருந்து,

“எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு.”

என்று அதற்கு ஒரு மேற்கோளும் காட்டப்பட்டிருந்தது. மேலும் அவன் தானாகவே தன்னுடைய குடும்பத்தைக்

காப்பாற்றும் நிலைமையில் இருந்தால் ஒழியக் கல்யாணத்திற்கு ஒருபோதும் சம்மதிக்க முடியாது என்பதையும் கூறியிருந்தான். கடைசியில்,

"'பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையினனே'

என்பது பாஷைக்கு மட்டுமல்ல, பழக்க வழக்கங்களுக்கும் பொருந்தும். ஆகையினால் பழமையைக் கழிப்பதற்கு அஞ்சுதல் அறிவுடையோர் செயலாகாது" என்று கடிதத்தை முடித்திருந்தான்.)

கடிதத்தை முடித்துவிட்டு, ஒரு முறை இரு முறை அதைப் பாஸ்கரன் வாசித்துப் பார்த்தான். மீண்டும் மீண்டும் அதை வாசிக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றியது. தான் அவ்வளவு அழகாய்க் கடிதம் எழுதியிருப்பதை நினைத்து அவன் உள்ளம் பூரித்தான். அந்தக் கடிதத்தினுடைய பாஷை நயம், கருத்து நயம், மேற்கோள்களின் அழகு, அவனுடைய சீர்திருத்த மனப்பான்மை இவைகளை எல்லாம் கண்டு, அவனுடைய தாத்தா உட்பட யாவரும் அவனை மெச்சுவார்கள் என்று நினைத்தான். மாரியப்ப செட்டியாருக்கும் அக்கடிதம் காட்டப்படும். அக் கடிதத்தை வாசித்துப் பார்த்ததும், அவரும் மனம் மாறுதலடைந்து, தம் பெண்ணுக்கு வயசு வந்த பிறகே கல்யாணம் செய்துகொடுப்பது என்று தீர்மானிப்பார். இவ்விதம் | தன் சமூகத்தையே சீர்திருத்துவதற்கு அக்கடிதம் ஒரு சாதனமாயிருக்கப்போகிறது | என்று நினைத்துக்கொண்டே அவ்வுணர்ச்சி வெள்ளத்திலேயே, அதைத் தபாலில் சேர்த்துவிட்டுத்தான் மறு வேலை பார்க்க வேண்டும் என்று அவ்விரவே அதைக் கொண்டு போய்த் தபால் பெட்டியில் போட்டுவிட்டான்.

காலையில் படுக்கையை விட்டு எழுந்திருந்தபோது அவனுடைய மனப்பான்மை வேறு விதமாக இருந்தது. அப்பொழுது அக்கடிதம் அவனிடம் இருந்ததென்றால் அதைத் தபாலில் சேர்த்திருக்கமாட்டான். சுக்கு நூறாய்க் கிழித்து

எறிந்திருப்பான். என்ன முட்டாள்தனமான கடிதம்! உலகத்தி லுள்ள அனைவரும் முட்டாள்கள். அவன் ஒருவன்தான் கெட்டிக்காரன் என்றல்லவா அக்கடிதம் தொனித்தது. தாத்தா வினுடைய ஆழ்ந்த தமிழறிவும் அனுபவ ஞானமும் எங்கே? அவ னுடைய புத்தகப் படிப்பு எங்கே? அவனுடைய கல்யாணத்தைத் தீர்மானித்து விட்டார்கள் என்பதுதான் என்ன நிச்சயம்? முன் பின் அறியாத யாரோ ஒருவர் வந்து சொன்னதை வைத்துக்கொண்டு இவ்வளவு அவசரப்பட்டு, அத்தகைய கடிதம் எழுதியது சரியா? முழு விஷயத்தையும் அவன் அறிந்துகொண்டானா? முழு விவரமும் அவனுக்குத் தெரிவிக்கப் பட்டிருக்குமா? அவனுடைய தாத்தாவிடமிருந்து கடிதம் வரும் வரைக்கும் அவன் காத்திருந்தால் நலமல்லவா? தபால் பெட்டியிலிருந்து அக்கடிதத்தைத் திரும்பப் பெற முடிந்திருக்கு மாயின், அவன் மிக்க சந்தோஷம் அடைந்திருப்பான். ஆனால் அது எப்படி முடியும்?

அக்கடிதம் என்ன என்ன விபரீதங்களை விளைவிக்கப் போகிறதோ? தாத்தாவினுடைய கருணையை அல்லவா அவ னுடைய படிப்பு, வாழ்க்கை எல்லாம் பொறுத்திருக்கின்றன? இக்கடிதம் அவருடைய மனத்தை என்ன என்ன விதங்களில் வாதனை செய்யப்போகிறதோ?

பாஸ்கரன் இன்னும் அவனுடைய உள்ளத்தை ஆராய்ந்து பார்த்தானாகில் அவனுடைய பச்சாத்தாபத்திற்கு இவை மட்டும் காரணங்களல்ல என்பது தெரிய வரும். 'ராஜேசுவரி!' எவ்வளவு அழகான பெயர். பெயருக்கு ஏற்ற அழகியாக இருப் பாளோ அவள்! மாரியப்ப செட்டியார் பெண்ணைப்பற்றிக் கூறிய விஷயங்களெல்லாம் அவனுக்கு ஞாபகம் வந்தன. 'நல்ல சிவப்பு! இந்த மாதிரிக் குழந்தை சாதாரணமாக நம்ம வீட்டில் பிறக்கக் கூடியதல்ல. ராஜகுலத்தில் பிறக்கவேண்டியது. தவறிப் பிறந்து விட்டது' என்ற வார்த்தைகள் மீண்டும் மீண்டும் அவனுடைய மனத்தில் தோன்றின. 'பெண்ணைப் பார்த்தவுடன் என்னைக் கேட்கவேண்டிய அவசியங்கூட இல்லை என்று உடனே

தாத்தா முகூர்த்தத்தை நிச்சயித்து விட்டாராமே. எப்பேர்ப் பட்ட பெண்ணே?' என்று அவன் மனம் ஏங்கியது. 'பால்யப் பெண்ணுயிருந்தால்தான் என்ன? இன்னும் இரண்டொரு வருஷங்களில் பெரியவள் ஆகிவிடுகிருள்! ஓர் அழகான பெண்ணை மணக்கும் சந்தர்ப்பத்தை அக்கடிதம் கெடுத்துவிடுமோ? ஐயோ? நாசமாய்ப்போன கடிதம்! நாசமாய்ப்போன அவசரம்! என்ன கொள்ளை போகிறதென்று இரவோடு இரவாகக் கடிதத்தைத் தபாலில் சேர்த்தேன்!' என்று அவன் மனம் நொந்தான்.

"எண்ணித் துணிக கருமம்; துணிந்தபின்
எண்ணுவம் என்பது இழுக்கு"

என்ற திருக்குறள் அப்பொழுது அவனுக்கு ஞாபகம் வந்தது!

"என்ன பாஸ்கரன், என்னுடைய பிரார்த்தனை நிறை வேறுமா? அது நிறைவேறுவதற்குச் சந்தர்ப்பம் இருக்கிறதா?" என்று கேட்டுக்கொண்டே அவனுடைய நண்பன் அறைக்குள் நுழைந்தான்.

அந்தக் கேள்விக்குப் பாஸ்கரனுடைய வாய் ஒரு பதிலும் சொல்லவில்லை. "அது நிறைவேற வேண்டும் என்பது உன்னுடைய பிரார்த்தனை மட்டும் அல்ல; என்னுடைய பிரார்த் தனையுந்தான்!" என்று அவனுடைய உள்ளம் மௌனமாய்ப் பதில் கூறியது!

## அத்தியாயம் 4

# மாப்பிள்ளை எப்படி?

மாரியப்ப செட்டியார் சென்னைக்குச் சென்று இரண்டு நாட்கள் ஆகிவிட்டன. அவருடைய மனைவியும் மக்களும் அவருடைய வரவை வெகு ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண் டிருந்தார்கள். அவருக்கு ராஜேசுவரியைத் தவிர ஜயலக்ஷ்மி என்ற வேறு ஒரு புதல்வியும் உண்டு. அவளுக்குச் சுமார் பன்னிரண்டு வயசு இருக்கும்.

எல்லோரும் மாப்பிள்ளையைப்பற்றிய விஷயங்களை அறி வதற்கு மிக்க ஆத்திரத்துடன் இருந்தனர். தந்தை வருகிறாரா என்று பெண்களும், கணவர் வருகிறாரா என்று மனைவியும் அடிக்கடி வாசலை எட்டிப் பார்த்த வண்ணமாகவே இருந்தார் கள். அவர் அன்று காலை வண்டிக்கு வருவார் என்று அவர்கள் எதிர்பார்த்தனர். மற்ற இருவரும் சகஜமாய் எட்டிப் பார்த்த போதிலும் ராஜேசுவரி மட்டும், "கீரைக்காரி வருகிறாளா என்று பார்க்கிறேன்; பால்காரியைப் பார்க்கிறேன்; தயிர்க் காரியைப் பார்க்கிறேன்" என்று வேறு ஏதாவது சாக்குச் சொல்லியே பார்த்துக்கொண் டிருந்தாள். ஒரு தடவை அவள் அப்படிப் பார்த்துக்கொண் டிருந்தபோது ஜயலக்ஷ்மி சத்த மில்லாமல் அவளுக்குப் பின்னால் வந்து, "நமக்குப் பால்காரி மதராசிலிருந்து வருவதில்லை அக்கா! அவள் இந்தப் பக்கமிருந் தல்லவா வருவாள்? நீ ஏன் அந்தத் திசையைக் கவனிக்கிறாய்?" என்று சொல்லிச் சிரித்தாள். அவள் மிகவும் துடியான பெண்.

'சரி, இன்றைக்கும் ஏனோ வரவில்லை' என்று வீட்டில் உள்ளவர்களெல்லாம் ஆத்திர உணர்ச்சி நீங்கி, அவரவர் களுடைய காரியத்தில் ஈடுபட ஆரம்பித்தபொழுது, மாரியப்ப

செட்டியார் வீட்டிற்குள் வந்து நுழைந்தார். அன்று வண்டி வரச் சிறிது தாமதமாகிவிட்டது. எல்லோரும் மிக்க ஆர்வத்துடனும், சந்தோஷத்துடனும் அவருடைய முகத்தைக் கவனித்தார்கள்.

செட்டியார் தாம் கொண்டுவந்த சாமான்களை எல்லாம் ஓர் ஓரமாக வைத்துவிட்டுத் தாழ்வாரத்தில் உட்கார்ந்தார். வேறு சமயமாயிருந்தால், மனைவியும் மக்களும் அவர் சென்னையிலிருந்து என்ன என்ன சாமான்கள் வாங்கி வந்திருக்கிறார் என்று பார்ப்பதிலேயே ஆத்திர முள்ளவர்களாக இருந்திருப்பார்கள். ஆனால் அன்று அவைகளை ஒருவரும் தீண்டவில்லை. சிறு பெண்ணாகிய ஜயலக்ஷ்மிக்குக்கூட அவைகளின்மீது கவனம் செல்லவில்லை. அவைகளைவிட அதிக இன்பம் கொடுக்கக் கூடிய மற்றொரு விஷயம் அவரிடம் இருந்தது. அதை இன்னும் அவர் வெளியில் எடுத்து வைக்கவில்லை!

விஷயம் தெரியாதவர்களுக்குத்தான் அது என்னவோ, ஏதோ, அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமே என்ற ஆத்திரம். விஷயம் தெரிந்திருப்பவர்களுக்கு 'நமக்கு எல்லாம் தெரியும்' என்ற பெருமிதந்தான் இருக்கும். அதை மற்றவர்களுக்குச் சொல்லவேண்டும் என்ற ஆத்திரம் அவர்களுக்கு என்ன வந்தது? செட்டியார் பேசாமல் உட்கார்ந்திருந்தார். 'இவர்களாகக் கேட்கட்டுமே? இப்பொழுது என்ன அவசரம்? அப்புறம் சொல்லலாம்' என்பது அவருடைய எண்ணம்.

"போன சங்கதி என்னாச்சு, சொல்லுங்களேன்? ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கிறீர்கள்?" என்று சுப்பம்மாள் கேட்டாள்.

இம்மாதிரி சமயங்களில் விஷயம் அறிந்திருப்பவர்களுக்குச் சிறிது ஹாஸ்ய மனப்பான்மையும் உண்டாகி விடும். "ஏன் இப்படி அவசரப்படுகிறீர்கள்? நானாய்த்தான் சொல்வேனே. பெண்களுக்கு இந்த நகைப் பைத்தியம் பெரும் பைத்தியமப்பா? மதராஸ் முழுவதும் தேடிப் பார்த்தேன்.

கிடைக்கவில்லை. நீ கேட்டமாதிரி வைர மூக்குத்தி சென்னைக் கடைகளில் காணோம். பேசாமல் சுந்தரஞ் செட்டியார் கடையில் இருப்பதை வாங்கவேண்டியதுதான்'' என்றார்.

''உங்களுக்கு எகத்தாளமாயிருக்குது. மாப்பிள்ளையைப் பார்க்கப் போனீர்களே; நல்ல பிள்ளைதானா? எப்படி? பார்த்தீர்களா? என்று கேட்டால் நீங்கள் கேலி பண்ணுகிறீர்கள்.''

''உனக்குப் பிரியமான ஆஸ்டிரேலியன் திராக்ஷை வாங்கி வந்திருக்கிறேன் அம்மா! அந்தக் கூடையில் இருக்கிறது. எடுத்துக்கொள்'' என்று செட்டியார் புன்முறுவலுடன் ராஜேசுவரியை நோக்கிச் சொன்னார்.

''நான் இன்னும் பல் விளக்கவில்லை'' என்று சற்றுக் கோபமாகவே பதிலளித்துவிட்டுத் தனக்கு அவர் சொல்லப் போவதில் கொஞ்சங்கூட அக்கறை இல்லாதவள்போல் இன்னொரு பக்கம் திரும்பிக்கொண் டிருந்தாள் ராஜேசுவரி.

''போ அம்மா, போய்ப் பல்லை விளக்கிவிட்டு வா. இன்னும் ஏன் பல் விளக்காமல் இருக்கிறாய்? இப்படிப் பல் விளக்காத பெண்ணைப் பட்டணம் மாப்பிள்ளை எப்படிக் கட்டிக்கொள்வார்?'' என்று மாரியப்ப செட்டியார் சிரித்துக்கொண்டே கேட்டார்.

இந்தச் சமயம் தற்செயலாக ராஜேசுவரியின் ரவிக்கை ஒன்றை எடுத்து ஜயலக்ஷ்மி என்னவோ செய்துகொண் டிருந்தாள். அதைப் பார்த்ததும் ராஜேசுவரி போய் அவளுடைய தலையில் ஓர் அடி அடித்து, ''என் ரவிக்கையை நீ ஏண்டி எடுக்கிறவள்?'' என்றாள்.

''உன் மாப்பிள்ளை கறுப்பா சிவப்பா என்று அவர் சொல்லாவிட்டால் அவரைப் போய்க் கடி. என்னை ஏன் அடிக்கிறாய்?'' என்று ஜயலக்ஷ்மி அவளைக் கேட்டாள். பின்பு தந்தையை நோக்கி, ''நீங்களும் ஏன் இப்படி வம்பு பண்ணி எனக்கு அடி வாங்கிக் கொடுக்கிறீர்கள்?'' என்றாள்.

"வீட்டை ரணகளமாக்கிவிட்டுத்தான் சொல்வார். லேசில் அவர் சொல்வாரா?" என்ருள் சுப்பம்மாள்.

"சரி, சொல்கிறேன்; கேளுங்கள்" என்று மாரியப்ப செட்டியார் ஆரம்பித்து, தாம் போய் வந்த விஷயத்தை எல்லாம் விவரமாகச் சொன்னுர்.

"மாப்பிள்ளை தங்கமான குணம் என்கிருர்கள். நீங்கள் அவர் சீட்டு விளையாடிக்கொண் டிருந்ததாகச் சொல்கிறீர்களே!" என்று சுப்பம்மாள் கேட்டாள்.

"சீட்டு விளையாடினுல் என்ன? பொழுது போக்குக்காக எல்லோரும் விளையாடுவதுதான். மாப்பிள்ளையின் ஒழுக்கம், பழக்கம், குணம் எல்லாம் நன்ருய்த்தாம் இருக்கின்றன."

"அவர் தாம் விளையாடிக்கொண் டிருந்தார். போனது போகுமுன் நீங்களும் ஏன் சீட்டில் உட்கார்ந்தீர்கள்? உங்களைப் பற்றி அவர் என்ன அபிப்பிராயம் கொள்வார்?"

"அவரைப்பற்றி நாம் என்ன அபிப்பிராயம் கொண்டிருக்கிருேம்?"

"என்ன இருந்தாலும் உங்களுக்கு இவ்வளவு ஆகாது. மாப்பிள்ளை பார்க்கப் போனவர், அவரோடு சீட்டு விளையாடி விட்டு வருவீர்களாக்கும்?"

"ராஜேசுவரி ஆவலாய் எதிர்பார்த்துக்கொண் டிருந்த விஷயம் இன்னும் வரவில்லை. சிறிது நேரத்திற்குப் பிறகு சுப்பம்மாள், "மாப்பிள்ளை கறுப்பா? சிவப்பா? எப்படி இருக்கிருர்?" என்று கேட்டாள்.

"சிவப்பென்று சொல்லமுடியாது. மா நிறந்தான். இருந்தாலும் நல்ல லக்ஷணமான முகம். நல்ல லக்ஷ்மீகரம் பொருந்திருக்கிறது. அதில் எல்லாம் ஒரு குறையும் இல்லை. நம் ராஜேசுவரிக்கு ஏற்ற மாப்பிள்ளைதான்."

"இனி அக்கா பல் தேய்க்கப் போய்விடுவாள், வேண்டுமென்ருலும் பாருங்களேன்" என்று சொல்லி ஜயலக்ஷ்மி சிரித்தாள்.

"போடி கழுதை! உன்னைக் கேட்டுத்தான் பல் தேய்ப்பதும், தேய்க்காததும்" என்ருள் ராஜேசுவரி.

"போம்மா, போய் பல் தேய்த்துவிட்டு வா. உனக்கு ஒரு சாமான் வைத்திருக்கிறேன்" என்ருர் மாரியப்ப செட்டியார்.

"மாப்பிள்ளை கலகலப்பாய்ப் பேசுகிருரா?"

"அவ்வளவு கலகலப்பாக இருப்பதாகச் சொல்ல முடியாது. கொஞ்சம் அடக்கமான ஆசாமிதான்."

"அவருக்கு ராஜேசுவரியைக் கல்யாணம் செய்துகொள்ளச் சம்மதந்தானே?"

"கிடைக்கவேணுமே, இவ்வளவு அழகான பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளும் பாக்கியம். மாப்பிள்ளை அதிருஷ்டக்காரர்தாம்."

"அதை மட்டும் சொல்லாதீர்கள். நமக்கும் இந்தச் சம்பந்தம் கிடைத்தது நம்முடைய பூர்வ ஜன்ம புண்ணியந்தான்."

"நான் இல்லை என்ரு சொல்கிறேன்? ராஜேசுவரி அதிருஷ்டக்காரிதான்!" என்று உள்ளப் பூரிப்புடன் மாரியப்ப செட்டியயர் சொன்னர்.

இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கும்போது ராஜேசுவரி பல் தேய்த்துவிட்டு வரவே, கூடையிலிருந்து முதலாவது மஞ்சள், குங்குமம், புஷ்பம் இவைகளை எடுத்து அவளிடம் கொடுத்து, "குங்குமமிட்டுப் பூ வைத்துக்கொள் அம்மா! கந்தசாமி கோயிலில் அர்ச்சனை செய்தது" என்ருர்.

சுப்பம்மாள் அவைகளை வாங்கி, தன் குல தெய்வத்தை வணங்கி ராஜேசுவரிக்குப் பொட்டிட்டுப் பூ வைத்தாள். அப்பொழுது அவளுடைய முகம் உள்ளப் பூரிப்பால் பூர்ண சந்திரன்போல் பிரகாசித்தது. தந்தை கொண்டுவந்திருந்த சாமான்களின்மீது இப்பொழுதுதான் ராஜேசுவரியின் கவனம் சென்றது. கூடையைப் போய்ப் பார்த்தபோது, திராக்ஷைப் பழங்கள் ஏறக்குறையக் காலியாகியிருந்தன.

"எனக்கு எங்கேயடி திராக்ஷைப் பழம்?"

"உனக்கென்ன அக்கா இனிக் கவலை? மதராஸ் மாப்பிள்ளையைக் கல்யாணம் செய்து கொள்ளப்போகிறாய். அவன் வரும் போதெல்லாம் கூடை கூடையாகப் பழங்கள் வாங்கிக்கொண்டு வருவான். என் பாட்டைச் சொல். சாரதா சட்டமோ வரப் போகிறது. இன்னும் இரண்டு மூன்று வருஷங்களுக்காவது என்னைக் கவனிப்பார் ஒருவரும் இருக்கமாட்டார்கள். நான் என்ன செய்வேன்? கிடைக்கும்போதே என் ஆசையைத் தீர்த்துக்கொள்ள வேண்டியதுதானே?"

"என்னடீ, மட்டு மரியாதை இல்லாமல் அவன் இவன் என்று?"

"அடி அம்மா! சூதாடிக்காரப் பயல் மாப்பிள்ளையாகக் கிடைத்திருக்கும் பொழுதே இந்தப் பாடாய் இருக்கிறது! இனி நல்ல மாப்பிள்ளை வாய்த்துவிட்டாளோ, இவளைப் பிடிக்க ஒருவராலும் முடியாது!" என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே, ஜயலக்ஷ்மி மாடிக்கு ஓடிவிட்டாள்.

ராஜேசுவரிக்கு உண்மையில் அன்று திராக்ஷைப் பழம் வேண்டியிருக்கவில்லை. அவளும் மாடிக்குச் சென்று, கட்டிலில் படுத்துக்கொண்டு தனக்கு வரப்போகும் கணவன் எப்படி இருப்பான், தன்னுடன் என்ன என்ன பேசுவான், தன்னுடன் எப்படிக் கொஞ்சுவான், குலாவுவான் என்று பகற்கனவு காண ஆரம்பித்தாள்.

அவளுடைய நடை, உடை, பாவனை எல்லாம் மாறி விட்டன. அவள் செய்வது எல்லாவற்றிலும் ஒரு புதுத் தேஜஸ், புது அழகு, காணப்பட்டது. அவள் செயல்களை எல்லாம் பார்த்து ஜயலக்ஷ்மி அவளைப் பல விதங்களிலும் கேலி பண்ண ஆரம்பித்தாள்.

"இங்கிலீஷ் படித்த மாப்பிள்ளை கிடைக்கப் போகிறான் என்று இப்பொழுதே இந்த நடை நடந்து இந்த உடை உடுக்

கிறாளே! கல்யாணம் ஆகிவிட்டதென்றால் நம்மால் எல்லாம் இந்த வீட்டில் இருக்க முடியாது'' என்பாள்.

ஜயலக்ஷ்மி மட்டும் அல்ல; எல்லோருமே அவளைக் கேலி செய்ய ஆரம்பித்தார்கள். ஒரு நாள் குழாயடியில், "எண்டி, இங்கிலீஷ் படித்த மாப்பிள்ளைக்கு வாழ்க்கைப் படப் போகிறாய் என்று எவ்வளவு ஒய்யாரமாக நடக்கிறாய்?'' என்றாள் ஒருத்தி. ராஜேசுவரி பதில் சொல்லவில்லை.

"தாலுகா குமாஸ்தாவைக் கல்யாணம் பண்ணியிருக்கிற தனாலேதான் உங்கள் அக்கா அந்தப் பார்வை பார்க்கிறாள்?'' என்று ஜயலக்ஷ்மி அவளுக்குப் பதிலளித்தாள்.

"அவளைச் சொன்னால் உனக்கேனடி இப்படிச் சுருக் கென்று குத்துகிறது?''

"நானும் உங்கள் அக்காளைப்பற்றித்தானே சொன்னேன்? உனக்கேன் இத்தனை கோபம் வருகிறது?'' என்றாள் ஜயலக்ஷ்மி.

இப்படி மாரியப்ப செட்டியார் வீட்டில் எல்லோரும் குதூகலமாக இருக்கும்பொழுது, ஒரு நாள் காலையில் தபால் காரன் செட்டியார் கையில் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுப் போனான். அவன் கொடுத்தது கடிதமா? ஒரு வெடி குண்டல்லவா! அதில் பாஸ்கரன் தன்னுடைய தாத்தாவுக்கு எழுதிய கடிதமும் இருந்தது!

## அத்தியாயம் 5

# ஏமாற்றம்

தான் எழுதின கடிதத்தின் பலன் என்ன என்ன ஆகுமோ என்று பலவிதமாக எண்ணிப் பாஸ்கரன் மனம் உழன்ருன். அவனுடைய தாத்தா அந்தக் கடிதத்தைப் பார்த்து என்ன நினைப்பார்? அவருடைய மனம் என்ன பாடுபடும்? பாஸ்கரனை அவர் எடுத்து வளர்த்து அத்தனை தூரம் படிக்க வைத்து நல்ல பெண்ணைப் பார்த்துக் கல்யாணமும் செய்து வைக்க முயன்றதற்கு அவருக்குக் கிடைத்த கைம்மாறு அது தாஞ? அவருடைய மனம் நோகச் செய்ததை எண்ணி எண்ணிப் பாஸ்கரன் மிகவும் வருந்திஞன்.

அக்கடிதம் அவனுக்கு இன்ஞெரு வகையிலும் தீங்கை இழைத்திருக்கிறதல்லவா? அதைப் பற்றியும் அவன் எண்ணுமல் இல்லை.

அற்புதங்கள் நிகழும் காலம் இன்னும் ஓயவில்லை என்று சொல்கிருர்களே. அந்தக் கடிதம் அவனுடைய தாத்தாவுக்குப் போய்ச் சேராமல் ஏதாவது அற்புதத்தால் திரும்பி வந்துவிடக் கூடாதா? விலாசம் எழுதப்படாததால், அம்மாதிரி பல கடிதங்கள் அவனுக்குத் திரும்பி வந்திருக்கின்றன. ஆஞல் இந்தக் கடிதம்!

அவனுடைய ஆத்திரத்தில் என்ன என்னவோ யோசனைகள் எல்லாம் தோன்றின. அவனுடைய தாத்தாவின் கடையிலுள்ள ஒரு சிறுவன் கடைக்கு வரும் தபால்களை எல்லாம் வாங்குவதற்காகத் தபால் ஆபீசுக்குப் போவது வழக்கம். 'அந்தப் பையனுக்குக் கடிதம் எழுதலாமா, தந்தி அடிக்கலாமா?' என்றெல்லாம் பாஸ்கரன் நினைத்தான். ஆஞல் அதற்கெல்லாம் காலதாமதம் ஆகிவிட்டது!

ஒவ்வொரு தபாலிலும் தன் கடிதத்திற்குப் பதில் வரு மென்று எதிர்பார்த்தான். 'தாத்தா என்ன பதில் எழுதுவார்?' அவனை நன்ருய்த் திட்டுவார். கோபிப்பார். அவர் வைராக் கியமுள்ளவர். சொன்ன சொல்லை எப்படியும் காப்பாற்றியே தீருவார். பேசின பேச்சுக்கு எப்பொழுதும் மறு பேச்சுப் பேசாதவர். தாம் முகூர்த்தம் வைத்தபின் அந்தக் கல்யாணம் நடக்காமல் இருக்கக் கூடாதென்று அவனைச் சம்மதிக்க வைப்ப தற்காகக் கடிதம் எழுதுவாரா? அப்படி எழுதினுல் எவ்வளவு நன்ருயிருக்கும்! அப்படி எழுதமாட்டாரா என்று அவன் மனம் ஏங்கியது. அவனுடைய மனத்தை மாற்றுவதற்கு யாரையாவது அனுப்புவரா? அவரே நேரில் ஒருவேளை வந்தாலும் வருவாரோ?

இப்படி எதிர் பாராதது ஏதாவது நடக்காதா என்று அவனுடைய உள்ளம் துடித்துக்கொண் டிருந்தது.

அல்லது அவருடைய கோபத்தில், 'நீ படித்தது போதும். ஊருக்கு உடனே திரும்பு' என்று கடிதம் எழுதி விடுவாரோ? அப்படி அவர் எழுதினுல் அவன் என்ன செய்ய முடியும்? அவன் படிப்பு என்ன ஆவது? ஷேக்ஸ்பியர் ஆக வேண்டும் என்று அவன் கண்ட கனவுகள் எல்லாம் என்ன ஆகும்?

இவைகளுக்கிடையில் வேருேர் எண்ணமும் அவனுடைய மனத்தில் ஊசலாடியது. 'மாரியப்ப செட்டியார் வர்ணித்த அவருடைய மகள்! ஆஹா! என்ன அழகான பெயர்! ராஜேசுவரி! பெயருக்கு ஏற்ற அழகியாக இருப்பாளோ!' அவனுடைய கைமீது விழவிருந்த கனி தவறிவிட்டது. ஐயோ! இதென்ன? அவளை இன்னும் கண்ணுல் பார்க்கக்கூட இல்லையே. அதற்குள் ஏன் இந்த ஏக்கம்? இதுவும் ஒருவிதக் காதலா?

இப்படி அவனுடைய மனம் சஞ்சலப்பட்டுக்கொண் டிருக் கையில், "ஸார், தபால்!" என்று தபால்காரன் ஒரு கடிதத்தைக் கொடுத்துவிட்டுச் சென்ருன். அதில் என்ன எழுதியிருக்கப் போகிறதோ ஏதோ என்று அவனுடைய நெஞ்சு 'திக்திக்' என்று

அடித்துக்கொண்டது. உறையைக் கிழிப்பதற்குக்கூட அவனுடைய கை நடுங்கியது. அதை உடைத்துக் கடிதத்தை வெளியில் எடுத்தான். அவனுடைய நண்பன் ராமசந்திரன் "அன்பார்ந்த பாஸ்கரா, என்னுடைய பிரார்த்தனை நிறைவேறுமா? எப்பொழுது நிறைவேறும்? உடனே பதில்" என்று சுருக்கமாக இரண்டே வரிகள் எழுதியிருந்தான்!

இதற்கு மறுநாள், "ஸார்! தந்தி!" என்று தந்திச் சேவகன் ஒரு தந்தியைப் பாஸ்கரனுக்குக் கொண்டுவந்தான். "படித்தது போதும். உடனே ஊருக்குப் புறப்பட்டு வா" என்றுதான் அதில் எழுதியிருக்கும் என்று பாஸ்கரன் நினைத்தான். ஆனால் அதில் அவன் எதிர் பார்த்ததற்கு விரோதமாகக் கீழ்வரும் விஷயம் எழுதப்பட் டிருந்தது. "நீங்கள் கல்யாணத்திற்குப் போகும்பொழுது எங்களைத் தயவு செய்து மறந்துவிடாதீர்கள். எங்களுக்குக் கட்டாயம் அழைப்பு அனுப்ப வேண்டும்" என்றிருந்தது. அதன்கீழ் ஹாஸ்டல் மாணவர்களில் இரண்டு மூன்றுபேர் கையெழுத்திட்டிருந்தனர்.

இதற்கப்புறம் அவன் கடிதங்களை எதிர்பார்ப்பதையே விட்டுவிட்டான். அந்த மாதம் அவனுக்குப் பணம் வருமோ வராதோ என்று பயந்துகொண் டிருந்தான். ஆனால் சில நாட்கள் தாமதித்து வந்து சேர்ந்தது. கூப்பனில் எப்பொழுதும் ஏதாவது விஷயம் எழுதப்பட் டிருக்கும். இந்தத் தடவை ஒன்றும் எழுதப்படவில்லை.

சில தினங்களுக்கப்புறம் அவனுக்கு ஒரு கடிதம் வந்தது. இப்பொழுதெல்லாம் அவனுக்குக் கடிதங்களைப் பிரிப்பதற்கே இஷ்டம் இருப்பதில்லை. ஆயினும் மனம் கேட்கிறதா? உறையைக் கிழித்துக் கடிதத்தை வெளியில் எடுத்தான். அது சந்தநாதஞ் செட்டியாரிடமிருந்து வந்திருக்கிறது! அதை ஆவலுடன் படித்தான். அவர் மறுதினம் சென்னைக்கு வருவதாக அதில் எழுதியிருந்தார். அதற்குமேல் வேறு எதுவும் அதில் இல்லை.

அவர் என்ன ஜோலியாக வருகிறுர்? முகூர்த்த தினத்திற்கு இன்னும் சில தினங்கள் இருந்தன. அவனுடைய மனத்தை மாற்றிக் கல்யாணத்திற்கு அழைத்துச் செல்வதற்காகத்தான் அவர் நேரில் வருகிறுரா? அவனுடைய மனம் கொஞ்சம் சாந்தியடையட்டும் என்றுதான் இவ்வளவு நாட்கள் காத்துக்கொண்டிருந்தாரா? சென்னையில் அவருக்கு வேறு என்ன ஜோலி இருக்க முடியும்?

பாஸ்கரன் எழும்பூர் ரெயில் நிலயத்திற்குச் சென்று தாத்தாவை வரவேற்ருன். ஒரு டாக்ஸியில் இருவரும் ஹாஸ்டல் வந்து சேர்ந்தனர். வழியில் இந்த விஷயத்தைப் பற்றி அவர் ஏதாவது பிரஸ்தாபிப்பார் என்று அவன் நினைத்தான். ஆனுல் அதைப்பற்றி ஒன்றும் அவர் பேசவில்லை. சாவகாசமாகப் பேசலாம் என்று நினைத்திருப்பாரோ?

ஸ்நானம், போஜனம் எல்லாம் முடிந்தன. அதற்கு அப்புறமும் சந்தநாதஞ் செட்டியார் இவ்விஷயத்தை எடுக்கவில்லை. சென்னையில் பல இடங்களுக்குக் கூட்டிச்செல்லும்படி பாஸ்கரனிடம் சொன்னுர். பாஸ்கரனும் அவர் சொன்ன இடங்களோடு இன்னும் அநேக இடங்களுக்கும் அவரை அழைத்துச் சென்று காட்டினுன். பாஸ்கரனுடன் எப்பொழுதும்போல் சகஜமாகவே பேசினுர். சென்னையில் அநேக காட்சிகளைக் கண்டு களித்தார். மிகவும் சந்தோஷமாகவே காணப்பட்டார். பாஸ்கரனுக்கு மட்டும் பூரண குதூகலம் இல்லை. தாத்தாவுடன் எப்பொழுதும்போல் பேசிப் பழகுவதற்கும் அவனுல் முடியவில்லை.

அவன் செய்தது தவறுதான். அதற்கு நாலு வசவு வைது அவர் அவனைக் கண்டித்தால் என்ன? ஏதாவது தண்டனை விதித்தால் என்ன? அவனுடைய படிப்பை நிறுத்தி, அவனை அவனுடைய தந்தையிடம் அனுப்பியிருந்தாலும், அது அப்பொழுது பாஸ்கரனுக்குப் பெருந் தண்டனையாகத் தோன்றியிராது. அதையுங்கூட அவன் சந்தோஷத்துடனேயே ஏற்றுக்கொண்டிருப்பான். ஆனுல் ஒன்றுமே ஏற்படாததுபோல்

அவனுடன் அவர் சகஜமாகப் பேசிப் பழகியது அவனைச் சித்திர வதை செய்வது போலிருந்தது.

அன்றிரவு படுக்கையில் படுத்திருக்கும்பொழுது, "பாஸ்கரா!" என்று சந்தநாதஞ் செட்டியார் கூப்பிட்டார். அந்த விஷயத்தைப் பற்றித்தான் ஏதோ சொல்லப் போகிறார் என்று நினைத்து, 'தாத்தா, நான் செய்ததெல்லாம் தப்பிதம். மன்னிக்க வேண்டும்' என்று சொல்லப் பாஸ்கரன் வாயெடுத்தான். ஆனால் உணர்ச்சி வேகத்தில், "தாத்தா!" என்ற சொல்லோடு அவன் தொண்டை அடைத்துக் கொண்டது.

"நீ எழுதிய கடிதத்தைப் பார்த்தேன்." இந்த வார்த்தைகளைக் கேட்டதும் பாஸ்கரனுடைய உடம்பு முழுவதும் ஒரு திகில் பரவியது.

"நீ எழுதியது சரியில்லை என்று முதலில் நினைத்தேன். ஆனால் பின்புதான் நீ எழுதியது முற்றும் சரி என்று எனக்கு விளங்கியது."

இதென்ன விபரீதம்! பாஸ்கரன் எழுதிய கடிதத்திலும், அது எழுதப்பட்ட முறையிலும் தவறு ஒன்றும் இல்லையா? 'நெற்றிக்கண் திறந்தாலும் குற்றங் குற்றமே என்று சொல்லிய நக்கீரரைப்போல் நானும், நீங்கள் என்ன செய்தாலும், இப்பொழுது உங்கள் செய்கை தவறு என்று சொல்வதற்கு அஞ்சமாட்டேன்' என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தேனே! அவருடைய செயல் அறிவீனம் என்றுகூட ஓரிடத்தில் குறிப்பிட்டிருந்தேனே. அதெல்லாம் அவருடைய மனத்தைப் புண்படுத்தவில்லையா? உள்ளபடியே அவன் எழுதிய கடிதத்தில் தவறான விஷயம் ஒன்றும் இல்லையோ? அவன் என்னவெல்லாமோ எண்ணி வீணாகத்தான் மனத்தைப் புண்படுத்திக் கொண்டானா? 'நல்ல வேளை! ஒரு பெரிய பாரம் நீங்கியது' என்று அவன் நினைத்துக்கொண்டிருக்கும் போது, "'அந்த வள்ளுவதாசருக்கு நன்றாக எழுதத்தான் தெரியும். பேச்சு அவ்வளவு நன்றாயிருக்காது' என்று எழுதி

யிருந்தாயே, அதை நான் முதலில் நம்பவில்லை. பின்னுல்தான் நீ எழுதியது சரி என்பது தெரிந்தது. இந்த வருஷம் வள்ளுவர் சங்க ஆண்டு விழாவுக்கு அவரைத் தலைவராகப் போட்டதில், விழா நன்ருகச் சோபிக்கவே இல்லை" என்று சந்தநாதஞ் செட்டியார் கூறினர்.

மறுநாள் காலையில் பாஸ்கரனைத் தம்முடன் வர வேண்டாம் என்று சொல்லிவிட்டுச் சந்தநாதஞ் செட்டியார் தாமே சில இடங்களுக்குச் சென்று வந்தார். "உன்னுடைய படிப்புக் கெட்டுவிடும். நீ இன்றைக்குக் கல்லூரிக்குப் போ" என்று சொல்லிவிட்டார்.

அன்றிரவு சந்தநாதஞ் செட்டியார் சாத்தூருக்குத் திரும்பினர். புறப்படும்பொழுது, "சென்னைக்குப் பக்கத்திலுள்ள ஊர்களை எல்லாம் நீ பார்த்திருக்கிருயா?" என்று கேட்டார்.

"சில ஊர்களைப் பார்த்திருக்கிறேன்."

"பக்கத்தில் ஏதாவது நல்ல ஸ்தலம் இருக்கிறதா?"

"திருப்பதி இருக்கிறது."

"நீ இன்னும் அதைப் பார்க்கவில்லையா?"

"இல்லை."

"இந்தா ஐம்பது ரூபாய். அடுத்த ரஜாவில் அதைப் போய்ப் பார்த்துவிட்டு வா."

பாஸ்கரனுக்கு அந்த ஐம்பது ரூபாயை வாங்கிக்கொள்ளவே மனம் வரவில்லை. "நீங்களும் பார்க்கவில்லையல்லவா? நான் ரஜா எடுத்துக்கொண்டு வருகிறேன். நீங்களும் வந்தால், போய்ப் பார்த்துவிட்டு வரலாம்" என்ருன்.

"அந்த ஆசை எல்லாம் எனக்கு இல்லை அப்பா, நீ போய்ப் பார்த்துவிட்டுவா" என்று பணத்தைப் பாஸ்கரனிடம் கொடுத்தார் அவர்.

டாக்ஸி ஒன்று வந்தது. இருவரும் ஏறி உட்கார்ந்தார்கள். டிக்கட் வாங்கிப் பாஸ்கரன் ரெயிலில் தாத்தாவைச் சௌகரிய

மாக இரண்டாவது வகுப்பில் ஏற்றினன். வண்டிப் புறப்படப் போகும் சமயம். அவர் என்ன வேலையாகச் சென்னைக்கு வந்தார் என்பது இன்னும் பாஸ்கரனுக்கு விளங்கவில்லை. அந்தச் சமயம் சந்தநாதஞ் செட்டியார், "அடடே! நல்லவேளை! நான் வந்த காரியத்தையே மறந்துவிடத் தெரிந்தேன்" என்று ஆரம்பித்தார். 'இந்தப் பதினைந்தாம் தேதி முகூர்த்தம்; காலத்தில் வந்துவிடு' என்று சுருக்கமாகச் சொல்லப் போகிறார். அதற்காகத்தான் அவர் அவ்வளவு கருணை காட்டியது. தானும் தன்னுடைய சம்மதத்தை உடனே தெரிவித்துவிட வேண்டு மென்று பாஸ்கரன் நிச்சயித்துக் கொண்டான்.

அப்பொழுது சந்தநாதஞ் செட்டியார், "நம்முடைய பள்ளிக்கூட அங்கீகார விஷயமாக வந்தேன். டைரெக்டரைக் கண்டு பேசினேன். அவர் நமக்குச் சாதகமாகத்தான் இருக் கிறார். அது சம்மந்தப்பட்ட குமஸ்தாவையும் கண்டு பேசினேன். அவன் பேசிய முறையில் அவன் ஏதோ எதிர்பார்த்த மாதிரி தோன்றியது. இந்தக் காலத்தில் பணம் இல்லாமல் எந்தக் காரியம் முடிகிறது? இந்தா, இதை அவனிடம் கொடுத்துக் காரி யத்தைச் சீக்கிரம் முடிக்கச் சொல்" என்று சில நூறு ரூபாய் நோட்டுக்களையும், விலாசம் எழுதிய ஒரு காகிதத் துண்டையும் பாஸ்கரனிடம் கொடுத்தார்!

வண்டி புறப்பட்டது.

பாஸ்கரனுக்கு ஒரு விஷயந்தான் இன்னும் விளங்கவில்லை. அவனைத் திருப்பதிக்கு ஏன் போகச் சொன்னார்? அவன் செய்த பாவத்திற்குப் பிராயச்சித்தம் செய்து கொள்வதற்காகவா? அல்லது திருப்பதி சென்று தெண்டனிட்டாலும் இனி அந்தப் பெண் அவனுக்குக் கிடைக்காது என்று குறிப்பாய் அவனுக்கு அவர் அறிவித்தாரா?

ராஜேசுவரியை அவன் எப்படி எப்படியோ மனத்தில் சித்திரித்திருந்தான். அந்தக் கற்பனை உருவம் அவனுடைய மனக்கண் முன்னல் தோன்றி அவனை வருத்த ஆரம்பித்தது.

## அத்தியாயம் 6

# 'அந்தப் பழம்...'

கூடிதத்தைக் கண்டவுடன் மாரியப்ப செட்டியார் இடி விழுந்தவர் போல் உட்கார்ந்து விட்டார். பாஸ்கரன் கல்யாணம் வேண்டாமென்று மறுப்பதால் அதற்கு மேல் தாம் ஒன்றும் செய்வதற்கில்லை என்று சந்தநாதஞ் செட்டியார் எழுதியிருந்தார். அவருக்கு ஒரு வேலையும் ஓடவில்லை. ராஜேசுவரிக்கு மாப்பிள்ளை பார்ப்பதற்காகப் படாத பாடு பட்டார். அவர் போகாத ஊர் இல்லை. வாங்காத ஜாதகமில்லை. ஆனால் இது வரைக்கும் ஒரு மாப்பிள்ளையேனும் சிக்கவில்லை. மாப்பிள்ளை பிடித்தால், ஜாதகம் பிடிக்காது; ஜாதகம் பிடித்தால் மாப்பிள்ளை பிடிக்காது; அல்லது கோத்திரம் ஒன்றாயிருக்கும். எல்லாம் பிடித்திருந்தால், மாப்பிள்ளை வீட்டார் எணி வைத்து எட்ட முடியாதபடி அவ்வளவு பணம் வரதக்ஷிணையாகக் கேட்பார்கள். இப்படி அவர் கழித்த ஜாதகங்கள் கடைசியில் அவரிடம் ஒரு கட்டுச் சேர்ந்துவிட்டன. புதிதாக மாப்பிள்ளை பார்ப்பவர்கள் அந்த அந்த ஊருக்குப் போகாமல் அவரிடமே வந்து ஜாதகங்களை வாங்கிச் செல்ல ஆரம்பித்தார்கள்.

"எங்கே போனாலும் கல்லில் முட்டின மாதிரி இருக்கிறதே!" என்று பல் தேய்க்காமல், குளிக்காமல், சாப்பிடாமல் பித்துப் பிடித்தவர்போல மாரியப்ப செட்டியார் உட்கார்ந்திருந்தார்.

"ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறீர்கள்? பெண்ணைச் சிருஷ்டித்த ஆண்டவன் அதற்குப் புருஷனையும் சிருஷ்டிக்காமலா இருப்பான்? உலகத்திலேயே இவன் ஒருவன்தானா மாப்பிள்ளை? இவன் இல்லாவிட்டால் இன்னொருவன். நீங்கள் பல்லைத் தேய்த்துச் சாப்பிடுங்கள்" என்றாள் சுப்பம்மாள்.

"இவன் ஒருவன் இல்லையடி! ஒருவன் இல்லை! ஓராயிரம் உண்டு! நாமும் அதற்குக் குறையைப் பார்க்க வில்லையே? இது ஒன்றுதானே பிடித்திருந்தது!"

"இன்னும் எத்தனையோ பிடிக்கும் நீங்கள் எழுந்திருங்கள்."

"இந்தத் தரித்திரம் பிடித்த பெண்ணுக்கு நான் மாப்பிள்ளை தேடி அலைந்த அலைச்சல் கொஞ்சமில்லையே. தரித்திரம் பிடித்தவள்! அவள் எங்கே? மூதேவி!"

ராஜேசுவரி ஒன்றும் பேசாமல் விசனமாய் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தாள். அவளைக் கண்டதும், "மூதேவி! மூதேவி! நீ என்ன நேரத்தில் பிறந்தாயோ, எனக்குச் சனியனாய் வந்து வாய்த்திருக்கிறாயே? உன் பெயர் ராசியினாலும் லக்கின ராசியினாலும் நிச்சயமான கல்யாணங்கூட நின்று வருகிறதே! எங்காவது ஒழிந்து போ, என் கண் முன்னே இருந்து! ஏன் கோபத்தைக் கிளப்பிக்கொண் டிருக்கிறாய்?" என்று கத்தினார்.

ராஜேசுவரி விம்மி விம்மி அழுதுகொண்டே மாடிக்குப் போய் ஒரு மூலையில் வெறுந் தரையில் படுத்துக் கொண்டாள். அவளுக்குப் பின்னால் அவளுடைய தங்கை ஜயலக்ஷ்மியும் அழுது கொண்டே சென்றாள்.

மாரியப்ப செட்டியார் பல் விளக்கிச் சாப்பிட்டார். பின்பு அவருக்குக் கோபம் சற்று ஆறிய நேரமாகப் பார்த்து, "குற்றத்தை உங்கள் மீது வைத்துக்கொண்டு, பிள்ளைகள்மேல் ஏன் எரிந்து விழுகிறீர்கள்?" என்று சுப்பம்மாள் கேட்டாள்.

"என்மேல் என்ன குற்றம்?"

"நான் அப்பொழுதே நினைத்தேன். மாப்பிள்ளை அடக்கமான பிள்ளை என்று நீங்கள் சொன்னபோதே அவனை நம்பக் கூடாதென்று நான் நினைத்தேன். வாய் வீச்சில்லாத பயல்களுக்கெல்லாம் செயல் வீச்சு, எழுத்து வீச்சுத்தான் இருக்கும். அதைக் காட்டிவிட்டான்."

"என்மேல் என்ன குற்றம் என்று சொல்கிறாய்? நான் அவனோடு சீட்டு விளையாடியிருக்கக் கூடாது என்பாய்."

"அதைச் சொல்லவில்லை. நீங்கள் மதராசுக்குப் போனதே தப்பிதம்."

"வேறு என்ன செய்திருக்கவேணும் என்கிறாய்?"

"பெரியவர்களைக் கண்டு பேசினீர்கள். முகூர்த்தத்தை முடிவு செய்தீர்கள். நீங்கள் பேசாமல் இருந்திருந்தால் அவனுடைய தாத்தா அவனுக்குக் கடிதம் எழுதி வரவழைப்பார். வந்து மூச்சு விடாமல் கல்யாணத்தைப் பண்ணிக்கொண்டு போவான்."

"இப்பொழுதாவது இத்தோடு போச்சு. எல்லா ஏற்பாடுகளும் நடந்து, அவன் வந்து, முகூர்த்தத்தன்று கல்யாணம் வேண்டாம் என்று தலைகீழாக நின்றால் என்னடி செய்வது? அப்பொழுது நம்முடைய மானம் போய்விடுமே."

"உங்களுக்கு இதெல்லாம் தெரியாது. இந்தப் பயல்களெல்லாம் முதலில் இப்படித்தான் கல்யாணம் வேண்டாம் வேண்டாமென்று ஆடுவார்கள். கல்யாணத்தைப் பண்ணிவைத்தால் அப்புறம் அவர்கள் பெண்டாட்டியைக் கட்டிக்கொண்டு கொஞ்சுகிற கொஞ்சலும், குலாவுகிற குலாவலும் பார்க்க வேண்டுமே!" என்று சுப்பம்மாள் கூறினாள்.

"இப்பொழுதுதான் என்னடி கெட்டுப்போனது? யோசித்துப் பார்த்தால் இந்தக் கல்யாணம் நின்றதே நல்லதாயிற்று."

"ஏன்?"

"மாப்பிள்ளையின் நிறமோ கறுப்பு!"

"கறுப்பென்றால் என்ன? லக்ஷணமான முகந்தானே?"

"என்னடி லக்ஷணமான முகம்? அவனுடைய முண்டைக் கண்ணும், 'திரு திரு' என்று முழிக்கிற முழியும் இப்பொழுது நினைத்துப் பார்த்தாலே ஆபாசமாக இருக்கிறது!"

"ஆணுக்கு என்ன அழகு வேண்டியிருக்கிறது? படிப்பும் குணமுந்தான் ஆணுக்கு அழகு."

"என்ன படிப்பு, இங்கிலீஷ் படிப்பு? இவனுக்கு மேலே படிச்சவன்களெல்லாம் காபிக் கிளப்பில் எச்சில் இலை பொறுக்கிக் கொண்டிருக்கிறான்கள்! உத்தியோகம் கிடைத்தால்தான் உண்டு. இல்லையானால்?"

"சம்பாதித்துத்தான் சாப்பிடவேண்டும் என்கிற அவசியம் இல்லையே. சொத்திருக்கிறது."

"என்ன சொத்திருக்கிறது, சொத்து! அப்பனிடத்தில் ஒரு பைசா இல்லை. தாத்தா பார்த்துக் கொடுத்தால் உண்டு; இல்லை என்றால் இல்லை. பள்ளிக்கூடத்திற்கும் பஜனை மடத்திற்கும் எழுதிவைத்துவிட்டுப் போனாலும் போனார்! அப்படியே நல்ல மனசு வைத்து, ஏதாவது கொடுத்துவிட்டுப் போனாலும் இவன் வைத்துப் பிழைக்கிறானோ இல்லையோ? சூதாடிப் பயல், சூதாடித் தொலைச்சாலும் தொலைச்சான்! நான் அப்பொழுதே நினைத்தேன்: முதல் முதல் பார்க்க வரும்பொழுதே, சீட்டாடிக் கொண்டிருக்கிறானே, இவனுக்கா பெண்ணைக் கொடுப்பது, என்று? நல்ல வேளை! எந்தச் சாமி புண்ணியமோ, இந்தக் கல்யாணம் நின்றது!"

"பின்னே என்ன? பேசாமல் நிம்மதியாயிருங்கள். வேறு நல்ல மாப்பிள்ளையாகப் பார்க்கலாம்" என்றாள் சுப்பம்மாள்.

மாடியில் ஜயலக்ஷ்மி அக்காளைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தாள்.

"வா, அக்கா, போய்ச் சாப்பிடலாம். எவ்வளவு நேரம் அக்கா, இப்படிச் சாப்பிடாமல் இருப்பாய்?"

"போடி, நீ வேறு என் பிராணனை வாங்குகிறாய்? பேசாமல் போ" என்றாள் ராஜேசுவரி.

"சாதம் இங்கே கொண்டுவரட்டுமா, அக்கா?"

"எனக்கு ஒன்றும் வேண்டாம்."

"பலகாரம் ஏதாவது வாங்கிக்கொண்டு வரட்டுமா, அக்கா?"

ராஜேசுவரி பதில் ஒன்றும் சொல்லவில்லை. ஜயலக்ஷ்மிக்குத் திடீரென்று ஒரு ஞாபகம் வந்தது.

"அக்கா, முந்திரிப்பருப்பு உனக்கு வெகு பிரியமே; கொண்டுவரட்டுமா? நான் எடுத்து வைத்திருக்கிறேன், அக்கா!" என்றாள்.

சென்னைக்குச் சென்றிருந்த மாரியப்ப செட்டியார், தஞ்சாவூர் ஸ்டேஷனிலிருந்து வாங்கி வந்திருந்த முந்திரிப் பருப்பெல்லாம், சிறிது நேரத்தில் மாயமாய் மறைந்து விட்டது. ஜயலக்ஷ்மி எடுத்தாளா என்று அவளைக் கேட்டுப் பார்த்தார்கள். அவள் அதைப் பார்க்கவே இல்லை என்று சொல்லிவிட்டாள்.

"கொஞ்சமாவது கொடடி" என்று ராஜேசுவரி கேட்டாள்.

"நான் எடுக்கவே இல்லை, அக்கா" என்றாள் ஜயலக்ஷ்மி.

"ஒரு பருப்பாவது கொடடி."

"நான் அதைக் கண்ணால்கூடப் பார்க்கவில்லையக்கா" என்று சொல்லிவிட்டாள்.

இப்பொழுது அதைப் பற்றித்தான் ராஜேசுவரியிடம் ஜயலக்ஷ்மி பிரஸ்தாபித்தாள். ஆனால் அவள் முந்திரிப்பருப்பு வேண்டுமென்றா இப்பொழுது விசனப்பட்டுக்கொண்டிருந்தாள்?

## அத்தியாயம் 7

# திருப்பதியில்

"ஜடைவில்லையை எங்கே அம்மா வைத்தாய்? நீ தலையில் வைத்துக்கொண்டு வரவில்லையோ?" என்றார் ஒரு பெரியவர். அவருக்குச் சுமார் ஐம்பது வயசுக்குமேல் இருக்கும்.

"அடிவாரத்தில் சத்திரத்திலேயே வைத்துவிட்டாயோ என்னவோ, அம்மா! நன்றாய், ஞாபகப் படுத்திப் பார்" என்றாள் சுமார் முப்பது வயசுள்ள ஒரு பெண்.

"இல்லையம்மா, எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. நான் சடையில்தான் வைத்துக்கொண்டு வந்தேன்" என்றாள் சிறு பெண்.

"ஐயோ! வரும்போதுதானே வாங்கிக்கொண்டு வந்தோம்? நல்ல வைரம் பதித்ததாயிற்றே! இருநூறு ரூபாய் தொலைந்ததா?" என்று வருந்தினார் பெரியவர்.

"நீ நன்றாய் ஞாபகம் பண்ணிப்பார், காந்திமதி! ஒருவேளை பெட்டியிலேயே வைத்துவிட்டு வந்திருப்பாய்."

"சும்மா, சொன்னதையே சொல்லாதே, அம்மா! எனக்கு நன்றாய் ஞாபகம் இருக்கிறது. கொஞ்ச நேரத்திற்கு முன்னால் கூடத் தொட்டுப் பார்த்தேன்; இருந்தது" என்றாள் காந்திமதி.

அவள் தன் தாயுடனும் தாத்தாவுடனும் திருப்பதிக்கு வந்திருந்தாள். சுவாமி தரிசனத்திற்காக மலையேறிச் செல்கையில் அவளுடைய வைர ஜடைவில்லை தொலைந்துவிட்டது.

"க்ஷேத்திரத்துக்கு வந்து இப்படி ஜடைவில்லையைத் தொலைப்பாயாடி?" என்று மகளைக் கோபித்தாள் காந்திமதியின் தாய். அவள் பெயர் பங்கஜம்மாள்.

"இப்பொழுதுதான் இருந்ததென்றால், வழியில்தானே விழுந்திருக்கும்? வாருங்கள் பார்க்கலாம்" என்று பெரியவர் சொல்லவே, எல்லோரும் திரும்பினார்கள்.

"இத்தனை பேர் போய்வருகிற பாதையிலே இன்னும் அது கிடக்கப் போகிறதா? எவன் எடுத்தானோ? அவனுக்கு அதிருஷ்டம், நமக்குத் துரதிருஷ்டம்!" என்றாள் பங்கஜம்மாள்.

"எவன் எடுத்திருந்தாலும் கொடுக்கப் போகிறானா? அப்பேர்ப்பட்ட காலமா இது? போச்சு இருநூறு ரூபாய்! வேங்கடாசலபதி பற்று எழுத வேண்டியதுதான்" என்றார் பெரியவர்.

இவர்கள் இப்படித் தேடிக்கொண்டு செல்கையில், "என்ன தேடுகிறீர்கள்? எதையாவது காணோமா?" என்று கேட்டான் எதிரே வந்த இளைஞன் ஒருவன்.

"ஒரு ஜடைவில்லையைக் காணோம்" என்றார் பெரியவர்.

"என்ன மாதிரி?"

"மாதிரி என்ன, மாதிரி? வைர ஜடைவில்லை!"

"இதுதானா பாருங்கள்?" என்று வாலிபன் ஒரு ஜடைவில்லையைக் காட்டினான்.

"ஆம், அதேதான்!" என்று ஆத்திரத்துடன் கையை நீட்டிய காந்திமதி எதிரே ஓர் அழகிய வாலிபன் நிற்பதைக் கண்டதும் வெட்கப்பட்டுப் பின்னால் ஒதுங்கிக் கொண்டாள். பங்கஜம்மாள் அதை வாங்கிக்கொண்டாள். பின்பு அவளும் அவள் தந்தையும் வாலிபனுக்குப் பல விதங்களில் வந்தனமளித்தார்கள்.

"தம்பி நல்ல தம்பியாக இருக்கக் கண்டு கொடுத்திச்சு. வேறு யாராவது எடுத்திருந்தால், நமக்குப் பொருள் கிடைத்திருக்குமா?" என்று அவர்கள் சொன்னார்கள்.

காந்திமதி இளைஞனை அன்புடன் நோக்கினாள்; அவன் வேறு யாரும் அல்ல; பாஸ்கரனே! தாத்தாவின் விருப்பப்படி அவன் திருப்பதிக்கு வந்திருந்தான்.

காந்திமதிக்குச் சுமார் பதினைந்து வயசு இருக்கும். அவள் பாஸ்கரனைச் சந்திப்பது அது முதல் தடவை அல்ல. அவனும் அடிவாரத்தில் அவர்கள் இறங்கியிருந்த சத்திரத்தில் தான் இறங்கியிருந்தான். அவன் ஏற்கனவே அவளுடைய கவனத்தைக் கவர்ந்திருந்தான்.

பெரியவர் பாஸ்கரனுடன் பேசிக்கொண்டே வெகு தூரம் வரையில் நடந்து வந்தார். ஆயினும் எவ்வளவு நேரந்தான் இளமைக்கும் முதுமைக்கும் ஒத்து வரும்? அவரும் பங்கஜம்மாளும் அடிக்கடி பின்தங்க ஆரம்பித்தார்கள். பாஸ்கரனும் காந்திமதியும் ஒன்றாய் நடக்கலாயினர்.

தங்கள் சொந்த ஊருக்கு வெகு தூரத்திற்கப்பால் ஒரு பொது இடத்தில் ஜனங்கள் சந்திக்கும் பொழுது, வெகு சீக்கிரத்தில் நண்பர்களாய்விடுவது வழக்கம். தங்கள் சொந்த ஊர்களில் ஒருவரோடொருவர் ஒரு வார்த்தையேனும் பேசாதவர்கள்கூட இம்மாதிரி இடங்களில் சந்திக்கும் பொழுது, வெகு நாள் பழகியவர்கள் போல் பேசிப் பழகுவார்கள். இயற்கையழகும், வெட்ட வெளியும் ஒன்று சேரும்போது அவர்களுக்கிடையே இருந்த திரை விலகிவிடும். காந்திமதியும் முதலில் நாணமடைந்த போதிலும், பின்பு பாஸ்கரனுடன் சகஜமாகவே பேச ஆரம்பித்தாள்.

இருவருக்கும் மலை ஏறுவதன் கஷ்டமே தோன்றவில்லை. பேசிக்கொண்டே வெகு விரைவாக ஏற ஆரம்பித்தார்கள். சிற்சில சமயம் அவர்கள் பெரியவருக்கும் பங்கஜம்மாளுக்கும் கண்ணுக்கு எட்டாத தூரத்தில் வந்துவிடுவார்கள். அம்மாதிரி சமயங்களில் அவர்கள் வரும் வரைக்கும் இருவரும் ஏதாவது ஒரு மரத்தடியில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பார்கள். காந்திமதிக்குச் சொந்த ஊர் பெங்களூரென்றும், அவள் உயர்தரப் பாடசாலையில் ஆறும் பாரம் படித்துக்கொண்டிருக்கிறாள் என்றும் பாஸ்கரன் அறிந்தான். இம்மாதிரி அவர்கள் பேசிக்கொண்டிருந்த பொழுது, காந்திமதியின் தாத்தாவும் தாயும் வந்து சேர்ந்தார்கள்.

"உனக்கு ஒரு பேச்சுத்துணை கிடைத்தது நல்லதாய்ப் போயிற்று. இல்லையானால் கால் வலிக்கிறது, ஒரு டோலி வைக்கவேண்டும் என்று தொந்தரவு பண்ணியிருப்பாய்" என்றார் தாத்தா.

காந்திமதியின் முகம் சற்றே சிவந்தது. அப்பொழுது அவளுடைய அழகு முன்னைவிடப் பன்மடங்கு அதிகரித்தது.

பாஸ்கரனும் காந்திமதியும் இன்னும் செல்லலானார்கள். சிறிது தூரம் சென்றதும், "எனக்குத் தண்ணீர் தவிக்கிறது. எங்காவது தண்ணீர் இருக்கிறதா என்று பார்த்துக் குடித்து விட்டு வருகிறேன்" என்று பாஸ்கரன் சொன்னான்.

"என் கூஜாவில் தண்ணீர் இருக்கிறது. அதை நீங்கள் சாப்பிடமாட்டீர்களா?" என்று காந்திமதி கேட்டாள்.

"ஐயோ! நான் அதைக் கவனிக்கவில்லையே! சாப்பிடாமல் என்ன?" என்று பாஸ்கரன் சிரித்தான். அவளுடைய முக மண்டலமே அவனுடைய முழுக் கவனத்தையும் கவர்ந்து விட்டது போலும்!

அப்புறம் பாதை முழுவதும் கூஜா அவன் கையிலேயே இருந்தது.

வழியில் ஒரு பிச்சைக்காரன் பிச்சை கேட்டான். "பையை அம்மாளிடமல்லவா கொடுத்துவிட்டேன்!" என்றாள் காந்திமதி.

"இந்தா என்னிடம் இருக்கிறது; போடு" என்று பாஸ்கரன் காசு எடுத்துக் கொடுத்தான்.

"நீங்களே போடுங்களேன்" என்றாள் காந்திமதி நாணத்துடன்.

அவர்கள் மலைமீது போய்ச்சேர வெகு நேரம் ஆகிவிட்டது. சத்திரத்தில் ஒரு செளகரியமான அறையைப் பார்த்து, அவர்களுக்கு ஏற்பாடு செய்துவிட்டுச் சாப்பிட்டுவிட்டு வருவதற்காகப் பாஸ்கரன் ஹோட்டலுக்குக் கிளம்பினான்.

"ஏன் தம்பி, எங்களோடு சாப்பிட்டால் என்ன? சாப்பிட மாட்டாயா?" என்று பங்கஜம்மாள் சொன்னாள்.

பாஸ்கரன் ஆக்ஷேபிக்கவில்லை. அவர்கள் அங்கிருந்த இரண்டு நாட்களும் பாஸ்கரனும் அவர்களுடன் ஒருவனாகவே இருந்தான்.

அன்று அவர்கள் சுவாமி தரிசனத்திற்குச் சென்றபொழுது, காந்திமதியும் பாஸ்கரனும் மிகுந்த பக்தி சிரத்தையுடன் வேங்கடாசலபதியைப் பிரார்த்தித்தார்கள். அவர்களுடைய பிரார்த்தனை என்ன?

பாஸ்கரனுடைய வாழ்க்கையிலே முதல் முதல் பக்தி உணர்ச்சி அவனுடைய உள்ளத்தில் உண்டானது அப்பொழுது தான்! இன்னொரு விதமான உணர்ச்சி உண்டானதும் அப்போதுதானா?

மூன்றாம் நாள் காலையில் காந்திமதியின் குடும்பத்தினர் அடிவாரத்துக்குப் புறப்பட்டார்கள். அவர்கள் மலைமீதிருந்த இரண்டு நாட்களும் பாஸ்கரனுக்கும் காந்திமதிக்கும் இரண்டு நிமிஷமாய்ப் போய்விட்டன. பாஸ்கரன் தனியாக இருந்திருப்பானாயின், இயற்கை வனப்பும் தெய்விக வனப்பும் ஒருங்கே சேர்ந்த அத்திருப்பதியில் இன்னும் இரண்டு மூன்று நாட்கள் தங்கியிருந்திருப்பான். ஆனால் அவனுடன் வந்தவர்கள் புறப்படவே, அவனும் ஏனோ அவர்களுடன் புறப்பட்டுவிட்டான்.

போகும் போதும், பாஸ்கரனும் காந்திமதியும் சேர்ந்தே சென்றார்கள்.

மறுநாள் காலையில் காந்திமதியின் குடும்பத்தார் தங்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

காந்திமதியின் தாத்தா பாஸ்கரனிடம் விடைபெற்றுக் கொள்ள வந்தார். "தம்பி, நீ யாரோ எவரோ என்று இருந்தோம். கடைசியில் நீ நம் ஜாதிப் பையனாகவே வந்து சேர்ந்தாய். பங்கஜம் இன்று காலையில்தான் சொன்னாள். உன் கோத்திரம் என்ன தம்பி?" என்று கேட்டார்.

பங்கஜம்மாள் சிரித்துக்கொண்டே, "என்ன ராமாயணம் ஆரம்பித்துவிட்டீர்கள்? வண்டிக்காரன் அவசரப் படுத்திக் கொண்டிருக்கிருன். வாருங்கள்" என்ருள்.

பெரியவர் விடை பெற்றுக்கொண்டு சென்றுவிட்டார். காந்திமதியும் அவனிடம் சொல்லிக்கொண்டுதான் போனுள். ஆனுல் அது வேறு பாஷையில்-நயன பாஷை என்று சொல்வார்கள் அல்லவா!

இந்தக் காந்திமதியின் ஒளியில், அவனுடைய மனக்கண் முன் சிறிது காலமாய்த் தோன்றிக்கொண் டிருந்த கற்பனைச் சுந்தரியின் உருவம் ஒளி மங்கியது. அவ்விடத்தை இவள் உருவம் ஆக்கிரமித்துக் கொண்டது. அவன் என்ன நோக்கத் துடன் திருப்பதிக்கு வந்தான்? என்ன ஆகிவிட்டது?

"பையன் நல்லவன்தான். ஊர்தான் வெகு தூரமாயிருக் கிறது" என்று வண்டியிலிருந்து பங்கஜம்மாள் சொன்னது பாஸ்கரனுக்குக் கேட்டது.

# அத்தியாயம் 8

## மீண்டும் முயற்சி

அன்று சாத்தூரை நோக்கிச் சென்ற ரெயில் வண்டி நூற்றுக்கணக்கான இதர பிரயாணிகளுடன் மாரியப்ப செட்டியாரையும் சுமந்து சென்றது. மாரியப்ப செட்டியாருக்கு இனிச் சாத்தூரில் என்ன வேலை என்று வாசகர்கள் நினைக்கலாம்.

அன்று காலை அவர் ஏக்கத்துடன் தாழ்வாரத்தில் உட்கார்ந்திருந்தார்.

"ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறீர்கள், எதையோ பறி கொடுத்தது மாதிரி?" என்று சுப்பம்மாள் கேட்டாள்.

"அந்தக் கடிதம் வந்ததிலிருந்து எனக்கு அதே கவலையாக இருக்கிறது. ஒரு வேலையும் ஓட மாட்டேன் என்கிறது" என்றார் மாரியப்ப செட்டியார்.

"அதுதான், வேறு மாப்பிள்ளை பார்க்கப் போவதாக முடிவு செய்தீர்களல்லவா?"

"என்ன இருந்தாலும் அந்த மாப்பிள்ளையைப் போல் வேறு கிடைக்கவா போகிறது? பேஷான மாப்பிள்ளை! எப்பேர்ப்பட்ட படிப்பு! நம் ஜாதியிலேயே அப்படிப் படித்தவன் கிடைப்பது அரிது!"

"எத்தனை படிப்பிருந்து என்ன செய்ய? இந்தக் காலத்தில் வேலை எங்கே கிடைக்கிறது?" என்று சுப்பம்மாள் கேட்டாள்.

"வேலை பார்க்கவேண்டுமென்று என்ன ஆத்திரம் வந்தது? அந்தப் பையனின் தாத்தாவிடமிருக்கும் சொத்து, இந்தத் தலைமுறைக்கு மட்டுமல்ல, அடுத்த தலைமுறைக்கும் போதும்."

"நீங்கள்தானே சொன்னீர்கள்; அவர் மனசு வைத்துக் கொடுத்தால்தானே என்று" என்று சுப்பம்மாள் மேலுங் கிளறினாள்.

"கொடுப்பார், கொடுப்பார்! கொடுக்காமல் என்ன செய்யப் போகிறார், அத்தனை சொத்தையும்? பேரன்மீது அவர் எவ்வளவு பிரியமாயிருக்கிறார், தெரியுமா? அப்படியே கொடுக்கா விட்டாலும், என்ன கெட்டுப் போய்விட்டது? தம் பள்ளிக் கூடத்தில் ஒரு ஹெட்மாஸ்டர் வேலையாவது போட்டுக் கொடுக்க மாட்டாரா? அப்பொழுதும் மாதம் நூறு ரூபாய்க்கு மோசமில்லை."

"என்ன படிப்பிருந்தாலும் லக்ஷணமில்லாத மாப்பிள்ளைக்கு ராஜேசுவரியைக் கொடுக்க நான் சம்மதிக்க மாட்டேன்" என்று சுப்பம்மாள் கூறினாள்.

"அடி பைத்தியமே! மாப்பிள்ளை லக்ஷணமில்லை என்று உனக்கு யார் சொன்னது?"

"முண்டைக்கண் என்று......"

"ஐயோ! ராம! ராம! உண்மையில் சொல்லப்போனால் அவனுடைய அகன்ற விழிகளின் அந்தப் பார்வைதானே என்னை வசீகரித்தது? அது ராஜபார்வை அல்லவா?" என்றார் மாரியப்ப செட்டியார்.

"நீங்களே கதையும் போடுகிறீர்கள், கதையையும் அழிக்கிறீர்கள்! பின்னே அன்று அப்படிச் சொன்னீர்களே?"

"வெறுப்பிலும் கோபத்திலும் என்ன என்னவோ சொல்வது சகஜந்தான். எட்டாத பழம் புளிக்கும் என்பது உனக்குத் தெரியாதா?"

"ஓஹோ! அப்படியா?"

"எனக்கு அன்று அந்த மனப்பான்மை ஏற்பட்டு, அப்படி நான் பேசியிராவிட்டால் எனக்குப் பைத்தியம் அல்லவா பிடித்திருக்கும்?"

"பைத்தியம் ஏன் பிடிக்கவேண்டும்? இந்த மாப்பிள்ளை யைப்போல் எத்தனை எத்தனையோ உலகத்தில்" என்றாள் சுப்பம்மாள்.

வெகுநேரம் வரைக்கும் மாரியப்ப செட்டியார் மௌனமாக இருந்தார். 'இதேதான் மாப்பிள்ளை; இதேதான் பெண்' என்று ஜோஸ்யர்களெல்லாம் சொன்னது அவருக்கு ஞாபகம் வந்தது. திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவர்போல், "சமையல் ஆகி விட்டதா?" என்று மனைவியைக் கேட்டார்.

"ஏன், அப்படி என்ன அவசரம்?"

"சீக்கிரம் சமையல் செய். நான் இன்றைக்குச் சாத்தூர் போகவேண்டும். இந்த மாப்பிள்ளைக்கே ராஜேசுவரியைக் கட்டா விட்டால், என் பெயர் மாரியப்ப செட்டி அல்ல" என்று சொல்லி ஸ்நானம் செய்வதற்கு எழுந்து சென்றார்.

அன்று அவர் ரெயிலுக்குப் புறப்பட்டபொழுது, எவ்வளவு நேரம் காத்திருந்தாலும் சரி, நல்ல சகுனம் பார்த்தே போக வேண்டும் என்று வாசல் திண்ணைக்கு வந்து சேர்ந்தார். ஆனால் அங்கு அவர் ஒரு நிமிஷமேனும் காத்திருக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. எதிர்பாராத விதமாய் அந்த மத்தி யான்ன நேரத்தில் ஒரு நிறை குடம் எதிரே வரவே, உடனே ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார். அந்தச் சுப சகுனத்தைக் கண்டதும், தம் காரியம் அவசியம் சித்தியாகும் என்று குதூகலத்துடன் சென்றார்.

ரெயிலில் அவருக்கு எதிரில் அவருடைய நண்பர் ஒருவர் உட்கார்ந்திருந்தார். அதைக்கூடக் கவனியாமல் அவர் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். எப்படி எப்படிப் பேசி, என்ன என்ன செய்து தம் காரியத்தைச் சாதிக்க வேண்டும் என்று யோசித்துக்கொண் டிருந்தவர், திடீரென்று நண்பரை எதிர்ப் பெஞ்சியில் பார்த்தார். உடனே நண்பர் பேச ஆரம்பித்தார். மின்வெட்டுப் போல் செட்டியாருடைய மனத்தில் ஓர் எண்ணம் ஓடியது. தம் நண்பர் மங்கல வார்த்தையில் பேச்சை ஆரம்

பித்தால் தாம் போகும் காரியம் கைகூடும். இல்லையானல் கைகூடாது என்று நினைத்துக் கொண்டார்.

"சந்தனப் பூச்சு வெகு மும்முரமாயிருக்கிறதே! என்ன விசேஷம் செட்டியாரையா?" என்ருர் நண்பர்.

மாரியப்ப செட்டியாருக்கு ஏற்பட்ட சந்தோஷத்தில் அந்த நண்பருடைய மகன் ஒருவன் வேலை இல்லாமலிருக்கிருன் என்பதை அறிந்தபோது, அவனைத் தம் கடையில் வேலைக்கு வைத்துக்கொள்வதாகவும் ஒப்புக்கொண்டார்.

ரெயில் சாத்தூரை அடைந்தது. மாரியப்ப செட்டியார் ரெயிலை விட்டு இறங்கிச் சிறிது தூரம் சென்றிருப்பார். எதிரே ஒருவன் வேர்க்க வேர்க்க ரெயிலுக்கு ஓடிவந்தான். அவன் யார்? மாரியப்ப செட்டியார் ஏன் அப்படி நின்று அவனையே கூர்ந்து கவனித்துக்கொண் டிருக்கிருர்? அவன் ஸ்டேஷன் கட்டிடத்தை அடைந்து விட்டான். அவன் டிக்கட்டு வாங்கி விட்டானு என்று இங்குமங்கும் விலகித் தலையை நீட்டிப் பார்த்தார். நல்ல வேளை டிக்கட்டு வாங்கிவிட்டான். 'அதிருஷ் டந்தான்!' என்று செட்டியார் மனத்திற்குள் சொல்லிக்கொண் டார். மாரியப்ப செட்டியாருடைய முகம் ஏன் அப்படி மாறு கிறது? நம்முடைய அவசரம் இந்த டிக்கட் கலெக்டருக்குத் தெரிவதே இல்லை. டிக்கட்டை வாங்கி டிக்கட் கலெக்டர் நிதானமாக வெட்டிக் கொடுப்பதை மாரியப்ப செட்டியார் பதற்றத்துடன் கவனித்தார். அப்பா! நல்ல வேளை, ரெயில் ஏறி விட்டான்! அதில் அவன் எவ்வளவு சந்தோஷம் அடைந்தானே தெரியாது. ஆனல் அதைவிட அதிகச் சந்தோஷம் மாரியப்ப செட்டியாருக்குத்தான்! ஏன்? அவனுக்கும் இவருக்கும் என்ன சம்பந்தம்? உண்மையில் ஒருவிதச் சம்பந்தமும் இல்லை. அவனுக்கு ரெயில் கிடைத்தால், தம் பெண்ணுக்கு இந்த மாப்பிள்ளை கிடைக்கும் என்று மனத்தில் சங்கற்பித்துக்கொண் டார். அதனல்தான் அவருக்கு இத்தனை சந்தோஷம்! இத்தனைக்கும் அவர் சாதாரணமாகச் சகுனங்கள் பார்ப்பவரும் அல்ல, வைதிக மனப்பான்மை கொண்டவரும் அல்ல.

சிறிது நேரத்தில் மாரியப்ப செட்டியார் சந்தநாதஞ் செட்டியாரின் வீட்டை அடைந்தார். அங்கு அவர் இல்லை. வந்ததும் அபசகுனமாய், 'இல்லை' என்கிறார்களே என்று நினைத்துக்கொண்டு கடைக்குச் சென்றார். அங்கும் அவர் இல்லை. ஏதோ வியாபார ஜோலியாய் வெளியூருக்குச் சென்றிருப்பதாகச் சொன்னார்கள்.

"என்ன சகுனம்! என்ன சாஸ்திரம்! எல்லாம் புரட்டு!" என்று அவருக்குத் தோன்றியது. ஆயினும் அவர் வரும் வரைக்கும் இருந்து உண்டு அல்லது இல்லை என்று தெரிந்து கொண்டே செல்லுவது எனத் தீர்மானித்தார்.

சந்தநாதஞ் செட்டியார் வந்த பின்பு, அவருக்குச் சௌகரியமான ஒரு நேரம் பார்த்து, மாரியப்ப செட்டியார் பேச்சை ஆரம்பித்தார்.

"அந்தப் பேச்சை இனி என்னிடம் பேசவே வேண்டாம். யார் பெற்ற பிள்ளைக்கு யார் ஐயா கல்யாணம் பேசி முடிப்பது?" என்றார் சந்தநாதஞ் செட்டியார்.

"நீங்கள் இப்படியெல்லாம் சொல்லக்கூடாது. ஏதோ சிறுபிள்ளைத்தனமாய், யோசனையில்லாமல் பையன் எழுதியிருந்தால், உங்களைப் போன்ற பெரிய மனிதர்கள் அதைப் பொருட் படுத்திக்கொண் டிருப்பது நன்றாயில்லை. நீங்கள் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டும்."

"வளர்த்தோம், எடுத்தோம், படிக்க வைத்தோம், பணத்தைப் பணம் என்று பாராமல் எல்லாம் செய்தோம். இவ்வளவும் செய்தும் நமக்கு என்ன ஐயா, பேர் கிடைத்தது? என்ன பேர் கிடைத்ததென்று கேட்கிறேன். 'நீ யார் என் கல்யாணத்தை நிச்சயம் பண்ணுவதற்கு?' என்றுதான் ஐயா, எழுதியிருக்கிறான்? என் பிள்ளையானால், இப்படி எழுதுவானா?" இதைச் சொல்லும்போது அவருடைய குரல் கம்மியது.

"இங்கிலீஷ் படித்த பிள்ளை. லக்ஷியம், பால்ய விவாகம் என்று ஏதோ பிதற்றுகிறது. அதற்காக நீங்கள் எது எதையோ

நினைத்து வருத்தப்படுவது நன்றாயில்லை. நீங்கள் பையனை இங்கே வரவழைத்து நாலு வார்த்தை புத்திமதி சொன்னால் தட்டமாட்டான்.”

“எனக்குக் கடவுள் எல்லாவிதமான சம்பத்தையும் கொடுத்திருக்கிறார். குழந்தையில்லாக் குறை ஒன்றுதான். உண்மையாக, மனச்சாக்ஷி பூர்வமாகச் சொல்கிறேன், மாரியப்ப செட்டியாரே, மற்றவர்கள்தாம் எனக்குப் புத்திரப்பேறு இல்லை என்று வருத்தப்பட்டார்களே ஒழிய எனக்கு அதைப்பற்றி இது வரையில் சிறிதும் வருத்தம் இருந்ததில்லை. மற்றவர்களுடைய குழந்தைகளையாவது விரல்விட்டு எண்ணிவிடலாம். ஆனால் எனக்கோ எண்ணிக்கையிலடங்காத அத்தனை பிள்ளைகள் உண்டு என்றே நான் நினைத்துச் சந்தோஷம் அடைந்திருந்தேன். என் பள்ளிக்கூடத்தில் படிக்கும் குழந்தைகளையும், என் அன்னதான மடத்தில் சாப்பிடும் அநாதைகளையும், என்னுடைய குழந்தைகளாகவே நான் எண்ணிப் பெருமிதம் அடைந்தேன். ஆனால் இப்பொழுதுதான் என் கண்கள் திறந்தன. புத்திரனில்லாக் குறை பெருங்குறை என்பது எனக்கு இப்போதுதான் விளங்குகிறது. அறியாமலா பெரியவர்கள் சொன்னார்கள்? நாயனார் சொல்கிறார்:

‘பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற’

என்று. அவர் வாய்க்குச் சர்க்கரை போடவேண்டும், ஐயா, சர்க்கரை போடவேண்டும்! ‘தம் பொருள் என்பதம் மக்கள்’ என்றார் இன்னோர் இடத்தில். என் பிள்ளையானால் இப்படி எழுதுமா, ஐயா?” இப்படிச் சொல்லும்பொழுது எதற்கும் கலங்காத சந்தநாதஞ் செட்டியாருடைய கண்களும் லேசாகக் கலங்க ஆரம்பித்தன.

“நீங்கள் பெரியவர்கள், படித்தவர்கள். உங்களுக்கு நான் என்ன சொல்லப் போகிறேன்? நீங்கள்தாம் பெரியமனசு

பண்ணிப் பையன் எத்தனை குற்றம் செய்திருந்தபோதிலும் பொறுத்துக்கொண்டு இந்தக் காரியத்தை முடித்து வைக்க வேண்டும்.''

''இனி நான் இதில் தலையிடப்போவதில்லை. அவனுடைய அப்பன் இருக்கிறார், பாட்டனார் இருக்கிறார். அவனுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? மேலும் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவனே, வேண்டாம் என்னும்போது, நாம் என்ன செய்யக் கிடக்கிறது?''

''நீங்கள் அப்படியெல்லாம் சொல்லக்கூடாது. நீங்கள் ஊராருக்கெல்லாம் கல்யாணம் செய்து வைக்கிறீர்கள். உங்கள் பேரன் கல்யாணத்திற்கு இப்படிச்சொல்வது சரியல்ல. பையனின் தகப்பனார் யாருக்குவந்த விருந்தோ என்றிருக்கிறார். பாட்டனார் செத்த பிணத்திற்கு சமாதி கட்டிச் சொத்து முழுவதையும் எழுதிவைத்துக் கட்டி அழுதுகொண் டிருக்கிறார். நீங்களும் இப்படிச்சொன்னால் அந்த பையனை யார்தாம் கவனிப்பது? நான் மதராசுக்குப் போய்ப் பையனிடமிருந்து அவன் கல்யாணத்திற்குச் சம்மதிப்பதாக ஒரு கடிதம் வாங்கிக்கொண்டு வருகிறேன். நீங்கள் காரியத்தை முடித்துவிடவேண்டும்.''

''இனி இந்த விஷயத்தில் இப்படி இருக்கும் துரும்பை அப்படி எடுத்துப் போடமாட்டேன். இது நிச்சயம்'' என்று தீர்மானமாகச் சொன்னார் சந்தநாதஞ் செட்டியார்.

''அப்படியெல்லாம் சொல்லாதீர்கள். நான் எத்தனையோ இடங்களுக்குச் சென்று முட்டுப் பெற்று வந்துவிட்டேன். நீங்க எத்தனையோ புண்ணியம் செய்திருக்கிறீர்கள். இதை உங்களுடைய பேரன் கல்யாணமாக நினைக்க வேண்டாம். என் மகளின் கல்யாணமாக வைத்துக்கொள்ளுங்கள். ஒரு பெண்ணைக் கடைத்தேற்றின புண்ணியம் உங்களுக்கு உண்டு. எனக்கு நேரமாகிறது. நான் வருகிறேன்'' என்று விடைபெற்றுச் சென்றார் மாரியப்ப செட்டியார்.

அவர் போகப் போக, "நீங்கள் இவ்வளவு தூரம் சொல்வதற்கு அவன் என்னுடைய மகனுய் இருந்திருக்கக் கூடாதா?" என்று சந்தநாதஞ் செட்டியார் சொன்னுர்.

அன்று மாரியப்ப செட்டியார் ஊருக்குச் சென்று மீனுக்ஷி சுந்தரேசுவரருக்கு அர்ச்சனை செய்தார்.

ராஜேசுவரி அன்றிலிருந்து தினந்தோறும் மாலையில் தீப லக்ஷ்மியை ஆராதிக்கத் தொடங்கினுள். முன் பின் பாராத ஒருவனைக் கட்டாயம் கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்று ஆராதிப்பது! இதென்ன விந்தைக் காதல்?

## அத்தியாயம் 9

# கடிதமும் பதிலும்

அந்தக் கடிதத்தைப் பாஸ்கரன் இதுவரையில் எத்தனை முறை படித்தானோ, ஈசுவரனுக்கே தெரியும். அதைத் திரும்பத் திரும்பப் படித்துக்கொண்டே இருந்தான். ஆனால் அவன் அப்படிப் படிக்கவேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால் அக்கடிதத்தின் வாசகங்கள் எல்லாம் அவனுக்கு நன்றாகப் பாடமாகிவிட்டன. ஆயினும் அவனுக்குத் திடீரென்று ஒரு சந்தேகம் தோன்றும். கடிதம் எப்படி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது? 'அன்பார்ந்த பாஸ்கரன்' என்றா, 'ஸ்ரீ பாஸ்கரன்' என்றா? கடிதத்தைப் பார்த்தால் ஒழிய அவனுக்கு அச்சந்தேகம் நிவர்த்தியாகாது. சிறிது நேரத்திற்குப் பின் கடிதம் எப்படி முடிக்கப் பட்டிருக்கிறது என்று அறிய அவனுக்கு ஆவலுண்டாகும். அத்தனை தடவைகள் அந்தக் கடிதத்தைப் படித்தும், கடிதத்தின் முடிவு அதுவரைக்கும் அவனுடைய கண்களில் படாததுபோலவே தெரியும். மீண்டும் ஒருமுறை கடிதத்தை பார்ப்பான். இவ்விதம் அக்கடிதம் முழுவதும் அவனுடைய மனத்தில் பதிந்துவிட்டது. ஆயினும் இன்னும் அவனுக்கு அதைப் படிக்கும் ஆசை மட்டும் விடவில்லை.

அவளுடைய எழுத்துக்கள் எவ்வளவு அழகாக இருக்கின்றன என்று ஒரு சமயம் நினைப்பான். இன்னொரு சமயம் அவள் விஷயத்தைச் சொல்லியிருக்கும் அழகுதான் அவனுக்கு மிகவும் பிடித்திருக்கும். மற்றொரு சமயம் உறையில் எப்படி விலாசம் எழுதியிருக்கிறாள் என்று அதை எடுத்துப் பார்ப்பான்.

அந்தக் கடிதத்தைப் படிக்கும்போதெல்லாம், திருப்பதியில் ஆனந்தமாகக் கழித்த காலத்தின் ஞாபகங்கள் ஒன்றன் பின் ஒன்றாக அவனுடைய மனத்திரை முன் வந்தன. காந்திமதியின்

அழகிய உருவமும் அவனுடைய அக்கண்முன் காட்சி அளித்தது. அவளுடைய காதுகளுடன் குதித்துக் கொஞ்சிக் குலாவிக்கொண் டிருந்த வைர டோலக்குகளையும், அவனிடம் எதையோ கேட்க விரும்பினபோல், 'குறுகுறு' வென விழித்த அவளுடைய விசாலமான கண்களையும் அவனால் மறக்கவே முடியவில்லை. அவள்தான் அக்கடிதம் எழுதியிருந்தாள்.

'அவளுக்கு ஒரு கடிதம் எழுதலாமா, வேண்டாமா? எழுதினால் அவள் என்ன நினைத்துக்கொள்வாளோ! என்ன எழுதுவது?' இம்மாதிரி எல்லாம் அவன் நினைத்துக்கொண் டிருந்தபோது, திடீரென்று அக்கடிதம் வந்தது அவனுக்கு மிகுந்த சந்தோஷமாக இருந்தது.

அவன் வெளியில் சென்றுவிட்டு அறைக்குள் நுழைந்தபோ தெல்லாம், அக்கடிதத்தை எடுத்து ஒரு முறை பார்த்துக் கொள்வான்.

கடைசியில் அன்று இரவு போஜனத்திற்குப் பின் அக் கடிதத்திற்குப் பதில் எழுத உட்கார்ந்தான். என்ன பதில் எழுத லாம்? கடிதத்தை விரித்து, மேஜையின்மீது வைத்தான். அது மிகச் சுருக்கமாகவே இருந்தது.

"ஸ்ரீ பாஸ்கரன் அவர்களுக்கு,

நமஸ்காரம். இந்தக் கோடை விடுமுறையில் நீங்கள் பெங்களூருக்கு வந்து, எங்களுடன் சில நாட்கள் தங்கிவிட்டுப் போகவேண்டும் என்று தாத்தா உங்களை அழைக்கிறார். தங்கள் பதிலைக் கூடிய சீக்கிரம் தெரிவிக்கக் கோருகிறேன்.

அன்புள்ள,
காந்திமதி."

என்று அதில் எழுதியிருந்தது.

காந்திமதியின் தாத்தா அல்லவா அழைக்கிறாராம்; அவள் அழைக்கவில்லையாமே! அப்படியானால் அவள் ஏன் கடிதம் எழுதினாள்? இப்படி எல்லாம் நினைக்கும்போது, அவனுடைய முகத்தில் ஒரு புன்சிரிப்புத் தோன்றும். இக்கடிதத்திற்குச்

சரியான பதில் எழுதவேண்டும் என்று பாஸ்கரன் தீர்மானித்தான். என்ன எழுதலாம்? அநேக கடிதங்கள் எழுதி, அவைகள் எல்லாம் சரி இல்லை என்று கிழித்து எறிந்தான். கடைசியில் ஒரு கடிதந்தான் அவன் மனத்துக்குப் பிடித்ததாக இருந்தது. அதை எழுதிமுடித்த பின்பு, அவனுக்கு ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வந்தது. அது திருப்பதியில் நடந்தது.

அவர்கள் மலையிலிருந்து கீழே இறங்கி வரும்போது, மறுபடியும் ஒரு தடவை ஜடைவில்லை கீழே விழுந்துவிட்டது. பாஸ்கரன் காந்திமதியுடன் கூடவே சென்றுகொண் டிருந்தால், அதை எடுத்து அவளிடம் கொடுத்து, "இன்னும் எத்தனை தடவை இதை இப்படிப் போட்டுக்கொண்டே இருப்பாய்?" என்று கேட்டான்.

"எடுத்துக் கொடுப்பதற்கு நீங்கள் பக்கத்தில் இருக்கும் வரைக்கும்" என்று அவள் பதிலளித்தாள்.

இவ்விஷயத்தைப் பற்றிக் குறிப்பொன்று பின்னல் சேர்த்துக் கடிதத்தை வாசித்துப் பார்த்தான். அது மிக அழகாயிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அது பின் வருமாறு:

"குமாரி காந்திமதிக்கு,

வரும் கோடையில் பெங்களூருக்குச் சென்று சில தினங்கள் தங்கிவிட்டு வரும்படி என் தாத்தா எழுதியிருக்கிறார். அங்கு வருவதாக யோசனை. உடனே பதிலை எதிர்பார்க்கிறேன்.

அன்புள்ள
பாஸ்கரன்."

பின் குறிப்பு: உன் ஜடைவில்லை பத்திரமாக இருக்கிறதா? நான் வரும் வரைக்கும் அதைப் பாதுகாத்துக் கொள். அப்புறம் அது என் பொறுப்பு.

கடிதத்தை மீண்டும் மீண்டும் பல தடவைகள் வாசித்துப் பார்த்துவிட்டு, கடைசியில் அதை உறையிலிட்டு, விலாசம் எழுத ஆரம்பித்தான். உணர்ச்சிப் பெருக்கினால், முதலில் ஒரு

சிறிய கிறுக்கல் விழுந்துவிட்டது. ஆகையினால் அந்தக் கவரைத் தூர எறிந்துவிட்டு, இன்னொன்றை எடுத்து எழுதினான். ஆனால் அன்றிரவே அதைத் தபாலில் சேர்க்கவில்லை, முன்பு ஒரு கடிதத்தை அவசரமாகத் தபால் பெட்டியில் போட்டுவிட்டு, அவன் பட்ட கஷ்டங்கள் அவனுக்கு ஞாபகமிருந்தன. ஆகையினால் இக்கடிதத்தினாலும் ஏதாவது விபரீதம் விளைந்து விடக் கூடாதே என்று பயந்து, காலையில் எழுந்திருந்து, மறுபடியும் அதை ஒரு தடவை வாசித்துப் பார்த்து, அப்பொழுதும் அது நன்றாயிருந்தால் தபாலில் போடலாம் என்று நினைத்து, அப்படியே அதை மேஜையின்மீது வைத்துவிட்டுப் படுக்கச் சென்றான்.

அன்று அவனுக்குச் சரியான தூக்கமில்லை. கடிதத்தைப் பற்றியும், காந்திமதியைப் பற்றியும், அவனுடைய கல்யாணத்தைப் பற்றியும் பல தெளிவற்ற கனவுகள் அவனுடைய மனத்தைக் குழப்பின.

காலையில், மீண்டும் ஒரு தடவை கடிதத்தைப் படித்துப் பார்த்துவிட்டு உறைக்குள் போட்டு ஒட்டித் தபால் பெட்டியில் போட்டுவிட்டுத் தன் அறைக்கு வந்தவுடன், அங்கே தனக்காகக் காத்திருக்கும் ஒருவரைப் பார்த்துத் திடுக்கிட்டான். சற்று நேரம் அவனுக்குப் பிரமை பிடித்ததுபோலிருந்தது. அவனை அங்ஙனம் திடுக்கிடச் செய்தது யார்? வேறு ஒருவரும் இல்லை. மாரியப்ப செட்டியார்தாம்! அன்று காலை போட் மெயிலில் வந்து இறங்கியவர், நேரே ஹாஸ்டலுக்கு வந்திருந்தார்!



## அத்தியாயம் 10

# விசித்திரக் காதல்

பாஸ்கரனிடமிருந்து கடிதம் ஒன்றை வாங்கிக்கொண்டு மாரியப்ப செட்டியார் அன்றிரவே சென்று விட்டார். அவரிடம் அம்மாதிரி எழுதிக்கொடுக்க முதலில் பாஸ்கரனுக்கு இஷ்டமே இல்லை. ஆயினும் என் செய்வது?

"உங்கள் தாத்தா மிகவும் மனம் உடைந்திருக்கிறார்" என்றார் மாரியப்ப செட்டியார்.

அப்பொழுதுகூடப் பாஸ்கரன் ஒன்றும் பேசாமல் மௌன மாய்த்தான் இருந்தான்.

"இவ்வளவு தூரம் அவனுக்கு எல்லாம் செய்தும், கடைசியில் 'என் கல்யாணத்தைத் தீர்மானிக்க உனக்கு என்ன அதிகாரம்? என்றுதான் ஐயா, எழுதிவிட்டான். என் மகனா யிருந்தால் இப்படி எழுதுவானா, ஐயா?' என்று அவர் கேட்ட போது எனக்கே வருத்தமாயிருந்தது" என்று மாரியப்ப செட்டியார் மேலும் கூறினார்.

அதோடு அவர் நிற்கவில்லை.

"அவ்வளவு பெரிய மனிதர் என்னைப் பார்த்து, 'மாரியப்ப செட்டியாரே, எனக்குப் பிள்ளை இல்லையே என்று ஊரார் எல்லாரும் வருத்தப்படுகிறார்கள். ஆனால் உண்மையாக இன்று உமக்குச் சொல்லுகிறேன். இது வரைக்கும் எனக்கு அந்த வருத்தம் சிறிதும் இருந்ததில்லை. இப்பொழுதுதான் நமக்கும் ஒரு பிள்ளையை ஈசன் கொடுத்தானில்லையே என்ற வருத்தம் என் மனத்தை வாட்ட ஆரம்பித்திருக்கிறது' என்று அழாக்குறை யாக அவர் சொல்லியபோது, என்னால் தாங்க முடியவில்லை" என்றார்.

பாஸ்கரனுடைய கண்கள் கலங்கின.

"எனக்காகவோ, என் பெண்ணுக்காகவோ இல்லா விட்டாலும், அவருக்காகவாவது உங்களை ஒரு முறை பார்த்து விட்டுப்போகலாம் என்றுதான் வந்தேன்" என்று மாரியப்ப செட்டியார் இறுதியாகக் கூறினர்.

பாஸ்கரனுக்கு வேறு ஒரு வழியும் தென்படவில்லை. கல்யாணத்திற்குத் தான் இணங்குவதாகக் கடிதம் ஒன்றை எழுதி, மாரியப்ப செட்டியாரிடம் கொடுத்தான்.

அவன் திருப்பதி செல்வதற்கு முன்பு எக்காரியம் நடக்காதா என்று ஏங்கினனே, அதே காரியம் நடப்பதற்கு இப்பொழுது ஒரு சந்தர்ப்பம் வாய்த்தபோது, அவன் மிக்க வருத்தமே அடைந்தான். எல்லாம் தான் யோசனையின்றி எழுதிய அக்கடிதத்தின் விளைவே என்று தன்னை நொந்து கொண்டான்.

சில நாட்களுக்குப் பின் அவனுக்கு ஒரு விஷயம் தெரிந்தது. மாரியப்ப செட்டியார் சாத்தூருக்குச் சென்ற பொழுது, "பாஸ்கரன் கல்யாண விஷயமாக இனி என்னிடம் ஒன்றும் பேசவேண்டாம்" என்று சந்தநாதஞ் செட்டியார் முடிவாகக் கூறிவிட்டார். இந்தச் சமாசாரம் பாஸ்கரனுக்கு எட்டிய போது, அவன் மிக்க சந்தோஷம் அடைந்தான்.

பரீக்ஷை முடியும் தேதியையும், அவன் பெங்களூருக்குப் புறப்படும் நாளையும் வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். அதைப் போலவே மற்றோர் உள்ளமும் அத் தினத்தை மிகுந்த ஆத்திரத்துடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது என்பதை அவன் நேரில் பார்க்காவிட்டாலும், ஊகிக்க முடிந்தது.

இப்படி யிருக்கையில், பரீக்ஷை முடிந்ததும் நேரே ஊருக்குப் புறப்பட்டு வரும்படி அவனுடைய தாத்தாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அவன் பெங்களூருக்குச் செல்ல நினைத்திருப்பதைப் பாஸ்கரன் தாத்தாவுக்குத் தெரிவித்தான்.

ஓர் அவசர வேலை இருப்பதாகவும், பெங்களூருக்குப் பின்னல் போய்க்கொள்ளலாமென்றும் உடனே தவருது புறப் பட்டு வருமாறும் மீண்டும் கடிதம் வந்தது.

பரீக்ஷை முடிந்தவுடன் அவன் ஊருக்குச் சென்று பார்த்த பொழுது, எந்த அவசர ஜோலியும் அவனுக்காகக் காத்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. குடும்ப விஷயங்க ளெல்லாம் எப்பொழுதும் போல் நடந்துகொண் டிருந்தன. வியாபாரச் சக்கரம் சற்று வேகமாகவே சுழன்றுகொண் டிருந்தது. என்ன அவசரத்திற்காக அவன் வருவிக்கப் பட்டான் என்பது அவனுக்கு விளங்கவில்லை.

அன்று அவன் சாப்பிட்டுக்கொண் டிருக்கும்போது, அவனுடைய பாட்டி அவனை நோக்கி, "ஏண்டாப்பா, உனக்குத் தான் காகிதம் எழுதத் தெரியும் என்று வரிந்து வரிந்து ஒண்ணரை முழத்துக்கு எழுதினுயே, அந்தப் பெண்ணுக்கு என்ன குறை என்று எழுதினுய்?" என்று கேட்டாள்.

"பெண்ணைப்பற்றிக் குறைவாய் நான் என்ன எழுதி னேன்?" என்ருன் பாஸ்கரன்.

"தங்கச் சிலை போன்ற பெண், வீட்டிற்கு லக்ஷ்மியாயிருப் பாள் என்று நாங்கள் எல்லாம் சந்தோஷமாயிருக்கிருேம். வருதே அங்கேயிருந்து ஒண்ணரை முழத்துக்கு ஒரு காகிதம்! போ! போ! உன் தலைவிதி அவ்வளவுதான்! கறுப்பனுக்கு ஏற்ற சிவப்பாயி எவளாவது கிடைப்பாள். கட்டிக்கொண்டு கிட. எங்களுக்கு என்ன?" என்ருள் பாட்டி. அவன் சாப்பிட்டு முடிந்தவுடன், பாஸ்கரனுடைய உறவினர் ஒருவர் வீட்டிற்கு வந்தார். பாஸ்கரனை அவர் பார்த்தவுடன், "வாடாப்பா! எப் பொழுது வந்தாய்? உன் காகிதத்தை நானும் பார்த்தேண் டாப்பா" என்ருர்.

பாஸ்கரன் ஒன்றும் சொல்லத் தோன்ருமல், அசட்டுப் பார்வை பார்த்தான்.

"பேரனுடைய கெட்டிக்காரத்தனத்தை உங்களிடமும் காட்டிவிட்டதா?" என்ருர் பாட்டி.

"இவன் தலையில் எழுதியது அவ்வளவுதான். அவளுக்கு எந்த அதிருஷ்டசாலி எங்கே பிறந்திருக்கிருனே?" என்ருர் உறவினர்.

"பெண்ணை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள் பாட்டி.

"நாலு மாசத்துக்கு முன்புகூடச் சொக்கஞ்செட்டி வீட்டுக் கல்யாணத்துக்கு அது இங்கே வந்திருந்ததல்லவா? கிளி போன்ற பெண். இவனுக்குக் கொடுத்து வைக்கவில்லை" என்ருர்.

"அவனவன் எழுத்துப்படித்தானே எல்லாம் நடக்கும். நம்ம செயலில் என்ன தம்பி இருக்கிறது?" என்ருள் பாட்டி.

அவனல் அங்கிருக்க முடியவில்லையோ என்னவோ அவரிடம் விடைபெற்றுக்கொண்டு பாஸ்கரன் வெளியில் சென்ருன்.

அவன் தன்னுடைய மாமா வீட்டிற்குச் சென்ருன். அங்கும் அநேக பேச்சுக்களுக்கிடையில் இந்தப் பேச்சும் வந்தது. "தங்கமான பெண். அதற்காகத்தான் பார்க்கிறது. இல்லையானல் வேறென்ன?" என்று அவனுடைய அத்தை கூறினள்.

அப்பொழுது அங்கு வந்து சேர்ந்த அவனுடைய மாமா, "பையனுக்குள்ள புத்தி லக்ஷணம் அவ்வளவுதான்! இனி இவ்வளவு நல்ல பெண் கிடைக்கவாபோகிறது?" என்ருர்.

"அதைச் சொல்லவேண்டாம் நீங்கள், அவளைப்போல் இன்னும் எத்தனையோ உலகத்தில்! பாஸ்கரனுடைய படிப்பிற்கும் குணத்திற்கும் எத்தனையோ பேர், 'நான் நீ' என்று பெண் கொடுக்க வருவார்கள். இவ்வளவு பெரிய உலகத்தில் இவனுக்கு ஏற்ற ஒரு பெண்தான் கிடைக்காமற் போகுதாக்கும்?" என்ருள் அத்தை.

"கிடைக்கும், கிடைக்கும்! அதையும் பார்க்கத்தானே போகிருேம்!" என்ருர் மாமா.

இங்ஙனம் அன்று அவன் சென்ற இடங்களிலெல்லாம் இந்தப் பேச்சு ஏதாவது ஓர் உருவத்தில் வந்துகொண் டிருந்தது.

அவனுடைய பழைய நண்பர்கள் எல்லாம் அவனைக் குதூகலமாய் வரவேற்று, அவனுக்கு எப்பொழுது கல்யாணம் என்று விசாரிக்கலானார்கள்.

சாயந்தரம் பாஸ்கரன் சிற்றுண்டி அருந்திக்கொண்டிருந்த போது, இளம் வயதுள்ள பெண் ஒருத்தி வீட்டிற்குள் நுழைந்தாள். அவள் எப்பொழுதும் பாஸ்கரனைக் கேலி செய்து கொண்டே இருப்பாள்.

“பாஸ்கரன் வந்திருக்கிறானாமே, பாட்டி?” என்று கேட்டாள்.

“சாப்பிட்டுக்கொண்டிருக்கிறான்” என்றாள் பாட்டி.

“ஏண்டாப்பா பாஸ்கரா, இவளைவிட......எந்த” என்று சொல்லிக்கொண்டே சாப்பாட்டு அறைக்குள் நுழைந்தவள் பாஸ்கரனைக் கண்டதும் திடுக்கிட்டு, வெட்கிப் பின்னடைந்தாள். அவள் பல விதங்களில் கேலி செய்து விளையாடிக்கொண்டிருந்த சிறுவன் பாஸ்கரன் இவ்வளவு பெரிய வாலிபனாயிருப்பான் என்று அவள் நினைக்கவில்லை போலும்!

இவர்களுடைய பேச்சுக்கள் எல்லாம் பாஸ்கரனுடைய உள்ளத்தில் ஒரு பெரிய புயலைக் கிளப்பிவிட்டிருந்தன. அணையும் தறுவாயில் அவனுடைய உள்ளத்திலிருந்த ஒரு தீப்பொறி இப்பொழுது ஜ்வாலைவிட்டு எரிய ஆரம்பித்தது. ‘அவனுடைய நஷ்டம் பெரிதோ, ராஜேசுவரி எப்பேர்ப்பட்ட அழகியோ?’ என்று அவனுடைய உள்ளத்தில் ஓர் ஏக்கம் தோன்றியது.

அன்றிரவு அவன் தாத்தாவுடன் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

“என்றைக்குப் புறப்படுவது?” என்றார் தாத்தா. பாஸ்கரன் ஒன்றும் தெரியாமல் விழித்தான்.

“எங்கே?” என்று பாட்டி கேட்டாள்.

“கல்யாணத்திற்குத்தான். வேறு எங்கே?” என்றார் தாத்தா.

"பெண் வீட்டிலா கல்யாணம்? மதுரையில்தானே முகூர்த்தம்? என்றைக்கு வைத்திருக்கிறது?"

"நன்ருய்க் கேட்டாய்! உனக்கு எல்லாம் மறந்துவிட்டது போலும். எல்லாம் நாளன்றைக்குத்தான். நெருங்கிவிட்டது. புறப்படவேண்டியதுதான்" என்ருர் தாத்தா.

"புறப்படுவோம்" என்ருள் பாட்டி.

"நானும் வரவேண்டுமா? நான் எதற்காக? நீயும் பாஸ்கரனும் போய்விட்டு வாருங்கள்."

"நன்ருய்ச் சொன்னீர்கள்! நம் வீட்டில் என்ன காரியம் என்ருலும், அவர்கள் குடும்பத்தோடு வந்து போயிருக்கிருர்கள். நீங்கள் வராவிட்டால் கோபித்துக்கொள்வார்கள். வேண்டுமானல் நீங்கள் முகூர்த்தத்துக்கு மட்டும் இருந்துவிட்டு, மறு ரெயிலில் வந்துவிடுங்கள்" என்ருள்.

"சரி, நாளை இரவு வண்டியில் போகலாம். எல்லாம் தயார் பண்ணிவை" என்ருர் தாத்தா.

பின்பு பாட்டியை விசாரித்துப் பாஸ்கரன் விஷயத்தை அறிந்துகொண்டான். உறவினர் வீட்டுக் கல்யாணம் ஒன்றுக்கு அவர்கள் மதுரை செல்ல இருந்தனர். இந்தச் சமாசாரம் ஏனே அவனுடைய உள்ளத்தில் மிகுந்த கிளர்ச்சியை உண்டு பண்ணியது! அங்கு அவன் ராஜேசுவரியைப் பார்ப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைக்குமா? எல்லோராலும் புகழப்படும் அவள் எப்பேர்ப் பட்டவளாக இருப்பாள்? அவளும் அந்தக் கல்யாண வீட்டிற்கு வருவாளா? அவளைப் பார்த்தாலும் என்ன பலன் ஏற்படப் போகிறது? அவனுடைய கல்யாண விஷயந்தான் முடிந்து விட்டதே என்று பலவிதமான எண்ணங்கள் அவனுடைய உள்ளத்தைத் துளைக்க ஆரம்பித்தன. அவனுடைய உள்ளக்கோயிலில் ஒரு பெண் ஏற்கனவே வீற்றிருக்கிருளே. இப்பொழுது இவளும்.........? ஆயினும் ராஜேசுவரியைப் பார்க்க முடியுமா, அவளை அடைவதற்கு ஏதாவது வழி உண்டா என்று அவன் மனம் ஏங்க ஆரம்பித்தது. அது ஏன்? இதென்ன விசித்திரக் காதல்?

## அத்தியாயம் 11

# கண்கள் சந்தித்தன

கல்யாண வீடு ஒரே கோலாகலமாக இருந்தது. ஆடவரும் பெண்டிரும் இங்கும் அங்கும் அவசர அவசரமாக ஏதாவது ஒரு வேலையை முன்னிட்டுப் போய்க்கொண்டும் வந்து கொண்டும் இருந்தார்கள். காலை ஒன்பது மணிக்கு முகூர்த்தம். அதற்குள் நடக்க வேண்டிய காரியங்களெல்லாம் நடந்தாக வேண்டும்.

"காலை முகூர்த்தம் என்றாலே இப்படித்தான் அவசரம்" என்றார் ஒருவர்.

"இரவு ஒன்பது மணிக்குத்தான் முகூர்த்தமாயிருக் கட்டுமே. அப்பொழுதும் இந்த அவசரம் இருக்கத்தான் இருக்கும்" என்றார் இன்னொருவர்.

"என்தான் இத்தனை சடங்குகளை வைத்தார்களோ, தெரிய வில்லை?" என்றார் ஒருவர்.

இந்தக் கேள்விக்குப் பதில் அளிப்பது தம் தனிக் கடமை என்று கருதிய ஒரு கிழவனார், "அர்த்தமில்லாமலா வைத்திருக் கிறார்கள்?" என்று சொன்னார்.

"அத்தோடு சோறுபோட அஞ்சின கஞ்சப் பயல் களெல்லாம் ஒரு நாள் கல்யாணம் என்று வைத்துவிட்டான்கள் அல்லவா? எழு நாள் காரியங்களை ஒரு நாளில் செய்யவேண்டு மானால், அவசரப்படாமல் என்ன செய்வது?" என்றார் கூட்டத்தில் ஒருவர்.

"பிள்ளை இல்லாதவர்கள் எல்லாம் இந்த விஷயத்தைப் பற்றிப் பலமாகவே பேசுவார்கள்" என்று இன்னொருவர் சுட்டிக் காட்டினார். ஒரு நாள் கல்யாணத்தைப்பற்றிப் பேசிய நபருக்குப்

பிள்ளை இல்லை என்பது அக்கூட்டத்தில் அநேகருக்கு அப்பொழுதுதான் தெரிந்தது!

"பரதேசம் போன மாப்பிள்ளையை என்னப்பா, இன்னும் காணோம்?" என்றார் கல்யாண வீட்டுக்காரர் ஒருவர் கம்மிய குரலில். அவருக்குப் பேசிப் பேசித் தொண்டை கட்டிவிட்டது.

"அவன் உண்மையிலேயே பரதேசம் போய்விட்டானோ என்னவோ? போய்ப் பாருங்கள் ஐயா!" என்றார் இன்னொருவர்.

"ஆமாண்டாப்பா, இந்தக் காலத்துப் பிள்ளைகள் எல்லாம் அப்படித்தான் இருக்கிறார்கள். முகூர்த்தம் எல்லாம் தீர்மானமாகிய பிறகு எவனோ ஒரு பிள்ளையாண்டான் கல்யாணம் வேண்டாமென்று பரதேசம் போய்விட்டானாமே; நிஜந்தானடாப்பா?" என்றார் கிழவர்.

எல்லோரும் சிரித்தார்கள். பாஸ்கரனுடைய நண்பன் ஒருவன், "அவன் பரதேசம் போகவில்லை, தாத்தா. இதோ உட்கார்ந்திருக்கிறான். இவன்தான் அந்தப் பிள்ளையாண்டான். அந்தப் பெண்ணை இப்பொழுது கல்யாணம் பண்ணிவைக்க மாட்டார்களா என்ற ஏக்கத்துடன் இருக்கிறான்" என்றான்.

பாஸ்கரன் யோசனையில் ஆழ்ந்திருந்தான். அவன் எந்த நோக்கத்துடன் இந்தக் கல்யாணத்திற்கு வந்திருந்தானோ, அது கைகூடுமா என்று தீவிரமாகச் சிந்தித்துக்கொண் டிருந்தபோது, இந்தத் தமாஷ் ஏற்படவே, அவனுடைய சிந்தனை கலைந்தது.

அந்தச் சமயம் பக்கத்தில் நின்றுகொண் டிருந்த கிழவி ஒருத்தி அவனை க்ஷேமம் விசாரிக்க ஆரம்பித்தாள். "வாடாப்பா பாஸ்கரா, நீதானடா பாஸ்கரன்? சிறு பிள்ளையில் பார்த்தது; அடையாளம்கூடத் தெரியவில்லை. பாட்டிக்கு உன்னைப் பார்க்க வேணும், பார்க்கவேணும் என்று வெகு நாட்களாக ஆசை" என்று மிகுந்த வாத்ஸல்யத்துடன் பேசவே, பாஸ்கரன் எழுந்து அந்தப் பாட்டியின் பக்கம் சென்றான்.

"ஏண்டாப்பா பாஸ்கரா, எல்லோரும் என்னவோ சொல்கிறார்களே நிஜந்தானா?" இப்படிப் பாட்டி சொல்லும்போதே

அவளுடைய குரல் கம்மி, கண்கள் கலங்கின. மேலும் சொல்ல லுற்ருள்: "தாயில்லாப் பிள்ளையாகத் தவித்துக் கிடக்கறியே தம்பி! தாத்தா புண்ணியவான் கல்யாணம் பண்ணி வைக்கிறேன் என்று சொன்னுல் நீ வேண்டாமென்று பிடிவாதம் செய்வாய்? பாட்டி சொல்கிறேன் கேள். உனக்கு நல்லத்துக்குத்தான் சொல்வேன். பெண் தங்கமானவள். அவள் தகப்பன் உனக்கே தான் கல்யாணம் பண்ணுவதென்று வேறு மாப்பிள்ளைகூடப் பார்க்காமல் இருக்கிருன். சிவனே என்று நீ கல்யாணம் பண்ணிக்கொள். உன்னைப் பிள்ளையுங் குட்டியுமாகப் பார்த்து விட்டு நான் சாகவேணுமடா தம்பி," என்ருள்.

"அதற்கென்ன பாட்டி, பார்த்துக்கொள்வோம்" என்ருன் பாஸ்கரன்.

பெண்ணை நீ வேண்டுமானுலும் பார். இந்தக் கல்யாணம் அவளுக்கும் சொந்தந்தான். இங்கே கொஞ்ச நேரத்தில் வருவாள். ஒருவேளை இப்பொழுதே வந்திருந்தாலும் வந்திருப்பாள்" என்று பாட்டி சொல்லிக்கொண் டிருக்கும்போதே, அவளை யாரோ உள்ளிருந்து கூப்பிடவே போய்விட்டாள்.

பாஸ்கரன் மீண்டும் அவனிருந்த இடத்திற்குச் சென்று உட்கார்ந்தான். அவள் வந்துவிட்டாளா? பெண்கள் நிறைந்த அக்கூட்டத்தில் அவளை அவன் எங்ஙனம் அறிந்துகொள்வது? அவள் இன்னரென்று அறிந்துகொள்வதற்கு ஏதாவது அடையாளம் கிடைக்குமா?

"கோடிக்கணக்கான இந்த நக்ஷத்திரக் கூட்டத்தில் என் காதலர் வந்தால், அவரை நான் எங்ஙனம் தெரிந்துகொள்வேன், தோழி?" என்று எங்கிஞள் ரோகிணி.

"அவர் வந்தால் தானுகவே தெரியும் அம்மா, அதற்காகக் கவலைப்படவேண்டாம்" என்று தேற்றினுள் தோழி.

"அதெப்படித் தெரியும், தோழி? நீ அவரை முன்பு பார்த்திருக்கிருயா?" என்று கேட்டாள் ரோகிணி.

"நான் பார்த்ததில்லை. இருந்தாலும் அவர் வந்தால் தெரியும் என்று எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது."

"ஐயோ! எனக்குத் தெரியாதே. நீதான் எனக்கு உதவி செய்யவேண்டும். நான் உன்னைத்தான் நம்பியிருக்கிறேன். தோழி, அவர் வந்தவுடன் எனக்குக் காட்டு" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டாள் ரோகிணி.

பூர்ண சந்திரன் உதயமானான். ரோகிணிக்கு அவனைக் காட்டுவதற்காகத் தோழி பக்கத்தில் திரும்பினாள். அங்கே அவளைக் காணவில்லை. "அதோ! என் காதலர் வந்துவிட்டார்!" என்று கத்திக்கொண்டு அவரை வரவேற்பதற்காக முன்னால் அவள் சென்றுகொண் டிருந்தாள்!

அதுபோல் தனக்கும் ராஜேசுவரியின் வருகை தானாகவே தெரிந்து விடுமா என்று யோசித்துக்கொண் டிருந்தான் பாஸ்கரன்.

அவன் இங்ஙனம் யோசித்துக்கொண் டிருக்கையில், புதுப் புடைவை உடுத்திய இளம் பெண் ஒருத்தி, பட்டின் சலசலப்புடன் மிக்க நாணத்துடன் கல்யாண வீட்டிற்குள் நுழைந்தாள். அவள் யார்? பாஸ்கரனுடைய நண்பர்கள் எல்லாம் ஏன் அவனை அப்படிக் கிள்ளவும் அடிக்கவும் செய்கிறார்கள்?

"எப்படியடா, பார்த்தாயா?" என்றான் ஒரு நண்பன்.

அவ்விள நங்கை அதற்குள் வீட்டிற்குள் சென்றுவிட்டாள். அவள் மீண்டும் வருவாளா? எப்பொழுது?

அந்த நிமிஷத்திலிருந்து பாஸ்கரனுடைய கண்கள் அடிக்கடி வீட்டு வாசலையே நோக்க ஆரம்பித்தன.

மணவறையில் மாப்பிள்ளை வந்து உட்கார்ந்திருந்தார். மணவறைக்கு முன்னால் ஆடவர்களும் பின்னால் பெண்டிரும் கூடலானார்கள். 'அவள் எப்பொழுது வருவாள்? வருவாளோ, வரமாட்டாளோ!' என்று நினைத்து, வீட்டு வாசலையே நோக்கிக்கொண் டிருந்தபோது, பாஸ்கரனுடைய பார்வை,

அப்பொழுதுதான் வீட்டிற்குள்ளிருந்து வந்துகொண் டிருந்த ஓர் இளம் பெண்ணின் கண்களைச் சந்தித்தது. அவள் சட்டென்று கூட்டத்திற்குள் புகுந்துவிட்டாள். அவள்தான் ராஜேசுவரியா? அக்கூட்டத்தில் அவனுடைய கண்கள் அவளையே நாடின. என்ன அதிசயம்? அவளும் அவனைத்தான் தேடிக்கொண் டிருந்தாள்! நான்கு கண்களும் மீண்டும் சந்தித்தன. அவைகளில் இரண்டு உடனே கீழ்நோக்கின!

இவள்தானா? சந்தேகத்தை எப்படி நிவர்த்தி செய்து கொள்வதென்று பாஸ்கரன் நினைத்துக்கொண் டிருக்கையில், எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. குறும்புக்காரப் பெண் ஒருத்தி பாஸ்கரனைப் பார்த்துக்கொண்டே, "இவள்தான் ராஜேசுவரி!" என்று சொல்லி, ராஜேசுவரியின் முதுகில் ஓர் அடி கொடுத்தாள். அவ்வளவுதான், ராஜேசுவரி வீட்டிற்குள் ஓடி விட்டாள்.

கூட்டத்திலிருந்த கிழவனார் இந்தக் காலத்துக் காதல் கல்யாணங்களைப் பற்றிக் 'கோட்டா' செய்யத் தொடங்கினர். அப்புறம் பாஸ்கரன் ஏன் அங்கிருக்கிறான்? அவனும் எழுந்து வெளியில் போய்விட்டான்.

அன்று சாயங்காலம் அவன் சில நண்பர்களுடன் பேசிக் கொண்டு, கல்யாண வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த பொழுது, மாரியப்ப செட்டியார் திடீரென்று அங்கு வந்து, "வாருங்கள், காபி சாப்பிட்டுவிட்டு வரலாம்" என்று கூப்பிட் டார். பாஸ்கரனுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அவனுடைய மனம், போகும்படி அவனை உந்தித் தள்ளியது. ஆனால் அவனுடைய உடல்மட்டுந்தான் சற்று பின்வாங்கிற்று. அதைத்தான் அவனுடைய நண்பர்கள் பலவந்தமாக இழுத்துக் கொண்டு சென்றார்களே! அப்புறம் ஏது ஆக்ஷேபம்?

யாவரும் மாரியப்ப செட்டியார் வீட்டிற்குச் சென்று, ஏற்கனவே தயாராகப் போடப்பட்டிருந்த இலைகளுக்கு முன்னால் உட்கார்ந்தார்கள். அடுத்த அறையில் ஏதோ 'கசு பிசு' என்று

சத்தம் கேட்டது. 'ராஜேசுவரியைப் பரிமாறும்படி சொல்கிறார்கள் போலும்! அவள் வருவாளா?' என்று பாஸ்கரன் நினைத்தான். கடைசியில் அவன் ஏமாற்றம் அடையவே நேர்ந்தது. அவள் வரவில்லை. அவளுடைய தங்கைதான் பரிமாறினாள்.

ஒரு சமயம் பாஸ்கரன் ஏதோ சொல்லிக்கொண் டிருந்த போது, தற்செயலாய் அதே சமயம் ராஜேசுவரியும் ஏதோ பேசும் சத்தம் கேட்டது. பாஸ்கரனுடைய உள்ளம் துணுக்குற்றது. அவனுக்கு ஒருவிதமான உணர்ச்சி உண்டாயிற்று.

அன்று விளக்கு வைக்கும் நேரத்தில், மாரியப்ப செட்டியார் வீட்டில் தீபலக்ஷ்மியின் ஆராதனை வெகு விமரிசையாய் நடந்தது! ஏறக்குறைய அதே நேரத்தில், பாஸ்கரன் தன்னுடைய நண்பர்கள் ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல், ஒருவருக்கும் தெரியாமல் எங்கோ போய்க்கொண் டிருந்தான். அடிக்கடி தன்னை யாராவது கவனிக்கிறார்களா என்று திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே செல்வதைப் பார்த்தால், அவன் ரகசிய அலுவலாகப் போவதுபோல் தோன்றியது. எங்கே அவ்வளவு ரகசியமாகச் சென்றுகொண் டிருந்தான்? கையில் பூமாலைகூட வைத்திருந்தான்! சூ! இவ்வளவுதானா? வேறு எங்கும் இல்லை. மீனாக்ஷி அம்மன் கோவிலுக்குத்தான்! அவனுக்கு இதுவரையில் கோயிலுக்குப் போகும் வழக்கம் இல்லை. அன்றைக்கு ஏனோ கோயிலுக்குச் செல்வது அவனுக்கு அவசியமாகத் தோன்றியது. கேட்டவருக்குக் கேட்ட வரம் எல்லாம் கொடுத்தருளும் அம்மை மீனாக்ஷியிடம் அவன் என்ன வரம் கேட்கப் போகிறான்? அவன் கேட்கும் வரம் கொடுக்கப்படுமா? காந்திமதியா? ராஜேசுவரியா? ராஜேசுவரிக்கு முன்னால் காந்திமதியின் காந்தி மங்கி விட்டதா?

# அத்தியாயம் 12

# பாட்டியும் தாத்தாவும்

"அவன்தான் சிறுபிள்ளை; சிறுபிள்ளைத்தனமாக என்னவோ எழுதிவிட்டான் என்றால், நீங்கள் ஏன் இப்படிப் பிடிவாதம் செய்கிறீர்கள்? இது நன்றாயிருக்கிறதா?" என்று கேட்டாள் பாட்டி மீனாக்ஷி.

சந்தநாதஞ் செட்டியார் சாப்பிட்டுக்கொண்டிருந்தார்.

மதுரையிலிருந்து வந்ததிலிருந்து ராஜேசுவரியின் நினைவாகவே இருந்தது பாஸ்கரனுக்கு. அவன் ஊண் உறக்கங் கூடச் சரியாகக் கொள்ளவில்லை. தாத்தாவினிடம் தனது உள்ளக் கிடக்கையை வெளியிடுவதற்கு அவனுக்குத் தைரியம் வரவில்லை. எங்ஙனம் வரும்? பாட்டியினிடம் சொல்லலாமென்றாலோ, அதற்கும் அவனுக்கு வெட்கமாயிருந்தது. நண்பர்களின் மூலம் தெரிவிப்பதற்கும் அவனுக்கு மனமில்லை. தாத்தா இவ்விஷயத்தைப்பற்றி முற்றும் மௌனம் சாதித்தார். இதையெல்லாம் உணர்ந்துகொண்ட பாட்டி அவனுக்காகப் பேச முன் வந்தாள்.

"அவன் கல்யாணத்தைப் பற்றிப் பேச நமக்கென்னடி அதிகாரம் இருக்கிறது, மீனாக்ஷி? அவனுடைய அப்பன் இருக்கிறான். பாட்டன் இருக்கிறான். அவனைப்பற்றி அக்கறை எடுத்துக்கொள்வதற்கு, நாம் யார் என்று கேட்கிறேன்."

"அப்பனும் பாட்டனும் இருந்தால், அங்கே அனுப்பிவிட வேண்டியதுதானே? இங்கே ஏன் வைத்திருக்கிறீர்கள்? இப்போது மதராசில் ஹோட்டல் சோறில்லாமல், வீட்டுச் சோறு போட்டு அவனைக் காப்பாற்றினீர்கள்? அதுபோல் அங்கேயும் சாப்பிட்டுவிட்டுப் போகிறான்?"

"அனுப்பு, நானு வேண்டாம் என்கிறேன்?"

"அனுப்பத்தானே? சரி! அடே பாஸ்கரா, கடையில் ஐந்து ரூபாய் வாங்கிக்கொண்டு இன்றே திருமங்கலம் போய்ச் சேருடா, இங்கே இருக்கவேண்டாம், அப்புறம் பார்க்கலாம், இவர் படுகிற பாட்டை!"

"கல்யாணம் பண்ணிக்கொள்பவன் பால்ய விவாகம் ஆகாதென்று பேசாமல் இருக்கிறான். உனக்கு ஏன் இத்தனை ஆத்திரம் என்று எனக்குத் தெரியவில்லையே."

"பால்ய விவாகம் செய்ய மாட்டேன் என்று ஒண்ணரை முழத்துக்கு எழுதினவன்தான் இப்பொழுது அவளைக் கல்யாணம் பண்ணினுலொழியச் சாப்பிடமாட்டேன் என்று மாடியில் தவங் கிடக்கிறான்" என்று சொல்லிச் சிரித்தாள் மீனுக்ஷி.

"எனக்கு இன்னொரு யோசனை தோன்றுகிறது மீனுக்ஷி. சொன்னுல் நீ கோபித்துக்கொள்ளமாட்டாயே?"

"சொல்லுங்கள்."

"இவனே, சிறு பெண்ணைக் கல்யாணம் பண்ணுவதில்லை என்று பிடிவாதம் செய்கிறான்!"

"சிறு பெண்ணைக் கல்யாணம் பண்ணுவதில்லை என்று கிழவியையா கட்டிக்கொள்ளப் போகிறானும்!" என்று மீனுக்ஷி சிரித்தாள்.

சந்தநாதஞ் செட்டியார் மேலும் சொல்லலுற்றார்:

"மாரியப்ப செட்டியார் படும் பாட்டைப் பார்த்தாலோ பரிதாபமாயிருக்கிறது. நானே அந்தப் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டால் என்னவென்று தோன்றுகிறது. எனக்கு அப்படி என்ன வயசாகியாவிட்டது? பிள்ளையில்லாத வருத்தம் ஒன்றும் இருக்கத்தானே இருக்கிறது?"

"ராஜேசுவரி வீட்டிற்கு வந்தால், நமக்குப் பிள்ளையில்லாத வருத்தம் கொஞ்சம் தீரத்தான் தீரும். நீங்கள் மட்டுமல்ல, நானும் அவளைக் கொஞ்சிக் குலாவத்தான் செய்வேன். ஆனுல்

அவள் பிள்ளையாக இருக்க மாட்டாளே. பேத்தியாக அல்லவா இருப்பாள்!"

"நீ என்னடி அம்மா, பேரனுக்குக் கல்யாணம் பண்ண வில்லை என்று எனக்குச் சோறுகூடச் சரியாய்ப் போட மாட்டேன் என்கிறாய்! எவ்வளவு நேரமாய் வெறும் இலையைப் பார்த்துக்கொண் டிருக்கட்டும்? சோற்றைப் போடு!"

"பாருங்கள், தாயில்லாப் பிள்ளைக்குத் துரோகம் நினைத் தால், இப்படித்தான் வயிற்றுக்குச் சோறு கிடைக்காது!"

சந்தனாதஞ் செட்டியாரிடம் இப்படி வேடிக்கையாகவும் கண்டிப்பாகவும் பேசக்கூடியவள் மீனாக்ஷி ஒருத்திதான். அன்று அவர் சாப்பிட்டுவிட்டு, வீட்டிலிருந்து கடைக்குக் கிளம்பிய போது, "பாரேன், கல்யாணம் பண்ணுகிறேனா இல்லையா என்று?" எனச் சொல்லிக்கொண்டே வெளியேறினார்.

பாஸ்கரன் அன்று சாயந்தரம் பெட்டியடிக் கணக்குப் பிள்ளையிடம் ஒரு பையனை அனுப்பித் தான் மறுநாள் காலையில் பெங்களூருக்குச் செல்வதாகவும், தனக்கு நூறு ரூபாய் அனுப்பும் படியும் சொல்லிவிட்டான்.

சந்தனாதஞ் செட்டியார் கடைக்குப் போய்ச் சேர்ந்த பொழுது, அங்கே அவருக்காக ஐந்தாறு வியாபாரிகள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

"கல்யாணத்திற்கு எந்த மேளக் கோஷ்டி வரவழைக்கலாம், சொல்லுங்கள் ஐயா?" என்றார்.

"எது, கல்யாணம் நிச்சயமாகிவிட்டதா?" என்று எல்லோரும் சந்தோஷத்துடன் கேட்டார்கள்.

"அதை நிச்சயம் செய்ய எவ்வளவு நேரம் ஐயா, செல்லும்? நீங்கள் சொல்லுங்கள்" என்றார் சந்தனாதஞ் செட்டியார்.

உயர்தரமான மேளக் கோஷ்டியின் பெயர்கள் எல்லாம் அடிபட்டன.

"சரி, சாயந்தரம் சங்கீதக் கச்சேரி வைக்கலாமா? சதிர்க் கச்சேரி வைக்கலாமா?"

"கல்யாணம் எத்தனை நாள்?"

"ஏழுநாள்தான். அதில் என்ன சந்தேகம்?" என்றார் செட்டியார்.

"அப்படியானால் சங்கீதக் கச்சேரியும், சதிர்க் கச்சேரியும் மட்டும் எப்படிப் போதும்? ஒவ்வொரு நாளைக்கு ஒரு கச்சேரி தான். ஒரு நாள் சங்கீதம், இன்னொரு நாள் சதிர், இன்னொரு நாள் காலக்ஷேபம், அப்புறம் விகடம், நாகஸ்வரம், இப்படி நாளைக்கு ஒரு கச்சேரிதான்."

"ஓஹோ!" என்ற சந்தநாதஞ் செட்டியார், "இன்னொன்றும் மறந்துவிடக் கூடாது ஐயா, நல்ல பிரசங்கம் ஒன்றும் வைக்கவேண்டும்" என்றார்.

சந்தநாதஞ் செட்டியார் உள்ளத்தில் மட்டும் சிறிய கவலை ஒன்று இருந்தது. கல்யாணத்தை நிச்சயம் பண்ண எவ்வளவு நேரம் ஆகுமென்று சுலபமாகச் சொல்லிவிட்டாலும் யோசித்துப் பார்க்கையில் அது அவ்வளவு சுலபமல்ல என்று தெரிந்தது. மாரியப்ப செட்டியாரிடம் கல்யாணத்தைப்பற்றித் தாமே எப்படிப் பிரஸ்தாபிப்பது? அவராக வந்து கேட்டால் நன்றாக இருக்கும். விஷயமும் சுலபமாக முடிந்துவிடும். இங்ஙனம் அவர் கவலைப்பட்டுக்கொண் டிருக்கையில், மாரியப்ப செட்டியாரே சாத்தூருக்கு வந்துவிட்டார்! முகூர்த்தமும் நிச்சயிக்கப் பட்டது!

## அத்தியாயம் 13

# கல்யாணக் குதூகலம்

கல்யாணம் வெகு விமரிசையாக நடந்தது. சந்தநாதஞ் செட்டியார் ஏற்கனவே சொல்லியபடி ஏழு நாள் கல்யாணந்தான். ஏழு நாட்களும் ஏழு உத்ஸவ தினங்களாகவே இருந்தன. அந்தக் கல்யாணத்தில் மிக்க சந்தோஷமடைந்தவர் யார்? சந்தேகம் என்ன? சந்தநாதஞ் செட்டியார்தாம்! முகூர்த்த தினத்தன்று அவர் அங்கும் இங்கும் ஓடியாடி எல்லா வேலைகளையும் கவனித்ததைப் பார்த்தவர்கள் அவருக்குப் பால்யம் திரும்பிவிட்டதோ என்று நினைத்தார்கள். அன்றலர்ந்த ரோஜாவைப்போல் உவகை பூத்த முகத்துடன், அவர் அன்று புது மாப்பிள்ளை போலவே தோற்றமளித்தார். அவருடைய காரியங்களில் ஒரே ஆத்திரம் தோன்றியது. எல்லாம் அந்த அந்த நேரத்தில் முடிந்துவிடவேண்டுமே, முகூர்த்த நேரம் நெருங்கிவிட்டதே என்று துடிதுடித்துக்கொண்டு இருந்தார். "ஐயர் எங்கேயடா, இன்னுங் காணோம்?" என்று அதட்டுவார். "மணவறைக்கு வேண்டிய சாமானெல்லாம் தயாராய்விட்டதா? அந்தச் சமயத்தில் வந்து அது இல்லை, இது இல்லை என்று சொல்லக்கூடாது" என்று பெண்களைப் போய் விரட்டுவார். 'இவர் ஏன் இந்தக் குதி குதிக்கிறார்? இதில் இவருக்கு இத்தனை சந்தோஷமா?' என்று எல்லோரும் அதிசயித்தார்கள். "கிழவனாருக்குப் பாலியம் திரும்பியிருக்கிறது, ஐயா! உங்களுக்குத் தெரியாதா?" என்று சொல்லிச் சிலர் சிரித்தார்கள். கடைசியில் ராஜேசுவரியின் கழுத்தில் பாஸ்கரன் தாலியைக் கட்டிய பின்புதான் அவருடைய ஆத்திரமெல்லாம் அடங்கியது. அச்சமயம் அவர் முகத்தில் தோன்றிய சந்தோஷத்தைத் தெய்விக உவகை என்றுதான் சொல்லவேண்டும். தாம் நினைத்து

முயன்ற காரியம் அநேக விக்கினங்களுக்கப்புறம் வெற்றி பெற்றதனுல், அவருக்கு அத்தகைய சந்தோஷமா? இருக்கலாம். ஆனால் அதைவிட, அவர் எடுத்து வளர்த்துப் படிக்க வைத்த பிள்ளைக்கு, ஒரு நல்ல பெண் கிடைத்துவிட்டாள். இனி அவனுடைய வாழ்க்கை இன்பமயமாக இருக்கும் என்ற எண்ணமே அவருக்கு அளவு கடந்த ஆனந்தத்தை அளித்தது.

பாஸ்கரனும் அன்று மிக்க சந்தோஷமாகவே இருந்தான். அவனுடைய நண்பர்களிடமிருந்து அவனுக்கு அநேக வாழ்த்துச் செய்திகள் தந்திகளாகவும் கடிதங்களாகவும் வந்திருந்தன. அவைகளை எல்லாம் அவன் ஒவ்வொன்ருகப் பிரித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவைகளில் ஒரு கடிதத்தில் அவனுடைய நண்பன் வாழ்த்துச் செய்தியுடன் தான் எழுதியிருந்த "கண்ணன் என் கல்யாணத் தரகன்" என்ற பாட்டும் அனுப்பி இருந்தான்! அதைப் பார்த்து அவன் புன்முறுவல் செய்தான்.

அந்தக் கடிதங்களிடையே அவன் எதிர்பாராத ஒரு கடிதமும் இருந்தது. அது காந்திமதியினிடமிருந்து வந்திருந்தது. (பல கடிதங்கள் எழுதியிருந்தும், அவன் என் இன்னும் பெங்களூருக்கு வரவில்லை என்று அவள் கேட்டிருந்தாள். ஓர் அவசர ஜோலியின் நிமித்தம் அந்த விடுமுறையில் வர இயலவில்லை என்று அதற்குப் பாஸ்கரன் பதில் எழுதினுன். அக்கடிதத்தைக் கண்டதும் பெங்களூரிலிருந்த காந்திமதியின் மனநிலை எவ்வாறு இருந்ததோ?)

ஆனல் இங்கோ ஒவ்வொரு நாளும் ஏற்பட்ட புதுப் புது அனுபவங்களினுல் பாஸ்கரன் ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருந்தான். அவனுக்குக் கல்யாணமானதும், அடிக்கடி தாகம் எடுக்க ஆரம்பித்துவிட்டது! அடிக்கடி, சமயலறைக்குச் சென்று தண்ணீர் கேட்பான்!

ஒரு நாள் அவன் சமையலறைக்குச் சென்று, "பாட்டி தண்ணீர் வேண்டும்" என்ருன்.

"ராஜேசுவரி, தண்ணீர் கொண்டுபோடி, உன் புருஷன் தண்ணீர் கேட்கிறான்" என்றாள் பாட்டி.

ராஜேசுவரி ஒரு தம்ளரில் தண்ணீர் எடுத்துக்கொண்டு வந்தாள். இந்தத் தடவையாவது தான் நினைத்து வந்த காரியத்தை அவசியம் செய்துவிட வேண்டுமென்று பாஸ்கரன் தீர்மானித்துக்கொண்டான். இதுவரையில் அவன் அவளிடம் பல தடவை தண்ணீர் வாங்கியிருக்கிறான். ஒவ்வொரு தடவையும், இந்த முறை அவளுடைய விரல்களை எப்படியாவது தீண்டிவிடவேண்டும் என்ற சங்கற்பத்துடனேயே வருவான். ஆனால் ஏனோ அவ்வெண்ணம் அதுவரையில் ஈடேறவில்லை. சில சமயம் கடைசி நிமிஷத்தில் அவனுடைய உறுதி குலைந்துவிடும். என்ன நினைத்துக்கொள்வாளோ? தெரியவில்லை. கையோடு கை படாமல் தண்ணீரை வாங்கிக் குடித்துவிட்டுத் தன் எண்ணம் நிறைவேறாத ஏமாற்றத்தினால் அவளை ஏறிட்டுக்கூடப் பார்க்காமல் போய்விடுவான். அவளும் வருத்தத்துடன் போவாள். ஏன்? அவளுக்கும் ஏமாற்றந்தானே! சிற்சில சமயம் அவன் கடைசி வரைக்கும் மிகுந்த உறுதியுடன் இருப்பான். அந்தச் சமயங்களில் முன்னம் பல தடவைகளில் ஏற்பட்ட ஏமாற்றங்களினால் வெறுப்புக்கொண்டு, தம்ளரைக் கீழே வைத்துவிட்டு அவள் சமையலறைக்குள் போய்விடுவாள். ஆனால் இன்று கூசாமல் தம்ளரைப் பாஸ்கரனிடம் நீட்டினாள். அவன் அதை வாங்கும் போது இருவர் விரல்களும் ஸ்பர்சித்தன. அவள் ஏன் வெடுக்கென்று தன் விரல்களைப் பின்னால் இழுக்கிறாள்? இதற்காகத் தானே அவள் எத்தனையோ நாள் காத்திருந்தாள்? அது ஏற்படாததனால் அவள் கோபித்துக்கொண்டு சென்ற நாட்களும் உண்டல்லவா?

பாஸ்கரனுக்குச் சாதம் போடுவது இப்பொழுதெல்லாம் ராஜேசுவரிதான். ஒவ்வொரு நாளும் அவன் சாப்பிட்டு எழுந்திருப்பதற்குள் அநேக மௌன நாடகங்கள் நடைபெறும். அவன் வேண்டுமென்றே கூட்டுப் பொரியல் வகைகளை வெகு சீக்கிரமாய்ச் சாப்பிட்டுவிடுவான். அவனாக வாய்திறந்து,

"கூட்டு வை, பொரியல் வை" என்று கேட்கட்டுமே என்று அவள் பேசாதிருப்பாள். அவளாக வைக்கட்டுமே என்று அவன் பேசாமலிருப்பான். இம்மாதிரியான சமயங்களில் ஒவ்வொரு நாள் மீனாக்ஷியம்மாள் அங்கு வந்து சேர்வதும் உண்டு.

"ஏண்டாப்பா, நான் சோறு போட்டால், தொட்டுக் கொள்ள ஒன்றும் இல்லாமல் ஒருவாய் சாப்பிடமாட்டாயே? இப்பொழுது பெண்டாட்டி ஆத்தாள் அழகில் சொக்கி மெய்ம் மறந்து சாப்பிட்டுக்கொண் டிருக்கிறாயாக்கும்? அவள் பக்கத்தில் இருக்கும்போது பொரியல் எதற்கு, கூட்டு எதற்கு?" என்று சொல்வாள்.

பின்பு ராஜேசுவரியைப் பார்த்து, "அவன்தான் மெய்ம் மறந்து சாப்பிட்டானானல், நீயாவது இலையைப் பார்த்து வைப்பதற்கென்னடி?" என்று கேட்பாள்.

வேறு வழியில்லாமல் ராஜேசுவரி அவைகளை எடுத்துப் பரிமாறுவாள். பாஸ்கரன் அவளைப் பார்த்துப் புன்முறுவல் கொள்வான். அன்றைய யுத்தத்தில் அவனுக்குத்தான் வெற்றி!

பாட்டி சற்று அப்பால் சென்றதும், "எங்கள் வீட்டிற்கு ஆடிக்கு வருவீர்கள் அல்லவா? அப்பொழுது இதற்கெல்லாம் பழிக்குப் பழி வாங்குகிறேனா இல்லையா, பாருங்கள்" என்று ராஜேசுவரி பாஸ்கரனைப் பயமுறுத்துவாள்!

# அத்தியாயம் 14

# மாப்பிள்ளையின் கோபம்

பெண்ணும் மாப்பிள்ளையும் வண்டியிலிருந்து இறங்கி வாசலுக்கு முன்பு போடப்பட்டிருந்த கோலத்தின் மீது நின்றார்கள். சுப்பம்மாளும் ஜயலக்ஷ்மியும் அவர்களுக்கு ஆரத்தி எடுத்துத் திலகமிட்டனர். பின்பு ராஜேசுவரியும் பாஸ்கரனும் வீட்டிற்குள் நுழைந்தார்கள். ஆரத்தி எடுக்கும் பொழுது ராஜேசுவரி மெதுவாகப் பாஸ்கரனுடைய விரல்களைப் பிடித்திருந்தாள். வீட்டிற்குள் சென்றதும் பாஸ்கரன் தன் விரல்களை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு அப்பால் சென்றான். ராஜேசுவரியும் சற்று விறைப்பாகவே வீட்டிற்குள் போய் விட்டாள். 'இவருக்குத் தைரியம் இல்லாவிட்டால், நான் என்ன செய்வேன்!' என்று அவள் மனத்தில் நினைத்துக் கொண்டாள்.

மாரியப்ப செட்டியார் பெண்ணையும் மாப்பிள்ளையையும் தம் வீட்டிற்கு ஆடிக்கு அழைத்துவந்திருந்தார். வீட்டிற்குள் மாப்பிள்ளையும் பெண்ணும் பிரவேசம் செய்யும்பொழுதுதான் மேற்கூறிய சம்பவம் நடந்தது.

மத்தியான்னச் சாப்பாட்டிற்கு யாவரும் உட்கார்ந்திருந்தார்கள். மாப்பிள்ளைக்காக மிக ருசிகரமான பலகாரங்களும், ஆகார வகைகளும் தயார் செய்யப்பட்டிருந்தன. பாஸ்கரனுக்குப் பரிமாறுவதற்கு ராஜேசுவரிதான் அனுப்பப்பட்டிருந்தாள். சாதாரண சமயமாக இருந்தால் அவன் ஒன்றுக்கு இரண்டு பங்கே சாப்பிட்டிருப்பான். ஆனால், அன்றோ அவன் அந்தப் பலகாரவகைகளைத் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை. இதைக் கண்டதும், ராஜேசுவரி திணுக்குற்றாள்.

அதைப் பார்த்து மாரியப்ப செட்டியாரும் திகிலடைந்தார். 'மாப்பிள்ளை படித்தவர் ஆயிற்றே; அவருக்கு என்ன என்ன விதங்களில் உபசாரம் செய்ய வேண்டுமோ, அதில் ஏதாவது தவறிவிட்டதோ!' என்று அவர் பயந்து, பல விதமான வகைகளில் பாஸ்கரனை உபசரிக்கலானார்.

சுப்பம்மாள் ராஜேசுவரியைப் பார்த்து, "அவருக்கு என்ன என்ன பண்டங்கள் மிகப் பிரியம் என்று பாட்டியிடம் கேட்டுக்கொண்டுவரச் சொல்லியிருந்தேனே; கேட்டுக்கொண்டு வந்தாயா, என்னடி?" என்று கேட்டாள்.

ராஜேசுவரி அதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல், தனியாக ஓர் அறைக்குச் சென்று அழ ஆரம்பித்தாள்.

பாஸ்கரன் தனக்குப் பசியில்லை என்றும் பிரயாணம் செய்து வந்தது அலுப்பாக இருப்பதாகவும் சொல்லி எழுந்துசென்று மாடியில் படுத்துக்கொண்டான்.

"மாப்பிள்ளை சாப்பிட வெட்கப்படுகிறார் போலும்! எல்லாம் சரியாகிவிடும்" என்று மாரியப்ப செட்டியார் சமாதானம் செய்துகொண்டார். ஆனால் ராஜேசுவரியும் ஒன்றும் சாப்பிட வில்லை என்பதை அறிந்தபோது அவருக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

மாலையில் சிற்றுண்டி அருந்துவதற்குப் பாஸ்கரனை அழைத்தனர். அப்பொழுதும் அவன் சாப்பிட மறுத்து விட்டான். மாரியப்ப செட்டியாருடைய கவலை அதிகரித்தது. மாப்பிள்ளையின் கோபத்திற்கு என்ன காரணம் என்பது அவருக்கு விளங்கவில்லை.

மாரியப்ப செட்டியார் அன்று காலையில் எவ்வளவு சந்தோஷமாக இருந்தார்? தம் மகளும், மாப்பிள்ளையும் மிகுந்த குதூகலத்துடனும், ஒற்றுமையுடனும் இருப்பதைப் பார்த்த போது அவர் அடைந்த சந்தோஷத்துக்கு அளவில்லை. சிற்சில வீடுகளில் மாப்பிள்ளையும் பெண்ணும் மிக்க சந்தோஷமாய் வாழ்வார்கள். ஆனால் பெண்ணுக்கு மாமியாரினால் ஏற்படும்

தொந்தரவு பொறுக்க முடியாததாக இருக்கும். ஆனால் இங்கு அந்தத் தொல்லையும் இல்லை. பாட்டி ராஜேசுவரியைத் தன் சொந்தப் பேத்தி போலவே அன்பாக நடத்திவந்தாள். அதை யெல்லாம் அவர் கண்டபோது அவருடைய மனம் பூரித்தது. அவர் தம்மை மிகுந்த பாக்கியசாலி என்றே நினைத்தார். அன்று காலையில் நடந்த இன்னும் சில சம்பவங்கள் அவருடைய மகிழ்ச்சியைப் பின்னும் பன்மடங்காகப் பெருக்கின.

நல்ல நேரத்தில் புறப்பட வேண்டுமென்று மாப்பிள்ளை, பெண், மாப்பிள்ளைத் தோழன், இன்னும் மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்த சில ஆடவர், பெண்டிர் எல்லோரையும் அழைத்துக் கொண்டு, ரெயில் புறப்படுவதற்குச் சுமார் இரண்டு மணி நேரத்துக்கு முன்பு, அதிகாலையிலேயே மாரியப்ப செட்டியார் ஸ்டேஷனுக்கு வந்துவிட்டார். ஆடிக்கு அழைத்துச் செல்லும் போது, பெண், மாப்பிள்ளையை வெறும்வயிற்றோடு அனுப்பக் கூடாதென்று, மீனாக்ஷிப்பாட்டி அவர்களுக்கு, இட்டிலி, காபி கொடுத்தாள். ஆனால் அவ்வதிகாலையில் அவர்களுக்கு ஒன்றும் செல்லவில்லை. ஆகையினால் ஸ்டேஷனுக்கு வந்த பின், ரெயில் புறப்படச் சற்று நேரத்துக்கு முன்பு, எல்லோரும் ஓர் ஓரமாகப் பலகாரம் சாப்பிட உட்கார்ந்தார்கள். ஆடவர்கள் ஒரு பக்கமாகவும் பெண்கள் ஒரு பக்கமாகவும் அமர்ந்து சாப்பிட்டார்கள். ஆனால் ராஜேசுவரி மட்டும் சாப்பிட மறுத் தாள். என் என்பது சற்று நேரம் வரையில் ஒருவருக்கும் விளங்கவில்லை. பெண்கள் கூட்டத்தில் ஒருத்தி, "இதுகூட உங்களுக்கு விளங்காது. அவளுடைய பர்த்தா சாப்பிடுவதற்கு முன்பு அவள் சாப்பிடுவாளா? ஏன் எல்லோருங்கூடி அவளைத் தொந்தரவு செய்கிறீர்கள்?" என்று கூறிச் சிரித்தாள்.

"அந்தச் சாஸ்திரம் எல்லாம் வீட்டிற்குள் வைத்துக் கொள்ளலாமடி, அம்மா. இப்பொழுது சாப்பிடு. குற்றமில்லை" என்றாள் இன்னொருத்தி.

"நீதான் அவளைச் சாப்பிடச் சொல்லேண்டாப்பா. உனக்குப் பின்னால் உன் பெண்டாட்டி சாப்பிட்டால்தான்

உனக்குக் கௌரவம் என்று நீ நினைக்கிருயாக்கும்?'' என்று மற்றொருத்தி பாஸ்கரனைப் பார்த்துச் சொன்னுள்.

யார் என்ன சொல்லியும் கேளாமல், பாஸ்கரன் சாப்பிட்டு முடிந்தவுடன்தான் ராஜேசுவரி சாப்பிட உட்கார்ந்தாள்.

ரெயிலில் பிரயாணம் செய்யும்போது, ராஜேசுவரியின் கண்களும், பாஸ்கரனுடைய கண்களும் ஒன்றை ஒன்று சந்தித்ததை மாரியப்ப செட்டியார் கவனித்தார். இவற்றை யெல்லாம் பார்த்து, அவருடைய உள்ளம் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தது. ஆனுல் இப்பொழுது மாப்பிள்ளை என் கோபமா யிருக்கிருர்? என் அவர் சாப்பிடவில்லை? காரணம் அவருக்கு விளங்கவில்லை.

எல்லோருடைய வருத்தத்தைக் காட்டிலும், ராஜேசுவரி யின் வருத்தந்தான் அதிகமாயிருந்தது. அவள் அழுது, அழுது கண்ணீர் வடித்துக்கொண் டிருந்தாள். தன் கணவன் தன்னுடைய வீட்டிற்கு வரும்போது, என்ன என்னவோ செய்ய வேண்டுமென்று அவள் நினைத்திருந்தாள். எப்படி எப்படிப் பேசவேண்டுமென்றுகூட அவள் முன்பே யோசித்து வைத்திருந் தாள். ஆனுல் இப்பொழுது எல்லாம் பாழாகிவிட்டன.

ராஜேசுவரி இரண்டொரு தடவை மாடிக்குச் சென்ருள். ஆனுல் பாஸ்கரன் அவளை ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. ஆகையினுல் ராஜேசுவரியும் பேசாமல் இறங்கி வந்துவிட்டாள்.

அன்று இரவும் பாஸ்கரன் சரிவரச் சாப்பிடவில்லை. ராஜேசுவரி விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள்.

சுப்பம்மாள் அவளிடம் சென்று, "என்னம்மா விஷயம்? என்ன நடந்தது? அவர் என் இப்படிக் கோபித்துக்கொண் டிருக்கிருர்?'' என்று கேட்டாள்.

ராஜேசுவரி மேலும் மேலும் அழுதாளே ஒழியப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. சுப்பம்மாள் மேலும் மேலும் வற் புறுத்திக் கேட்கவே, ராஜேசுவரி கோபமுற்று, "எனக்கு என்ன தெரியும்? அவரைப் போய்க் கேள், போ'' என்ருள்.

"புருஷன் விஷயம் பெண்டாட்டிக்குத் தெரியாமல் வேறு யாருக்கம்மா தெரியும்?" என்றாள் சுப்பம்மாள்.

அந்தச் சமயம் மாரியப்ப செட்டியாரும் அங்கு வந்து, "விஷயத்தைச் சொன்னால் அல்லவா, அதற்கு வேண்டியதைச் செய்யலாம், அம்மா? இப்படி நீயும் சாப்பிடாமல் அவரும் சாப்பிடாமல், பட்டினி கிடந்தால், எங்கள் மனம் கேட்குமா அம்மா? யார் என்ன குற்றம் செய்தது?" என்று கேட்டார்.

"யார் என்ன குற்றம் செய்ததா? எல்லாம் உங்களால் வந்த வினைதான்" என்று சொல்லி விம்மி விம்மி அழ ஆரம்பித்தாள் ராஜேசுவரி.

மாரியப்ப செட்டியாருக்குத் தூக்கிவாரிப் போட்டது. "நான் என்ன குற்றம் செய்தேன்?" என்று திகிலுடன் கேட்டார்.

"உங்களுக்கு ஒன்றும் தெரியாது. வாயில் விரலை வைத்தால் கடிக்கக்கூடத் தெரியாது. அந்தத் தடியன் வண்டியில் ஏறினால், இறங்கச் சொல்வது, அல்லது எங்கள் இரண்டு பேருக்கும் வேறு வண்டி அமர்த்தி அனுப்புவது. அதற்குச் சமர்த்தில்லை அல்லவா?" என்றாள்.

மாரியப்ப செட்டியாருக்கு அப்பொழுதுதான் விஷயம் புரிந்தது. மதுரை ஸ்டேஷனில் எல்லோரும் வந்து இறங்கியவுடன், மாரியப்ப செட்டியார் சில ஜட்கா வண்டிகளை அமர்த்தினார். அதில் ஒரு வண்டியில் மாப்பிள்ளை, பெண் இவர்களைச் சேர்ந்த சமான்கள் வைக்கப்பட்டன. அதில் மாப்பிள்ளையும் பெண்ணும் மட்டும் ஏறிச் செல்வதாக ஏற்பாடு. முதலில் ராஜேசுவரி ஏறிக்கொண்டாள். அவளுக்குப் பின்னால் மாப்பிள்ளைத் தோழனாகப் பாஸ்கரனுடன் வந்த பையன் ஏறிக்கொண்டான். உடனே வண்டிக்காரன் மாப்பிள்ளை ஏறிவிட்டார் என்று நினைத்து வண்டியை ஓட்டினான். அவனை நிறுத்தச் சொல்வதற்குள் வண்டி கொஞ்சதூரம் போய்விட்டது.

ஆகையினால் மாப்பிள்ளையும் மாமனாரும் வேறொரு வண்டி அமர்த்திக்கொண்டு பின்னால் வரவேண்டி இருந்தது.

"இதற்காகத்தானா மாப்பிள்ளை கோபித்துக்கொண்டிருக்கிறார்? நான் அவரைச் சமாதனப் படுத்துகிறேன். நீ போய்ச் சாப்பிடம்மா" என்று ராஜேசுவரிக்கு மாரியப்ப செட்டியார் ஆறுதல் சொன்னார்.

ஆனால் ராஜேசுவரிக்குச் சாப்பாடு ஒன்றும் அச்சமயம் தேவையாகத் தோன்றவில்லை. பேசாமல் படுத்துக்கொண்டாள்.

மறு நாளும், மூன்றும் நாளுங்கூடத் தம்பதிகளின் உடலில் எவ்விதமான மாறுதலும் ஏற்படவில்லை. பாஸ்கரன் ராஜேசுவரியுடன் பேசுவதில்லை. அவளைப் பார்ப்பதுங்கூட இல்லை. அவளாக அவனுக்கு முன்னால் வந்தாலும் அவன் தன் முகத்தை அப்பால் திருப்பிக்கொள்வான். அவன் தனக்கு வேண்டியதை எல்லாம் ஜயலக்ஷ்மியிடமே கேட்க ஆரம்பித்தான்.

"ஜயலக்ஷ்மி, குடிப்பதற்குக் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வா" என்பான்.

ராஜேசுவரி தண்ணீர் எடுத்துக்கொண்டு செல்வாள். அவளைப் பார்த்தவுடன் பாஸ்கரன் மறுபுறம் திரும்பிக் கொள்வான். ராஜேசுவரி தம்ளரை மேஜையின்மீது வைத்து விட்டு வந்துவிடுவாள். சிறிது நேரத்திற்குப் பின்பு பார்த்தால் அந்தத் தண்ணீர் அப்படியே இருக்கும்.

பாஸ்கரனுக்கு வீட்டில் பேச்சுத் துணைக்கு ஒருவரும் இல்லாமற் போகவே, ஜயலக்ஷ்மியுடன் வம்பளக்க ஆரம்பித்தான்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் ராஜேசுவரி மாடிக்குச் சென்றாள். அங்கே கட்டிலில் பாஸ்கரன் படுத்திருந்தான். தூங்கிக்கொண் டிருந்தான் போலும். பக்கத்தில் சென்று பார்த்தாள் ராஜேசுவரி. அவனுடைய நெற்றியில் வேர்வை துளித்திருந்தது. மார்பு வேர்த்திருந்தது. என்ன நினைத்தாளோ

தெரியவில்லை. உடனே தன் புடைவைத் தலைப்பை எடுத்து முகத்தையும் மார்பையும் துடைத்துவிட்டுப் பக்கத்தில் உட்கார்ந்து விசிறினுள். பாஸ்கரன் உண்மையில் தூங்கிக் கொண்டிருக்கவில்லை. இதை எல்லாம் கவனித்துக்கொண் டிருந்த அவன் புளகாங்கிதம் அடைந்து, திடீரென்று எழுந்து, ராஜேசுவரியை இறுகத் தழுவிக்கொண்டான்.

இந்தச் சமயம் பாஸ்கரனைச் சாப்பிடக் கூப்பிடுவதற்காக அங்கே வந்த ஜயலக்ஷ்மி, தேள் கொட்டினவள்போல் பேசாமல் திரும்பிச் சென்றுள்.

"என்னம்மா அத்தானைக் கூப்பிட்டாயா, என்ன?" என்று சுப்பம்மாள் கேட்டாள்.

"இல்லை."

"ஏன்?"

"இனி நான் அவரைக் கூப்பிடப் போகமாட்டேன்."

"ஏன்?"

"போகமாட்டேன்."

"அப்படி என்ன நீ பெரிய மனுஷி ஆகிவிட்டாயா?"

"ஆம்."

"ஆமாவா? நேற்றெல்லாம் அவரோடு வம்பளந்துகொண் டிருந்தாய்!"

"இனிப் போவது மரியாதை இல்லை அம்மா!" என்று சொல்லி ஜயலக்ஷ்மி சிரித்தாள்.

சுப்பம்மாளுக்கு அவள் சொன்னது ஒன்றும் விளங்கவில்லை. அதை விளக்குவதுபோல, மாடியிலிருந்து கணவனுடன் கைகோத்துக்கொண்டு இறங்கி வந்த ராஜேசுவரி, சுப்பம்மாளை யும் ஜயலக்ஷ்மியையும் பார்த்தவுடன் வெடுக்கென்று தன் கையைக் கணவன் கையிலிருந்து பிடுங்கிக்கொண்டாள்.

அன்றைச் சாப்பாடு கோலாகலமாக இருந்தது என்று சொல்லவும் வேண்டுமோ?

# அத்தியாயம் 15

# அழகர் கோவில்

தம்பதிகள் இருவரும் ஒன்றுமை அடைந்துவிட்ட விஷயம் சுப்பம்மாளுக்கும் மாரியப்ப செட்டியாருக்கும் தெரிந்தது. அவர்களுடைய மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. தம்பதிகளின் நட்பை மேலும் விருத்திசெய்ய வேண்டுமென்று மாரியப்ப செட்டியார் நினைத்தாரோ என்னவோ? மறுநாள் அழகர் கோவிலுக்கு அவர்களை அழைத்துச்செல்வதாகத் தீர்மானித்தார். மாப்பிள்ளையும் பெண்ணும் ஒருவரை ஒருவர் நன்கு அறிந்து கொள்வதற்கும் அவர்களுடைய நட்பை வளர்ப்பதற்குந் தானே ஆடிக்கு அழைத்தல், தீபாவளிக்கு அழைத்தல் போன்ற சுபங்களைப் பெரியோர் ஏற்படுத்தி யிருக்கிறுர்கள்? ஆங்கிலேயர் 'ஹனிமூன்' என்கிறுர்கள். நாம் ஆடிக்கு அழைத்தல், மறுவீடு அழைத்தல் என்கிறோம். பெயரில்தான் வித்தியாசம்.

அநேகமாக வாழ்க்கை முழுவதும் வீட்டிற்குள்ளேயே அடைபட்டிருக்கும் பெண்களுக்கு வெளியில் பிரயாணம் செய்வதென்றுல் வெகு சந்தோஷம். ஆகையினுல் இம்மாதிரிப் பிரயாணங்களில் அதிக சந்தோஷம் அடைபவர்கள் பெண்களே. பிரயாணத்தில் நடை ஒன்றே அவர்களுக்குத் தடையாயிருப்பது. அதைச் சமாளிப்பதற்கு ஏதாவது வாகனம் ஒன்று அகப்பட்டு விட்டால், அவர்களுக்கு அதில் எந்த விதமான வருத்தமும் இருப்பதில்லை.

வீட்டிலிருந்த பெண்கள் எல்லாம் வெகு மும்முரமாக மறுநாள் பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள்.

''எதற்காக இதைச்செய், அதைச்செய் என்று திரிகிறீர்கள்? பேசாமல் அரிசி பருப்புச் சாமான்களையும், பாத்திரங்களையும்

கொண்டுபோய் மலைமீதே சமைத்துச் சாப்பிடலாம். அங்கே யுள்ள சுனைத் தண்ணீர் திவ்யமானது. போன தடவை நாங்கள் அப்படித்தான் செய்தோம். தேவாமிர்தமா யிருந்தது'' என்றாள், மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்த ஒரு பெண்.

“ஏன் அக்கா, அங்கே போயும் இந்தச் சாதமும், பருப்பும், சாம்பாருமா சப்பிடவேண்டும் என்கிறாய்? இங்கேயே புளியோரை, எள்ளோரை, தேங்காய்ச் சாதம், தயிர்ச்சாதம் முதலியவற்றைத் தயார் செய்து கொண்டுபோனால் என்ன?'' என்று சுப்பம்மாள் கேட்டாள்.

மாப்பிள்ளை வீட்டுக்காரிக்குச் சுப்பம்மாள் தன் யோசனையை நிராகரிக்கிறாளே என்று கோபம் உண்டாயிற்று. அதைக்கண்ட ராஜேசுவரி, “அந்தப் புளியோரை எள்ளோரையைத்தான் அங்கே போய்ச் சமைத்துச் சாப்பிடுவோமே?'' என்றாள்.

“அதைத்தான் ராஜம்மா நான் சொல்கிறேன். உங்கம்மா என்னவோ நினைத்துக்கொண்டு பேசுகிறது'' என்றாள் மாப்பிள்ளை வீட்டுக்காரி.

இம்மாதிரி மாப்பிள்ளை வீட்டிற்கும், பெண் வீட்டிற்கும் சமாதானம் உண்டாகவே, மலையின்மீது செய்ய முடியாத சில பலகார வகைகளை மட்டும் வீட்டில் தயார் செய்தார்கள்.

மாரியப்ப செட்டியார் ஹோட்டலுக்குச் சென்று விதவிதமான பலகார தினுசுகளை வாங்கிக்கொண்டு வந்தார். நாள் முழுவதற்கும் வாடகை பேசி மூன்று நான்கு ஜட்கா வண்டிகளும் அமர்த்தப்பட்டன.

அழகர் கோவில், மதுரைக்குச் சுமார் பதினொரு மைல் தூரத்திலுள்ள ஒரு க்ஷேத்திரம். அங்கே ஒரு பெரிய கோவிலும் ஒரு சிறு குன்றும் உள்ளன. குன்றில் ‘அழகர் தீர்த்தம்' என்று வழங்கும் ஒரு சுனை உண்டு. அச்சுனை நீரானது குளிக்கக் குளிக்கக் குடிக்கக் குடிக்க ஆசை தீராதபடி ‘ஜிலு, ஜிலு' வென்று மிக இனிமையாயிருக்கும். மலையோ இயற்கை வனப்பு

மிகுந்த சோலைகள் நிறைந்தது. அதற்குச் சோலைமலை என்ற பெயர் மிகப் பொருத்தமானதே.

வெயில் வருவதற்குள் மலையின்மீது ஏறிவிட வேண்டும் என்று நினைத்து அதிகாலையிலேயே வீட்டைவிட்டுப் புறப்பட்டார்கள். ஏற்கனவே ஒரு முறை மாரியப்ப செட்டியார் கஷ்டப்பட்டிருந்ததனால், இந்தத் தடவை வெகு உஷாராயிருந்தார். ஒரு வண்டி மாப்பிள்ளை பெண்ணுக்காகவே ஒதுக்கப்பட்டிருந்தது. "நீங்கள் இந்த வண்டியில் ஏறுங்கள் மாப்பிள்ளை. நீயும் இதில் ஏறம்மா, ராஜேசுவரி!" என்று உரத்துக் கூவிக்கொண்டிருந்தார். முதலில் ராஜேசுவரி வண்டியில் ஏறினாள். அவள் தன்னுடன் துணைக்கு ஜயலக்ஷ்மியையும் அழைத்துக்கொண்டாள். அவர்களுக்குப் பின்னால் பாஸ்கரன் அவ்வண்டியில் ஏறினான்.

காலை எட்டு மணிக்குள் வண்டிகள் எல்லாம் அழகர் கோவிலை அடைந்தன. முதலில் எல்லோரும் கோவிலை ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட்டுப் பின்னர் ஓரிடத்தில் அமர்ந்து, காலைச் சிற்றுண்டி அருந்தினர். சிறிது நேரத்திற்குப் பின்பு மலை ஏற ஆரம்பித்தார்கள்.

மேலே செல்லும் பாதையானது மெல்லிய வாட்டத்துடன் தான் இருந்தது. ஆயினும் பெண்களுக்கு மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கியது. ஆகையினால் அவர்கள் பின் தங்கிவிட்டனர். ஆனால் ராஜேசுவரியும் ஜயலக்ஷ்மியும் மட்டும் பாஸ்கரனை விடாமல் அவனுடன் தொடர்ந்து நடந்து சென்றார்கள். பாதையின் இரு புறங்களிலும் மரங்கள் அடர்ந்திருந்தன. அவைகளின்மீது வித விதமான கொடிகள் படர்ந்திருந்தன. தூரத்திலிருந்து வந்த 'லொட லொட' என்ற ஒருவித ஓசையானது, மலை மாடுகள் கழுத்தில் தகரமணி கட்டிக்கொண்டு மேய்ந்துகொண்டிருப்பதை அறிவித்தது. மரங்களின்மீது இருந்த பறவைகள் பல விதமான சப்தங்களை எழுப்பிக்கொண்டிருந்தன. மரங்களினூடே 'ஜிவ் ஜிவ்' என்று பரிசுத்தமான மலைக்காற்று வீசிக்கொண்டிருந்தது.

நகர வாழ்க்கைக்கு முற்றும் மாறான இந்தச் சூழ்நிலை, மனிதர்கள் உள்ளத்தில் வித விதமான உணர்ச்சிகளைக் கிளப்பி விட்டது. தங்களைப் பிணைத்திருந்த கட்டுக்கள் யாவும் திடீ ரென்று அறுந்து விழுந்துவிட்டது போல அவர்கள் யாவரும் உணர்ந்தனர். யாவருங் குதூகலமாகப் பேசிக்கொண்டும் பாடிக் கொண்டும் நடந்து சென்றுகொண் டிருந்தனர்.

கீழே, உதிர்ந்துகிடக்கும் உலர்ந்த சருகுகளிடையே சர சரவென ஏதாவது சத்தம் கேட்கும்போதெல்லாம், ராஜேசுவரி அச்சத்துடன், "அதென்ன பாம்புதானே? அப்படிப் போகிறது?" என்று பாஸ்கரனைக் கேட்பாள்.

"ஓணன், பல்லி ஏதாவது ஊர்ந்து போகும்" என்பான் பாஸ்கரன்.

"பாம்பாகவும் இருக்கலாமல்லவா?"

"ஒருவேளை இருக்கலாம்" என்று பாஸ்கரன் சொல்வான். உடனே பயத்துடன் அவனுடைய தோளைக் கட்டிப் பிடித்துக் கொள்வாள் ராஜேசுவரி. ஆனால் சிறிது தூரத்தில் பக்கத்திலேயே ஜயலக்ஷ்மி இருப்பதைப் பார்த்ததும் நாணத்துடன் விலகுவாள்.

ஒரு சமயம் ராஜேசுவரி பாஸ்கரனைப் பார்த்து, "இந்த மலைக் காடுகளில் புலி இருக்குமா?" என்று கேட்டாள்.

"ஏன் இராது, பேஷாயிருக்கும்" என்றான் பாஸ்கரன்.

"புலி இருக்குமா!" என்றாள் ராஜேசுவரி மிகுந்த கிலியுடன்.

அந்தச் சமயத்தில் ஜயலக்ஷ்மி அவர்களை அணுகினாள்.

ராஜேசுவரியின் பயத்தைக் கண்ட பாஸ்கரன், "இந்த மலையில் பெண்புலிகள்தாம் அதிகமாம்" என்று புன்சிரிப்புடன் கூறினான்.

"பெண்புலிகளா?" என்று மேலும் பீதியுடன் கேட்டாள் ராஜேசுவரி.

"ஆம், இப்போதுகூட இரண்டு பெண்புலிகளின் தடத்தை நான் இதோ பார்க்கிறேன். அவை வெகு சமீபத்தில்தான்

இருக்கவேண்டும்'' என்று தரையை உற்று நோக்கியவாறு பாஸ்கரன் கூறினன்.

இதைக் கேட்டவுடன் ராஜேசுவரி அப்படியே 'தக்' கென்று நின்றுவிட்டாள். பக்கத்திலிருந்த ஜயலக்ஷ்மி, "இது பெண்புலியின் தடமில்லை, அத்தான். ஓர் ஆண் புலியின் தடந்தான் எனக்குத் தெரிகிறது'' என்று சொல்லிக்கொண்டு குறும்பாகப் பாஸ்கரனை நோக்கினள்.

"ஆண்புலியின் தடமா?'' என்றான் பாஸ்கரன்.

"ஆமாம், அந்த ஆண் புலி சில நாட்களுக்கு முன்னல் ஒரு பெண்ணைப் படாத பாடு படுத்திவிட்டதாம்!'' என்று சொல்லிக் 'கல கல' வென்று ஜயலக்ஷ்மி சிரித்தாள்.

இங்ஙனம் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் யாவரும் சுனையை அடைந்தனர். சுனையைக் கண்டதும் எல்லோருக்கும் ஒரே குதூகலம். மதுரைக் குழாயடியில் ஒரு குடம் தண்ணீருக்காக ஒருவரோடொருவர் முட்டி மோதிக்கொண்ட பெண்களுக்குச் சுனையை விட்டு எழுந்திருந்து வரவே மனமில்லை.

"இதற்காகத்தான் நான் எல்லாவற்றையும் சமைத்துக் கொண்டு வரவேண்டும் என்று சொன்னேன். இப்பொழுது ஒருத்தியாவது சமைக்க வருகிறாளா?'' என்று சுப்பம்மாள் கத்திய பிறகுதான் ஒவ்வொருத்தியாகத் தீர்த்தத் தொட்டியை விட்டுக் கிளம்பினர்கள்.

பெண்களுக்குப் பின்னல் குளித்த ஆடவர்கள் சமையல் தயாராகும் வரையில் குளித்துக்கொண்டே இருந்தார்கள். அந்தச் சுனையில் ஸ்நானம் செய்வதில் அவர்களுக்கு அத்தனை ஆனந்தம்!

சாப்பாட்டிற்குப் பின் சற்று வயசு வந்தவர்கள் நடந்து வந்த களைப்பு நீங்க ஜமுக்காளங்களை விரித்துப் படுத்துக்கொண்டார்கள். இளம் ஆடவரும் பெண்டிரும் தாயக்கட்டம் போன்ற விளையாட்டுக்களில் ஈடுபடலாயினர். அதில் ஒரு கோஷ்டியில் பாஸ்கரன், ராஜேசுவரி, ஜயலக்ஷ்மி, இம்மூவரும் இருந்தனர்.

அவர்களுடன் மாப்பிள்ளைத் தோழனுக வந்திருந்த ராமசாமியும் சேர்ந்து கொண்டான்.

கல்யாணத்தின்போது நலங்கில் பாஸ்கரனும் ராஜேசுவரியும் பல்லாங்குழி ஆடினுர்கள். அதில் பாஸ்கரன் முற்றும் தோற்கடிக்கப்பட்டான். ஆகையினுல் இப்பொழுது தாயக்கட்டத்திலாவது அவளைத் தோற்கடிக்கவேண்டுமென்று அவனுக்கு ஆவல் இருந்தது. இயற்கையாகவே அன்றைய ஆட்டத்தில் இருவருக்கும் போட்டி எற்பட்டது. ஒருவரை ஒருவர் தோற்கடிக்க வேண்டுமென்று இருவரும் வெகுவாக முயன்ருர்கள். இம் முயற்சியில் ஏனே பாஸ்கரனுக்கு ஜயலக்ஷ்மியும், ராஜேசுவரிக்கு ராமசாமியும் உதவி செய்தார்கள்.

ஒரு சமயம் ராஜேசுவரி தாயக்காய்களை உருட்டியபோது மூன்று விழுந்தது. அவளுடைய காய்களில் ஒன்று, ஒரு பக்கம் ராமசாமியின் காய் ஒன்றையும், இன்னொரு பக்கம் பாஸ்கரனுடைய காய் ஒன்றையும் குத்துவதாக இருந்தது. ராமசாமியின் காய் பழுக்கும் தறுவாயில் இருந்தது. அவள் அதைக் குத்தாமல், "நீ பழுத்துக்கோ அண்ணே, அவரைத்தான் விடக்கூடாது" என்று பாஸ்கரனைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே அவனுடைய காயைக் குத்தி வெளியில் எறிந்தாள். அடுத்தாற்போல் ஆடிய ஜயலக்ஷ்மி, "அத்தானைக் குத்தினுல் உன்னைச் சும்மா விடுவேனே!" என்று சொல்லி ராஜேசுவரியின் காயைக் குத்தி எறிந்தாள்.

ஜயலக்ஷ்மி எவ்வளவு உதவிசெய்தும், கடைசியில் பயனில்லாமற் போயிற்று. அன்றைய ஆட்டத்தில் முடிவாகப் பாஸ்கரனே தோல்வி அடைந்தான்!

தோல்வியுற்றதுகூட அவனுக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. ஆனுல் ராஜேசுவரி ராமசாமியுடன் விளையாட்டுக் கூட்டாளியாகச் சேர்ந்துகொண்டது, அவனுக்குச் சிறிதேனும் பிடிக்கவில்லை. 'ராஜேசுவரி என் அவனுடன் சேர்ந்து கொண்டாள்? என் என்னைத் தோற்கடிப்பதில் அவ்வளவு ஆர்வம்

காட்டினுள்?' என்று அவனுடைய மனம் மீண்டும் மீண்டும் வினவியது.

சிறிது நேரத்திற்குப் பின் வெயில் தாழ்ந்தவுடன் யாவரும் இறங்க ஆரம்பித்தனர். திரும்பிச் செல்லும்போது பாஸ்கரன் உத்ஸாகமற்றுக் காணப்பட்டான். வரும்போது இருந்த குதூகலமும் கலகலப்பும் அப்பொழுது அவனிடம் இல்லை. ராஜேசுவரி அவனுடன் பேச முயன்றபோதெல்லாம், ஒரு வார்த்தை, இரண்டு வார்த்தைகளில் பதில் சொல்லிச் சம்பாஷணை வளராமல் பாஸ்கரன் தடுத்துவிட்டான். அதைக் கண்ட ராஜேசுவரி தன் தங்கையுடனும் வேறு சில பெண்களுடனும் சந்தோஷமாகப் பேசிக்கொண்டு வந்தாள்.

இங்ஙனம் ராஜேசுவரி அகன்றுவிட்டபோதிலும், அடிக்கடி பாஸ்கரன் அவளை நோக்குவான். அவளும் அவனைப் பார்ப்பாள்.

எல்லோரும் அடிவாரத்தை அடைந்தவுடன், மாரியப்ப செட்டியார் மறுபடியும் மாப்பிள்ளையையும் பெண்ணையும் ஒரே வண்டியில் அனுப்புவதற்கு முயன்றார். பாஸ்கரன் அதற்கு இணங்காமல், "பெண்கள் எல்லாம் ஒரு வண்டியிலும், நாம் எல்லாம் ஒரு வண்டியிலும் ஏறிக்கொள்வோமே?" என்றான்.

அவன் இங்ஙனம் கூறியது மாரியப்ப செட்டியாருக்கு ஆச்சரியமாக இருந்தது. ஆயினும் மாப்பிள்ளையின் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசக்கூடாதென்று, "சரி" என்றார்.

வண்டிகள் புறப்பட்டன. ராமசாமி தங்களுடன் இல்லாததைப் பாஸ்கரன் கவனித்தான். ராஜேசுவரி ஏறியிருந்த வண்டியின் கோஸ்பெட்டியில் வண்டிக்காரனுடன் அவன் உட்கார்ந்திருந்தான். அது ஏனோ பாஸ்கரனுடைய உள்ளத்தில் திகிலை உண்டாக்கியது.

அன்றிரவு பாஸ்கரன் படுக்கையில் தூக்கம் வராமல் புரண்டுகொண்டிருந்தான். ராஜேசுவரி அவன் பக்கத்தில் சென்று, "இன்று நடந்த அலுப்பு உடம்பெல்லாம் வலிக்கிறது

போலும். நான் பிடித்துவிடட்டுமோ?'' என்று அவனுடைய காலைப் பிடித்தாள்.

''வேண்டாம்'' என்று காலை இழுத்துக்கொண்டான் பாஸ்கரன்.

''ஏன்?''

''நீ கீழே போய்ப் படுத்துக்கொள்.''

ராஜேசுவரி தயங்கி நின்றாள்.

''போ என்கிறேன். இன்னும் நின்றுகொண் டிருக்கிறாயா?'' என்று மிகக் கடுமையான குரலில் பாஸ்கரன் கூறினான்.

ராஜேசுவரி மெதுவாக நகர்ந்தாள்.

# சந்தேகம்

கூணவனுடைய வார்த்தைகள் ராஜேசுவரியைத் திடுக்கிடச் செய்தன. மாடிப்படிகளில் மெதுவாகக் கீழே இறக்கி வந்துகொண்டிருந்தபோது, அன்று பகலில் நடந்த ஒரு சம்பவம் அவளுக்கு ஞாபகம் வந்தது. அப்பொழுது அவன் பேசிய குதூகலமான வார்த்தைகளுக்கும் இப்பொழுது அவனுடைய நாவிலிருந்து வெளிவந்த கடுஞ் சொற்களுக்கும் எவ்வளவு வித்தியாசம் இருந்தது!

மலைமீதிருந்த சுனையைக் கண்டதும், பாஸ்கரன் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து ராஜேசுவரியைப் பார்த்து, "அதிகமானல் மூன்று மைல் தூரம் இருக்கும். ஆனல் இவ்வளவு தூரம் வந்தது கால் என்ன வலி வலிக்கிறது! இப்பொழுது எப்படியாவது பொறுத்துக்கொள்ளலாம். ராத்திரிக்குத்தான் என்னபாடு படுத்தப்போகிறதோ, தெரியவில்லை?" என்ருன்.

"ராத்திரி உங்களைத் தூங்கவைப்பது என் பொறுப்பு. நான் உங்களுக்குக் கால் அமுக்குகிறேன்" என்ருள் ராஜேசுவரி. அப்புறம் சிறிது நேரம் மௌனமாயிருந்தபின் மெள்ளச் சிரித்துக் கொண்டே, "உங்களுக்கே இந்த வலி வலிக்கிறதே. எனக்கு எப்படி வலிக்காது! எனக்கு யார் அமுக்குவா?" என்று கேட்டாள்.

"எனக்கு நீ கால் அமுக்கு. உனக்கு நான் கால் அமுக்கு கிறேன்" என்று பாஸ்கரன் சிரித்துக்கொண்டே சொன்னுன்.

'ஆங்கிலம் படித்த மாப்பிள்ளையைக் கல்யாணம் பண்ணப் போகிருேமே, அவர் என்ன தடபுடல் பண்ணுவரோ, அவருடன் எப்படிப் பழகுவது, தம்மை எல்லாம் மிகவும் அநாகரிகம் என்று நினைப்பாரோ?' என்று இவ்வாறு பல

விதமாக எண்ணிக் கல்யாணத்திற்கு முன்னால் அவள் அஞ்சிய துண்டு. ஆனால் பாஸ்கரனுடன் பழகிய இரண்டொரு நாட்களிலேயே அவளுக்கு அவ்வச்சம் நீங்கிவிட்டது. அப்பொழுதுங் கூடப் பாஸ்கரன் இவ்வளவு சகஜமாயிருப்பான் என்று அவள் நினைக்கவில்லை. அவன் தனக்குக் கால் அமுக்குவதாகச் சொன்னதும் அவளுடைய உள்ளம் அடைந்த பூரிப்பிற்கு அளவில்லை.

ஆனால் இப்பொழுது?

அவள் கீழே இறங்கி வந்தபோது, அவர்களுக்கு உறவினள் ஒருத்தி, சுப்பம்மாளுடன் பேசிக்கொண்டிருந்தாள்.

"மாப்பிள்ளையை ஆடிக்கு அழைத்து வந்திருக்காயாமில்ல, சுப்பம்மா?"

"ஆமாம்; ஒரு வாரமாச்சு!"

சுப்பம்மாளின் வார்த்தைகளின் உள் அர்த்தத்தை வந்தவள் புரிந்துகொண்டாள்.

"வரணும், வரணும் என்றுதான் ஆசை. ஆனால் எங்கே வரமுடிகிறது? வேலைக்குமேல் வேலை இருந்துகொண்டே இருக்கிறது. இன்றைக்கு எவ்வளவு நேரமானாலும் பரவாயில்லை, பார்த்துவிட்டுப் போவது என்ற வைராக்கியத்துடன்தான் வந்தேன். மாப்பிள்ளையும் பெண்ணும் சந்தோஷமா யிருக்குதுங்களா?"

"அதற்கெல்லாம் ஒரு குறையுமில்லை; ஆண்டவன் கிருபையில்."

"எதுக்குக் கேட்டேன் என்றால், மாப்பிள்ளை இங்கிலீஸ் படிச்சவனாச்சே; டாம்பீகம், தடபுடல்......"

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நம்ம பொண்ணு அவருக்கு மனங் கோணாமல் நடக்கணுமே என்பதுதான் நம்ம கவலை."

"போகட்டும், போ; மீனாக்ஷி கிருபையாலே, எப்படியும் அதுக சந்தோஷமாயிருந்தால் போதும் அம்மா. அவ்வளவுதான்

வேறென்ன வேண்டும்? நான் அப்பவே சொல்லல்லேயா? 'ஓம் பொண்ணு அதிஷ்டசாலி. நல்ல பிள்ளை கிடைக்கும். நீ கவலேப்படாதே சுப்பம்மா' என்று நான் சொன்னேனு இல்லேயா? நேரமாகிறது. நான் வரட்டுமா?" என்ருள்.

"உன் வாக்குப் பலித்ததற்காக ரொம்ப சந்தோஷம். வெற்றிலே பாக்கு வாங்கிண்டு போ" என்று சுப்பம்மாள் அவளுக்கு வெற்றிலே பாக்கு வழங்கினுள்.

ராஜேசுவரி மிகுந்த சோர்வுடன் வந்து, ஜமுக்காளம் ஒன்றை விரித்துக் கீழே சாய்ந்தாள்.

மேற்கூறிய சம்பாஷணையைப் பாஸ்கரன் மாடியிலிருந்து மிகுந்த கவனமாய் உற்றுக் கேட்டான். "நம்ம பொண்ணு அவருடைய மனங் கோணுமல் நடக்கவேண்டுமே என்பதுதான் நம்ம கவலே" என்று சுப்பம்மாள் சொன்னது ஏனே அவனுடைய மனத்தில் சுருக்கென்று தைத்தது.

அழகர் கோவில் போய் வந்ததிலிருந்து, பாஸ்கரன் ராஜேசுவரியுடன் சந்தோஷமாய்ப் பேசுவதில்லே. அவளாக வலிய வந்து எதாவது பேசினுலும் ஒரு வார்த்தை இரண்டு வார்த்தைகளில் அவளுக்குப் பதிலளித்தான். சாப்பிடும்போது கூட அவன் ஒன்றும் பேசுவதில்லே. அவனுடைய இலேயைக் கவனித்து அவளாக வலிய அதில் இல்லாததை எல்லாம் பரிமாறுவாளே ஒழிய அவன் வாய் திறந்து ஒன்றும் கேட்பதில்லே. இதை எல்லாம் பார்த்தபோது, மாப்பிள்ளே வீட்டில் பாஸ்கரனிடம் அவள் கூறின சபதம் அவளுக்கு ஞாபகம் வரும். அந்தச் சமயங்களில் எல்லாம், அவள் கண்களில் நீர் நிறையும். அச்சபதத்தை நிறைவேற்ற முடியவில்லேயே என்று அவள் வருந்தினதாகத் தோன்றவில்லே. தன் பெற்றோர் வீட்டில் என்ன என்ன விதமாகவோ குதூகலமாகக் காலம் கழிக்க வேண்டுமென்று அவள் நினேத்திருந்தாள். அதற்கெல்லாம் சந்தர்ப்பம் வாய்க்கவில்லேயே என்று அவள் வருந்தினுள். இளமை பொங்கிய அவளுடைய உள்ளத்தில் அலே அலேயாய்

எழுந்த உணர்ச்சிகளை எல்லாம் வெளியிட அவள் துடித்துக் கொண்டிருந்தாள். அது சாத்தியமாகும் வகை யாது?

ஒரு நாள் மாலை மாரியப்ப செட்டியார் பாஸ்கரனைப் பார்த்து, "மாப்பிள்ளை, இன்று சினிமாவுக்குப் போகலாமா?" என்றார்.

தம் அந்தஸ்திற்குச் சற்று உயர்வான இடத்திலேயே அவர் சம்பந்தம் செய்திருந்தார்; ஆகையால் மாப்பிள்ளைக்கு உபசாரம் செய்வதில் ஒரு குறையும் வைக்கக் கூடாது என்பது அவருடைய நோக்கம்.

"போகலாம்" என்று அரை மனத்துடன் கூறினன் பாஸ்கரன். அவனுடைய உள்ளத்திற்கும் ஆறுதல் வேண்டியிருந்தது.

எல்லோரும் சினிமாவுக்குப் போவதாக ஏற்பாடு. ஆனல் புறப்படும் சமயத்தில் ராஜேசுவரி தனக்குத் தலைவலி என்று படுத்துக்கொண்டாள். ராமசாமியும் ஒரு நண்பனைப் பார்க்கப் போவதாகச் சொல்லி, சினிமாவுக்கு அவர்களுடன் செல்ல மறுத்துவிட்டான். கடைசியில் மாரியப்ப செட்டியார், ஜயலக்ஷ்மி, பாஸ்கரன் இம் மூன்று பேருமே குதிரை வண்டியில் சென்றார்கள். 'மாப்பிள்ளையைக் கூப்பிட்டாய் விட்டதே, இனி எப்படி நிற்பது?' என்றுதான் மாரியப்ப செட்டியார் புறப்பட்டார். 'மாமனரிடம் வருவதாகச் சொல்லியாய்விட்டதே. இனி எங்ஙனம் போகாமல் இருப்பது?' என்றுதான் பாஸ்கரன் சென்றான். உண்மையாக அந்நிலையில் சினிமாவுக்குப் போக அவனுக்குக் கொஞ்சமேனும் இஷ்டமில்லை.

வண்டி பாதி தூரம் சென்றிருக்கும். எதிரில் ராமசாமி வருவதைப் பாஸ்கரன் கவனித்தான். உடனே வண்டியை நிறுத்தி, "ராமசாமி, நண்பனைப் பார்க்கப் போனயே? ஏன் திரும்பிவிட்டாய்?" என்று கேட்டான்.

"அவனைக் காணோம். வீட்டிற்குத் திரும்புகிறேன்" என்றான் ராமசாமி.

"அப்படியானல் சினிமாவுக்குப் போகலாம்வா! வண்டியில் ஏறு."

"எனக்கு இன்று ஒரு மாதிரியாக இருக்கிறது. நான் வரவில்லை. நீங்கள் போய்விட்டு வாருங்கள்" என்று சொல்லி ராமசாமி வீட்டிற்குப் போய்விட்டான்.

படம் பார்ப்பதில் பாஸ்கரனுக்குச் சிறிதேனும் கவனம் செல்லவில்லை. அவனுடைய மனம் எங்கெங்கோ அலைந்தது. ஜயலக்ஷ்மி அவனிடம் கேள்விக்கு மேல் கேள்வி போட்டு, "அவள் என்ன சொல்கிருள்? இங்கே என்ன நடக்கிறது?" என்று அவனைத் தொந்தரவு செய்யாமல் இருந்திருந்தால், அவ னுக்குத் தான் பார்த்தது தமிழ்ப் படமா, ஆங்கிலப் படமா என்பதுகூடத் தெரிந்திருக்காது. சினிமாக் கொட்டகையில் உட்கார்ந்திருந்த ஒவ்வொரு கணமும் அவனுக்கு ஒரு யுகமாகத் தோன்றியது. சினிமாவுக்குச் சென்றுல் மனத்திற்கு ஆறுதலாக இருக்கும் என்று அவன் போனன். ஆனல் இப்பொழுதோ? உண்மையில் சினிமா முடிந்தபோதுதான் அவனுக்குச் சற்று ஆறுதல் ஏற்பட்டது.

அவர்கள் வீட்டிற்குச் சென்றபோது, ராமசாமி சாப்பிட் டுக்கொண் டிருந்தான். ராஜேசுவரி ஒரு மூலையில் உட்கார்ந் திருந்தாள்.

சுப்பம்மாள் மாரியப்ப செட்டியாரிடம் விபூதியுங் குங்கும மும் கொண்டுவந்து கொடுத்தாள். "இது ஏது?" என்று கேட்டார் மாரியப்ப செட்டியார்.

"மீனுக்ஷியம்மன் கோவிலுக்குப் போயிருந்தோம்."

பாஸ்கரனுடைய மூளை மிக வேகமாக வேலை செய்யத் தொடங்கியது. அப்படியானல் ராஜேசுவரி தலைவலி என்று கூறியது வெறும் பாசாங்குதானே என்று நினைத்தான்.

மேலும் சுப்பம்மாள் பேச ஆரம்பித்தாள்: "ராஜேசுவரி படுக்கை கொள்ளாமல் புரண்டுகொண் டிருந்தாள். 'கோயி

லுக்குப் போகலாம், வருகிறாயா?' என்று நான் கேட்டேன். என்ன நினைத்தாளோ, 'சரி' என்றாள். போய்விட்டு வந்தோம்."

'ராமசாமியும் கூட வந்தானோ?' என்று கேட்டது பாஸ்கரனுடைய உள்ளம். உள்ளத்தில் எழுந்த கேள்வியை உரக்கக் கூவுவதற்கு அவனுக்குத் தைரியமில்லை. ஆனால் அதைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்று அவன் மனம் பட்டபாடு சொல்லிமுடியாது.

"கூடத் துணைக்கு யார் வந்தது?" என்று மாரியப்ப செட்டியார் கேட்டார்.

"இந்தத் தம்பி ராமசாமி இருக்குதல்லவா? அதுதான் கூட வந்து, தேங்காய் பழம் எல்லாம் வாங்கிக் கொடுத்தது" என்று சுப்பம்மாள் கூறினாள்.

'ஓஹோ, அப்படியா?' என்றது பாஸ்கரன் மனம்.

"இன்னொரு சேதி. உங்களிடம் சொன்னால் நீங்கள் திட்டுவீர்கள்" என்று தான் சொல்லப்போகும் ஒரு முக்கியமான விஷயத்துக்கு அஸ்திவாரம் போடுவதுபோல், சுப்பம்மாள் சொன்னாள்.

ஏனோ தெரியவில்லை, அது தன்னுடைய சம்பந்தமுள்ள விஷயமாகத்தான் இருக்குமென்று பாஸ்கரன் எண்ணினான். அதைச் சீக்கிரம் அறிந்துகொள்ள வேண்டுமென்று அவனுடைய நெஞ்சு 'திக் திக்' என்று வேகமாக அடிக்க ஆரம்பித்தது.

"என்ன? சும்மாச் சொல்லு" என்று சாவதானமாய் மாரியப்ப செட்டியார் சொன்னார்.

"பொற்றாமரையில் கால், முகம் கழுவும்போது ராஜேசுவரி வழுக்கி விழத் தெரிந்தாள்!"

"அப்புறம்?" என்று மாரியப்ப செட்டியாரும் பாஸ்கரனும் ஒரே குரலில் பரபரப்புடன் கேட்டார்கள். இருவருக்கும் பரபரப்புத்தான். ஆனால்......

"நல்ல வேளை! ராமசாமி அவள் கையைப் பிடித்துக் கொண்டது. இல்லையானல்........."

மாரியப்ப செட்டியார் ராமசாமிக்கு மனப்பூர்வமாய் நன்றி செலுத்தினர்.

"ஓஹோ! அதுவும் நடந்ததா?" என்றது பாஸ்கரனின் உள்ளம்.

இங்ஙனம் சுப்பம்மாள் தான் செய்வது இன்னதென்று அறியாமல் பாஸ்கரனுடைய பொருமைத் தீக்கு மேன்மேலும் நெய் வார்த்துக்கொண் டிருந்தாள்.

இதே சமயம் ஜயலக்ஷ்மிக்கும் ராஜேசுவரிக்கும் இன்னெரு சம்பாஷணை நடந்துகொண் டிருந்தது.

"சினிமா நல்லாயிருந்ததா?"

"ரொம்ப நல்லாயிருந்ததே? நீவராமற்போனியே அக்கா!"

"நீ எங்கே உட்கார்ந்திருந்தே? பெண்களோடா......"

"நான் மட்டும் தனியாய்ப் பெண்களுடன் எப்படி உட்கார்ந் திருப்பேன்? அப்பாவுடனும் அத்தானுடனுந்தான் உட்கார்ந் திருந்தேன். அப்பா ஒரு பக்கம். நான் ஒரு பக்கம். அத்தான் நடுவில்."

'ஓஹோ! அவர் நடுநாயகமாக விளங்கினரா?' என்று எண்ணினள் ராஜேசுவரி.

"அப்புறம்?"

"அப்புறம் என்ன, அப்புறம்?"

"அத்தான் உன்னுடன் என்ன பேசினர்?"

"அவர் என்னுடன் என்ன பேசினர்?"

"இல்லை, எதாவது பேசினரா என்று கேட்டேன்."

"ஆமாம். பேசினர். அந்தக் கதையை எல்லாம் சொல்லிக் கொண்டே வந்தார்."

சற்றுக் கோபத்துடன், "ஏன் உனக்குக் காது கண் இல்லையா?" என்று ராஜேசுவரி கேட்டாள்.

"காதும் கண்ணும் இருந்தால் இங்கிலீஷ் விளங்கி விடுமா?"

"ஓஹோ! இங்கிலீஷ் படத்திற்கா போயிருந்தீர்கள்? (மனத்திற்குள் - துரையும் துரைசானியும்!) சரி, எனக்குத் தூக்கம் வருது; என்னைத் தொல்லை பண்ணாதே, போ" என்று வெடுவெடுப்புடன் ராஜேசுவரி சொன்னாள்.

மறுநாள் காலையில் பாஸ்கரன் ஏதோ ஒரு பெரிய புத்தகம் ஒன்றைப் படித்துக்கொண்டிருப்பதைப் பார்த்ததும், மாரியப்ப செட்டியார், "அதென்ன புத்தகம், மாப்பிள்ளை?" என்று கேட்டார்.

"பகவான் ராமகிருஷ்ணரின் உபதேச மொழிகள்" என்று பாஸ்கரன் கூறினான்.

"அதெல்லாம் படிப்பதற்கு இது பருவமில்லையே மாப்பிள்ளை!" என்று புன்சிரிப்புடன் மாரியப்ப செட்டியார் கூறினார்.

முகத்தில் புன்சிரிப்புத் தோன்றியபோதிலும், உள்ளத்தில் அவருக்குக் கவலையே ஜனித்தது.

## அத்தியாயம் 17

# தொண்டு நிலயம்

"குழந்தைகளுக்குப் பால் கொடுக்கும் இவ்வேலை பெருந் தொல்லையாகவே இருக்கிறது. அதனால் பிரயோஜனம் இருப்பதாகவும் தோன்றவில்லை" என்றார் தொண்டு நிலயத்தில் ஒரு தொண்டரான கிருஷ்ணசாமி.

"ஏன்? விஷயம் என்ன?" என்று நிலயத்தின் தலைவரான நித்தியானந்தர் கேட்டார்.

"இன்று இரண்டு மூன்று பெண்களுக்குப் பால் கொடுக்க முடியாதென்று அனுப்பிவிட்டேன்."

"என்ன காரணத்திற்காக?"

"என்ன அண்ணா, நாம் எங்கெல்லாமோ பிச்சை எடுத்துக் குழந்தைகள் நன்றாக வளரவேண்டுமென்று பால் வழங்குகிறோம். அது குழந்தைகளுக்கா போய்ச் சேருகிறது?"

"பின் யாருக்குப் போய்ச் சேருகிறது?"

"அநேகர் அந்தப் பாலை விற்றுவிடுகிறார்கள். அந்தப் பணம் கள்ளுக்கடைக்குப் போய்ச் சேரக் கூடாதே என்பதுதான் என் பிரார்த்தனை!"

"உம்!"

கிருஷ்ணசாமி பின்னும் சொல்லலுற்றார்: "பெரும்பாலோர் இந்தப் பாலை என்ன செய்கிறார்கள் தெரியுமா, அண்ணா? கொண்டுபோய்க் காபி போட்டுச் சாப்பிடுகிறார்கள்."

"நன்றாய்ச் சாப்பிடட்டுமே. காபி சாப்பிடுவது அப்படி ஒன்றும் கெடுதலில்லையே! நம்மில் அநேகர் சாப்பிடவில்லையா? நாம்தானே இவ்வேழைகளுக்கு வழி காட்டியிருக்கிறோம்?

நம்மை அவர்கள் பின்பற்றும்போது அதற்காக நாம் அவர்களைத் தண்டிக்கலாமா?"

நித்தியானந்தருடைய பதிலைக் கேட்டுக் கிருஷ்ணசாமி சிறிது ஆச்சரியமுற்றார். நித்தியானந்தர் காபி சாப்பிடுவதில்லை; தொண்டு நிலயத்தில் ஒருவரும் காபி சாப்பிடுவதில்லை.

"ஆனால் பெற்றோர்கள் காபி சாப்பிடுவதற்காக இந்தப் பாலை நாம் வழங்கவில்லையே!" என்றார் கிருஷ்ணசாமி.

"அதற்காக அதை உபயோகித்தால், அதில் ஒன்றும் குற்றமில்லை, கிருஷ்ணசாமி!" என்று மீண்டும் நித்தியானந்தர் வற்புறுத்தினர். "நாம் எதையும் கொடுக்கும்போது, நிபந்தனையின்றிக் கொடுக்க வேண்டும்."

கிருஷ்ணசாமி மௌனமாக இருந்தார்.

"பணக்காரர்களிடம் பணம் இருக்கிறது. அவர்களெல்லாம் அதை நல்வழியில் செலவழிக்கிறார்களா?"

"நல்வழியில் செலவழிக்க வேண்டுமென்று சொல்வது நம் கடமையல்லவா?"

"ஆம், சொல்லவேண்டும். ஆனால் நம் சொற்படி கேட்காதவர்களை நாம் தண்டிப்பதில்லையே! தண்டிப்பதற்கு நமக்கு ஏது அதிகாரம்?"

கிருஷ்ணசாமி மௌனமாக இருந்தார்.

"நீங்கள் சொல்வதுபோல், வழங்குவதனால் கிடைக்கும் பணத்தை அநேகர் கள்ளுக்கடைக்கும் கொண்டு போவார்கள். ஆனால் அப்பொழுதுங்கூட எனக்கு இத்தொண்டில் சிறிதும் ஊக்கம் குன்றாது. நூறு குழந்தைகளுக்குப் பால் வழங்கும் ஓரிடத்தில், உண்மையாக அது ஒரு குழந்தைக்காவது போய்ச் சேர்ந்தால் போதும். அது வரைக்கும் வெற்றி நமக்குத்தான். நாம் பால் வழங்காவிடில் அந்த ஒரு குழந்தையுங்கூடப் பாலில்லாமல் தானே வாடும்? பாலில்லாமல் வாடும் குழந்தைகளின் எண்ணிக்கையில் ஒன்றையாவது நம்மால் குறைக்க முடிகிறதல்லவா?"

"அதுவுங்கூட முடியாவிட்டாலும் வெற்றி நமக்குத்தான் என்பது இப்பொழுது எனக்குப் புலனாகிறது" என்று கிருஷ்ணசாமி கூறினார். அவருடைய முகத்தில் உத்ஸாகம் கூடிய ஒரு விதமான சாந்த ஒளி பிரகாசித்தது.

இந்தச் சமயத்தில் மணி அடிக்கவே யாவரும் சாப்பாட்டிற்காக எழுந்தனர்.

பெங்களூரிலுள்ள ஆலைத் தொழிலாளர்களுக்குத் தொண்டு செய்வதற்காக நிறுவப்பட்டது தொண்டு நிலயம். தொழிலாளர்களுக்குப் பல விதங்களில் அந் நிலயம் தொண்டாற்றி வந்தது. தக்ஷிண பீடபூமியின் தென்பாகத்தில் கடல் மட்டத்திற்குமேல் சுமார் 3000 அடி உயரத்தில் அமைந்திருப்பது பெங்களூர் என்னும் நகரம். தக்ஷிண பீடபூமியைப் பழம் பாறைப் பீடபூமி என்பர் பூகோள சாஸ்திரிகள். எங்கே பார்த்தாலும் மேடுகளும், பள்ளங்களும், பாறைகளும், குன்றுகளும் நிறைந்த பிரதேசம். இங்குள்ள குன்றுகளைத் துர்க்கங்கள் என்றழைப்பர் ஜனங்கள். வளமற்ற பூமி. விவசாயத்திற்குத் தகுதியற்றது. புல் நன்றாய் வளரும். அந்தப் புல் வெளிகளில் மாடுகளையும் முக்கியமாக ஆடுகளையும் மேய்ப்பதே ஜனங்களின் முக்கியமான தொழில். ஆகையினால் இயற்கையாகவே இங்கே கம்பள நெசவு ஒரு முக்கியத் தொழிலாக அபிவிருத்தி அடைந்துவிட்டது. யந்திர சாதனமுள்ள இக்காலத்தில் அது ஆலைத் தொழிலாகவும் மாறி விட்டது. மண்வளமில்லாத பூமியில் பொன் வளம் ஏற்பட்டது இயற்கையின் விசித்திரங்களில் ஒன்று. தக்ஷிண பீடபூமி போன்ற பழம் பாறைப் பீடபூமிகளில் எல்லாம் உலோகங்கள் அபரிமிதமாகக் கிடைப்பது உண்டு. தக்ஷிண பீடபூமியிலும் உலோகங்களுக்குக் குறைவில்லை. அதன் தென் பாகத்திலுள்ள மைசூர் சமஸ்தானத்தில் தங்கம், மாங்கனீஸ், இரும்பு முதலிய பலவிதமான உலோகங்கள் வெட்டி எடுக்கப்படுகின்றன. இங்குள்ள சுரங்கங்களிலும் நெசவாலைகளிலும் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள். அவர்களில் தமிழ்க்

கூலிகளும் எண்ணிறந்தவர். தமிழ்நாட்டைச் சேர்ந்த தொழிலாளர்களிடையே சேவை செய்வதற்காகவே நித்தியானந்தர் தொண்டு நிலயத்தை ஸ்தாபித்தார். பல தமிழ் இளைஞர்கள் அவருடன் இத்தொண்டில் ஈடுபட்டனர்.

அவர்களுடைய தொண்டு பலதிறப்பட்டது. வாழ்க்கை நிலையில் அதல பாதாளத்திற்குத் தள்ளப்பட்டிருந்த தொழிலாளர்களின் வாசஸ்தலங்களும் உண்மையில் அதல பாதாளத்திலேயே இருந்தன. பெங்களூரிலுள்ள ஆரோக்கியமான மேடுகளிலெல்லாம் பிரபுக்களும், பணக்காரர்களும், மத்திய வகுப்பாரும் வசித்தனர். அங்குள்ள ஆரோக்கியமற்ற பள்ளங்களிலெல்லாம் தொழிலாளர்களும் ஏழைகளும் வசித்தனர். வசிப்பதற்கு மிகவும் ஆரோக்கியமான சீதோஷ்ண நிலையை உடையது பெங்களூர் நகரம். இயற்கை கொடுத்த அவ்வாரோக்கியமான வாயுநிலைகூடப் பாட்டாளி மக்களுக்கு மறுக்கப்பட்டது. அவர்களுக்கு ஆரோக்கியமான வீடுகள் அமைத்துக் கொடுத்தல், அவர்களுக்கு நல்ல உணவு, உடை முதலியவை கிடைப்பதற்கு வசதி செய்தல், அவர்களுக்கு இராப் பள்ளிகளும், அவர்களுடைய குழந்தைகளுக்குப் பகற் பள்ளிக்கூடங்களும் அமைத்தல், தொழிலாளர்களுக்கும் அவர்களுடைய குழந்தைகளுக்கும் உல்லாசமான பொழுதுபோக்குகள், விளையாட்டுக்கள் முதலியவைகளை ஏற்பாடு செய்தல், அநாதைக் குழந்தைகளுக்கு அன்னம், ஆடை, கல்வி முதலியவை கொடுத்துப் போஷித்தல்—இவ்விதம் பல துறைகளிலும் தொண்டு நிலயம் தொண்டாற்றி வந்தது.

தொண்டு நிலயத்தைப்பற்றி இதுவரையில் கவனித்த நாம், தொண்டர்களையும் அவர்களுடைய சாப்பாட்டையும் சிறிது கவனிக்கலாம். சாப்பாட்டறையில் தொண்டர்கள் யாவரும் அவரவர்களுடைய தாம்பாளத்திற்கு முன்பு உட்கார்ந்திருந்தனர். நித்தியானந்தரும் ஓர் ஆசனத்தில் அமர்ந்திருந்தார். அவருக்குப் பக்கத்தில் சுமார் மூன்று வயசுடைய பாலகன் ஒருவன் அமைதியுடன் அமர்ந்திருந்தான். அவன்

ஓர் அநாதைச் சிறுவன். நிலயத்தில் வளர்ந்து வருபவன். தொண்டர் ஒருவர் பரிமாற யாவரும் சாப்பிட ஆரம்பித்தனர். சிறுவனும் தனக்கு இடப்பட்ட அன்னத்தை அழகாகவும், முறையாகவும் பிசைந்து சாப்பிட்டான். அதையே மிகுந்த ஆச்சரியத்துடன் கவனித்துக்கொண் டிருந்த தொண்டர் ஒருவர், "அண்ணு!" என்ருர்.

நித்தியானந்தரைத் தொண்டர்கள் யாவரும் 'அண்ணு' என்றும், வெளியிலுள்ள ஜனங்களும் தொழிலாளர்களும் 'சாமி' என்றும் அழைப்பது வழக்கம்.

நித்தியானந்தர் "ஏன்?" என்று கேட்பது போல் அத்தொண்டரை ஏறிட்டுப் பார்த்தார்.

"இந்தச் சின்னப் பயல் இவ்வளவு அழகாய் ஒரு பருக்கை கூடச் சிந்தாமல் சாப்பிடுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறதே, அண்ணு" என்ருர் ஐயாசாமி.

"ஏன்?"

"என்னுடைய தங்கைகளும் தம்பிகளும் சாப்பிடுவதற்கு எவ்வளவு முரண் செய்கிருர்கள் என்பதை நான் வீட்டில் கண்ணுரக் கண்டிருக்கிறேன்."

"அவர்களைக் கெடுப்பதற்குப் பெற்ருேர்கள் இருக்கிருர்களல்லவா? இவனுக்கு யார் இருக்கிருர்கள்?" என்று சொல்லி நித்தியானந்தர் சிரித்தார்.

"அந்தக் குழந்தைகளைப்பற்றி எத்தனை கவனிப்பு! அவர்கள் பால் சாப்பிடாவிட்டால் கவலை; காபி சாப்பிடாவிட்டால் கவலை; சாதம் சாப்பிடாவிட்டால் கவலை. சாதத்தை ஊட்டுவதற்கு எத்தனை பேர்? இப்படியெல்லாம் கவனித்துங்கூட அவர்கள் இவனைவிட இளைத்தும் ஆரோக்கியம் குறைந்துமே இருக்கிருர்கள். எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது ஒரு நோய்."

"குழந்தைகளைப் பற்றி அதிகமாகக் கவனிக்காமல் இருப்பதே, அவர்களை நன்ருகக் கவனிப்பதாகும்" என்ருர் நித்தியானந்தர்.

இதற்குள் தொண்டர் ஒருவர் அச்சிறுவனைப் பார்த்து, "ஏண்டா தம்பி, நீ யார் பையன்?" என்றார்.

சிறுவன் சாவதானமாக வாயிலிருப்பதை விழுங்கி விட்டு, "அம்மா பைய, அப்பா பைய!" என்றான்.

"அப்புறம்?"

"தொந்து நிலப் பையா!"

"அப்புறம்!"

"சாமிப் பையா!" என்றான்

யாவரும் சிரித்தனர்

சிறிது நேரத்திற்குப் பின் பாதிச் சாப்பாட்டிலேயே சிறுவன் எழுந்து நின்றான்.

"என்னடா தம்பீ!" என்றார் நித்தியானந்தர்.

"ஆய்" என்றான் சிறுவன்.

'ஏண்டா காலையிலேயே போகவில்லை?" என்று ஒரு தொண்டர் அதட்டினார்.

"அப்ப வரலே" என்றான் சிறுவன்.

"உனக்கு இப்பவாவது வருதேடா தம்பி, எனக்கு எப் பொழுதும் வரமாட்டேன் என்கிறதே" என்று சிரித்தார் இன்னொரு தொண்டர்.

சிறிது நேரத்திற்குப் பின் சிறுவன் வந்துசேர்ந்தான். தொண்டர் ஒருவர் அவனுக்குக் கால் கழுவி விட்டார். "சாமி!" என்று வெளியில் ஒரு சத்தம் கேட்டது.

"வரலாமா, சாமி?" என்று ஒரு பெண் கேட்டாள்.

"வரலாம்" என்று சொன்னபோது, "சாப்பாட்டு வேளை போலிருக்குது" என்று சொல்லிக்கொண்டே ஒரு பெண் அறைக்குள் நுழைந்தாள்.

"நேற்று எங்கள் வீட்டில் ஒரு விசேஷம் சாமி. நேற்று வருவதற்கு முடியவில்லை. உங்களுக்கெல்லாம் கச்சாயம்

கொண்டுவந்தேன்'' என்று சொல்லி ஒரு பாத்திரம் நிறையத் தின்பண்டங்களை வைத்துவிட்டு அவள் நின்றாள்.

"இன்று சிறுவனுக்கு வேட்டைதான்'' என்றார் ஒரு தொண்டர்.

"ஏன், நமக்குந்தான்!'' என்று இன்னொரு தொண்டர் கூறினார்.

இங்ஙனம் சாப்பாடு முடிந்து, யாவரும் அவரவர் வேலையைக் கவனிக்கச் சென்றனர்.

அச்சமயம் வெளியில் காத்துக்கொண் டிருந்த நாகரிக உடை அணிந்திருந்த இளம்பெண் ஒருத்தி வெளியில் வந்த தொண்டர் ஒருவரை நோக்கி, "நான் இந்த நிலயத் தொண்டரைப் பார்க்க முடியுமா?'' என்று கேட்டாள்.

"ஓ, தாராளமாகப் பார்க்கலாம்'' என்று தொண்டர் கூறினார்.

"அவரிடம் தயவு செய்து சொல்லுங்கள்.''

"அவசியமில்லை. நானே கூட்டிச் செல்கிறேன். வாருங்கள்'' என்று அந்தப் பெண்ணை நித்தியானந்தரின் அறைக்குத் தொண்டர் அழைத்துச் சென்றார். அந்தப் பெண் யார்?

## அத்தியாயம் 18

# கிளை விட்டுக் கிளை தாவல்

அன்று அந்த மெயிலில் ஏறிய நூற்றுக்கணக்கான பிரயாணிகளில் பாஸ்கரனும் ஒருவன். அவன் எங்கே செல்லுகிறான்? எதற்காக?

ஆடிக்காக மாமனார் வீட்டிற்குச் சென்றிருந்த பாஸ்கரன் ஊருக்குத் திரும்பியபொழுது, அவனுக்காக ஒரு கடிதம் காத்துக்கொண்டிருந்தது. அது பெங்களூரிலுள்ள காந்திமதியிடமிருந்து வந்த கடிதம். அதை ஆவலுடன் பாஸ்கரன் பிரித்துப் பார்த்தான். அவள் எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷையில் நல்ல மார்க்குகள் வாங்கித் தேர்ச்சிபெற்றிருப்பதாக மிகுந்த சந்தோஷத்துடன் தெரிவித்திருந்தாள். பாஸ்கரன் பி. ஏ.யில் தேர்ச்சி பெற்ற செய்தி சில தினங்களுக்கு முன்புதான் பத்திரிகையில் வந்தது. அதை அவன் காந்திமதிக்குத் தெரிவிக்கவில்லை. அவனுக்குக் கலியாணமான பின்பு அவளுக்கு அவன் எழுதிய சுருக்கமான ஒரு கடிதத்திற்கு அப்புறம், வேறு எக்கடிதமும் எழுதவில்லை. ஆனால் அவள் தான் பரீக்ஷையில் வெற்றி பெற்ற சந்தோஷத்தை அவனுடன் பங்கிட்டுக்கொண்டிருக்கிறாள். பாஸ்கரன் ஏன் அவளுக்கு ஒரு கடிதங்கூட எழுதவில்லை என்று மிகுந்த கோபத்துடன் கேட்டிருந்தாள். அவன்மீது கோபித்துக்கொள்வதற்குத் தனக்கு உரிமை உண்டென்று அவள் எண்ணினாள்.

கடைசியாக அவள் கடிதத்தை முடித்திருந்த விதம், பாஸ்கரனுடைய உள்ளத்தில் சிறிது திகிலை உண்டாக்கியது. "இதுதான் என் கடைசிக் கடிதம். இந்தக் கடிதத்திற்குத் தங்களிடமிருந்து எந்த விதமான பதிலும் வராவிட்டால், என்னுடைய வாழ்க்கையின் போக்கு என்ன விதமாக

இருக்குமோ; நான் அறியேன். நான் இப்பொழுது எந்த விதமான தீர்மானமும் செய்யவில்லை. ஆனால் தங்களுடைய மௌனம் என் வாழ்க்கையில் என்ன பலனை உண்டாக்கும் என்பதை நினைப்பதற்கே எனக்குப் பயமாக இருக்கிறது.” ஆனால் இந்தக் கடிதத்திற்குக்கூட அவன் பதில் எழுதவில்லை. அந்தச் சமயத்தில் இப்படியெல்லாம் நடக்குமென்று அவன் அறிந்தானா?

அப்பொழுது அவன் காந்திமதிக்குக் கடிதம் எழுதியிருக்க முடியாது, கூடாது என்பது உண்மைதான். ஆனால் இப் பொழுது? இப்பொழுது காந்திமதிக்குக் கடிதம் எழுதப் பாஸ்கரனுக்கு உரிமை உண்டல்லவா?

தன்னுடைய வீட்டைவிட்டு வெளியேற வேண்டிய அவசியம் அவனுக்கு ஏற்பட்ட பொழுது, எங்கே செல்வது என்ற பிரச்னை அவனுடைய உள்ளத்தில் எழுந்து, உடனே ‘பெங்களூருக்குத்தான்’ என்று அவனுடைய மனம் வெகு சுலபமாகத் தீர்மானித்துவிட்டது. ஏன், ஏன் என்று ரெயிலில் ஒரு பெஞ்சியின் மீது படுத்திருந்த பாஸ்கரன் தன்னுடைய உள்ளத்தை அலசிப் பார்க்க ஆரம்பித்தான். உள்ளத்தை அலசும் வேலையில் அவன் தேர்ச்சி பெற்றவன் அல்ல. குழப்பமான பல எண்ணங்கள் முதலில் அவனுடைய உள்ளத்தில் தோன்றின. இந்தியாவிலுள்ள எல்லா இடங்களிலும் பெங்களூரை அவன் ஏன் தேர்ந்தெடுத்தான்? அவனுடைய இருதயத்தின் ஏதாவது ஒரு மூலையில் காந்திமதிக்கு இடம் இருந்ததா? பாஸ்கரன் யோசிக்கத் தொடங்கினான். காந்திமதி மிக அழகானவள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மலைமீது தோன்றிய அம்மங்கை தான் முதல் முதல் அவனுடைய உள்ளத்தைக் கவர்ந்தவள். எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷையில் நல்ல மார்க்குகள் வாங்கித் தேர்ச்சி பெற்றிருந்தாள். அவளுடைய மார்க்குகளை எல்லாம் அவள் தன்னுடைய கடைசிக் கடிதத்தில் எழுதியிருந்தாள். எதற்காக? பாஸ்கரனுடைய உள்ளத்தை மேலும் கவர்வதற்

காகவா? திருப்பதியில் முதல் தடவை அவளைப் பார்த்தபோதே அவள் மிகுந்த புத்திசாலியான பெண் என்பதைப் பாஸ்கரன் அறிந்திருந்தான். எவ்வகையிலும் அவள் அவனுக்குத் தகுதியானவளே. அவளைப் பாஸ்கரன் கல்யாணம் செய்துகொண்டால் என்ன? இப்பொழுது அவளைக் கல்யாணம் செய்துகொள்ள அவனுக்கு உரிமை உண்டல்லவா? அவனுக்கு விடுதலை கிடைத்து விட்டதல்லவா?

ஆனால் ஒரு கூட்டிற்குள் அடைபட்டிருந்த கிளி, அதிலிருந்து பறந்து சென்று இன்னொரு கூண்டிற்குள் அகப்பட்டுக்கொள்வதில் என்ன பயன்? தெய்வாதீனமாக அவனுக்குக் கிடைத்திருக்கும் இவ்விடுதலையை மீண்டும் தன்னைப் பந்தப்படுத்திக்கொள்வதிலா உபயோகிப்பது? மரத்தில் ஒரு கிளையைப் பற்றினன் அவன். அது முறிந்துவிட்டது. உடனே இன்னொரு கிளையைப் பற்றுவதில் என்ன பிரயோஜனம்? அதுவும் முறிந்துவிடாதென்பது என்ன நிச்சயம்? மாறுதலடையக் கூடிய மாதருடைய அன்பை ஆதரவென நம்புவதைக் காட்டிலும், என்றுமே ஏமாற்றம் அளிக்காத அன்பையுடைய ஈசன் திருப்பாதங்களையே ஆதரவெனப் பற்றிக்கொள்வது நலமல்லவா? கிளைகளுள் ஒன்றைவிட்டு ஒன்றை நம்புவதைக் காட்டிலும், எல்லாக் கிளைகளுக்கும் மூலாதாரமான அடிமரத்தையே நம்புவது மேல் அல்லவா?

பெங்களூர் மெயில் ஒரு ஸ்டேஷனில் நின்றது. அந்த ஸ்டேஷனில் கூட்டம் அதிகமாக இருந்தது. பாஸ்கரன் அதுவரையில் சௌகரியமாகப் படுத்துக்கொண்டு வந்த வண்டியிலும் ஜனங்கள் ஏராளமாக ஏறினர்கள். அந்தச் சந்தடியில் அவனுடைய யோசனை கலைந்தது. ஜனங்கள் அவனுடைய இடத்திற்கு வந்து அவனை எழுப்புவதற்கு முன்பு அவன் தானுக எழுந்து உட்கார்ந்தான். இந்தப் புதிய மனப்பான்மை அவனுக்கு மிகவும் விசித்திரமாக இருந்தது. அதற்கு முன்னம் அவன் செய்திருந்த பல பிரயாணங்கள் அவனுக்கு ஞாபகம் வந்தன.

மதராசுக்குப் போகும்போதும் வரும்போதும் இம்மாதிரி பல தகராறுகள் நடப்பது வழக்கம். அவன் பெஞ்சின்மீது தன் படுக்கையை விரித்து நீட்டி, நிமிர்ந்து படுத்திருப்பான். அடுத்தாற்போல வருபவர்கள் அவனை எழுந்திருக்குமாறு சொல்வார்கள். அவன் எழுந்திருக்க மாட்டான். சத்தம், சச்சரவு ஏற்படும். சில சமயம் இது, போலீஸ், ரெயில்வே கார்டு முதலியவர்கள் வரைக்குங்கூடப் போகும். ஆனால் இப்பொழுதோ மற்றப் பிரயாணிகள் வந்து சொல்வதற்கு முன்பு அவன் எழுந்து அவர்களுக்கு இடங்கொடுத்தான். இப்பொழுது அவன் அத்தகைய பசுவுமான மனப்பான்மையோடு இருந்தான்.

அவனுக்கு எதிர்த்த பெஞ்சியில் ஓர் இளங் கணவனும் மனைவியும் உட்கார்ந்திருந்தார்கள். பார்வைக்கு அவர்கள் மிகவும் சந்தோஷமான தம்பதிகளாகத் தோன்றினர். புது மண இன்பம் அவர்களுடைய முகத்தில் பிரகாசித்தது. ஒரு சமயம் - அதுவும் வெகு நாட்களுக்கு முன்பல்ல - அவனும் அவர்களைப்போலத்தான் இன்பமாக இருந்தான். ஆனால் இப் பொழுது அந்த இன்பம் எங்கே? வெளித் தோற்றத்துக்கு இவ்வளவு இன்பகரமாகத் தோன்றும் அவர்களுடைய உள்ளங் களினுள்ளே எத்தகைய எண்ணங்கள் உலாவுகின்றனவோ? யார் கண்டது? சீ! மாய உலகம்!

வண்டி மெதுவாக நகர்ந்தது. பாஸ்கரனுக்கு முன்னால் உட்கார்ந்திருந்த இளந் தம்பதிகளின் இல்லறச் சகடமும் அப்பொழுதுதான் நகர ஆரம்பித்திருக்கிறது. அதனால்தான் அவர்கள் அத்தனைச் சந்தோஷத்துடன் இருந்தார்களோ? மெதுவாக ஓட ஆரம்பித்திருக்கும் இந்தப் புகைவண்டியானது, சிறிது தூரத்திலுள்ள அடுத்த ஸ்டேஷனுக்குச் சென்றதும் 'தக்'கென்று நின்றுவிடும்; அவனுடைய இல்லறச் சகடம் நின்றது போல்! அவ்விளந் தம்பதிகளின் வாழ்க்கையும் அப்படித்தானோ? சற்றுத் தயங்கினான். பிறருடைய வாழ்க்கை யைப்பற்றி அபிப்பிராயம் கொள்வதற்கு அவனுக்கு என்ன

அதிகாரம்? உண்மையைச் சிந்திப்பதில் என்ன தவறு? அடுத்த ஸ்டேஷனில் நிற்காவிட்டால் அதற்கு அடுத்த ஸ்டேஷனில், பெங்களூரில் கட்டாயம் நின்றுவிடும். அதற்கப்பால் செல்ல அவனுடைய உள்ளம் மறுத்தது.

கன அந்தகாரத்தைக் கிழித்துக்கொண்டு ரெயில் வேகமாக முன்னேறிச் சென்றது. குன்றுகளையும், மரங்களையும், காடுகளையும், தந்திக் கம்பிகளையும், கிராமங்களையும், நகரங்களையும் பின்னடையச் செய்து அவைகள் எல்லாம் புறங்காட்டி ஓட, ரெயில் வேகமாகப் பெங்களூரை நோக்கிச் சென்றுகொண்டிருந்தது. அதே போலத்தான் பாஸ்கரனும் வீடு, வாசல் எல்லாம் துறந்து, மனைவியைப் புறக்கணித்துவிட்டு வாழ்க்கைப் பாதையில் வேகமாக முன்னேறிச் செல்வதாக நினைத்துக் கொண்டான். அச்சமயம் இயற்கையாகவே பகவான் புத்தருடைய வீரத் துறவு அவனுடைய மனக்கண் முன்பு தோன்றியது. நடந்ததெல்லாம் நன்மைக்காகவே நடந்ததென நினைத்துக்கொண்டான். அதில் அவனுக்கு ஓர் இன்பமும் பெருமிதமுங்கூடத் தோன்றின. கேவலம் இல்லற சுகத்தை விடப் பெரிய இன்பத்தைக் கடவுள் தனக்காக ஒதுக்கி வைத்திருக்கிறாரென அவன் கனவு கண்டான்.

நடந்தது என்ன? தம்பதிகளை ஆடிக்கு அழைத்துச் சென்றிருந்த மாரியப்ப செட்டியார், சில தினங்களில் அவர்களை மீண்டும் சாத்தூருக்குக் கொண்டுபோய்விட்டார். மேலும் அவர்களை மதுரையில் வைத்திருக்க அவருக்கு இஷ்டமில்லை. சாத்தூரில் அவர் இருந்த இரண்டொரு தினங்களில் அவர் கண்ட ஆனந்தக் காட்சிக்கும் மதுரையில் கணவன் மனைவியருக்கிடையே அவர் கண்ட தொடர்புக்கும் அதிக வித்தியாசம் இருந்தது. 'ஊரின் கோளாறுதானோ? தாம் அவர்களைக் கூட்டிக்கொண்டு வந்த நேரத்தின் கோளாறோ?' என்று அவர் நினைத்தார். ராஜேசுவரியின் ஒவ்வொரு பார்வையும், ஒவ்வொரு செயலும் பாஸ்கரனுடைய சந்தேகத் தீயை

வளர்த்தன. ஆகையினால் தம்பதிகளை மேலும் அங்கு வைத்திருப்பது நலமில்லையெனத் தோன்றியது. ஆனால் அப்பொழுதுங் கூடப் பாஸ்கரனுடைய உள்ளத்தில் எப்பேர்ப்பட்ட புயல் கிளம்பிக்கொண் டிருந்ததென்பதை அவர் பூரணமாக அறிந்து கொள்ளவில்லை.

தம்பதிகளைச் சாத்தூருக்குக் கொண்டுபோய் விட்டுத் தம் மகளின் துணைக்காக ஜயலக்ஷ்மியும் சில நாட்கள் அங்கே இருக்கட்டும் என்று விட்டுவந்தார். ஆனால் ராஜேசுவரிக்கும் பாஸ்கரனுக்கும் உள்ள தொடர்பானது மேன்மேலும் மோசமாகிக்கொண்டே வந்தது. ராஜேசுவரியின்மீது பாஸ்கரன் கொண்ட சந்தேகமானது நாளுக்கு நாள் முற்றியது. அங்ஙனம் சந்தேகம் கொள்ளுவதற்குத் தன்னுடைய மனப்பான்மை காரணமல்ல, ராஜேசுவரியின் நடத்தையே காரணம் என்று பாஸ்கரனுக்குத் தோன்றியது.

புகையும்போதே, அணைக்காவிடில் புகைவது கடைசியில் எரிந்துதான் தீரும். அது அன்று காலையில் நேர்ந்தது. காலையில் பலகாரம், காபி சாப்பிட்டுவிட்டுப் பாஸ்கரன் ஒரு சிறிய ஜோலியாக வெளியில் சென்றான். மீனாக்ஷிப் பாட்டி அவன் வெளியே போவதைக் கண்டு, "எங்கப்பா போகிறாய்? சாப்பாட்டிற்குச் சீக்கிரமாக வந்துவிடு" என்று சொன்னாள். "வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

வெளியில் அதிக நேரம் இருக்கப் பாஸ்கரனுடைய மனம் இடங்கொடுக்கவில்லை. ஏனோ அன்று ராஜேசுவரியின்மீது அவனுக்கு விசேஷ சந்தேகம் ஏற்பட்டிருந்தது. ஏதேதோ எல்லாம் மனத்தில் பொல்லாத கற்பனைகள் செய்துகொண்டு, வீட்டிற்குத் திரும்பியபொழுது, ராஜேசுவரியை வீட்டில் காணவில்லை. பின்பு பாட்டியைக் கேட்டான். "எங்கேயோ, நான் பார்க்கவில்லையே! அப்பவேபிடித்துக் காணோம். எங்கேயாவது போயிருப்பாள்" என்றாள் மீனாக்ஷிப் பாட்டி. அந்தச் சமயம் மாடியில் ஏதோ சத்தம் கேட்பதுபோல் தோன்றவே, அவசர

அவசரமாகப் பாஸ்கரன் மாடிக்குச் சென்றான். அங்கே அவன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிடச் செய்தது. ராஜேசுவரியை வேற்று வாலிபன் ஒருவன் அணைந்து முத்தமிட யத்தனித்துக் கொண்டிருந்தான். இக்காட்சியை ஒரு விநாடிதான் பாஸ்கரன் பார்த்திருப்பான். இதற்குமேல் அதைப் பார்த்துக்கொண் டிருக்க அவன் மனம் சகிக்கவில்லை. அவ்வாலிபன் யார்? அவனை எங்கோ பார்த்திருப்பதுபோல் பாஸ்கரனுக்குத் தோன்றியது. அவனுடைய ஆடைகளையும் அலங்காரங்களையும் பார்த்தபோது தன்னைப் பிறர் லகுவில் அடையாளம் கண்டு கொள்ளாதவாறு, அவன் வேஷமணிந்து வந்திருந்தானே என்று நினைக்கவேண்டி யிருந்தது.

அவ்வளவுதான். அதற்குமேல் பாஸ்கரன் அங்கே தாமதிக்கவில்லை. அடுத்தாற்போல் புறப்படும் ரெயிலில் திருச்சி சென்று, பெங்களூர் செல்லும் ரெயிலில் ஏறினான்.

வாரம் தவறினாலும் காந்திமதியிடமிருந்து பாஸ்கரனுக்குக் கடிதம் வருவதுமட்டும் தவறுவதில்லை. மீண்டும் பாஸ்கரன் யோசனை செய்யலானான். அவள் அழகிலும் குணத்திலும், படிப்பிலும் எல்லா வகைகளிலும் தனக்குத் தகுதியானவளே என்று அவனுடைய உள்ளம் கூறியது. அவள் உண்மையிலேயே அவனைக் காதலித்தாள் என்பது அவளுடைய கடிதங்களி லிருந்து தெரியவந்தது. அவளைக் கல்யாணம் செய்துகொண்டால் என்ன? இப்பொழுது யார் அவனைத் தடுக்கமுடியும்? அவன் மேல் எந்தவிதமான குற்றமும் இல்லையல்லவா! குற்றம் முழுவதும் ராஜேசுவரியின்மீதுதானே? அதை யாரும் மறுக்க முடியாதல்லவா? ஆனால் சீ! சீ! ஒரு கிளையை விட்டு இன்னொரு கிளையைப் பிடிப்பதா? அதுவும் ஒடிந்து விட்டால்?

இப்படி அவன் நினைத்துக்கொண் டிருக்கையில் வண்டி ஒரு ஸ்டேஷனில் நின்றது. என்ன ஸ்டேஷன் என்று வெளி யில் எட்டிப் பார்த்தான். பெங்களூர் கன்டோன்மென்ட். அங்கேதான் காந்திமதி வசித்தாள். அவளுக்குக் கடிதம் எழுதி

யிருந்தால் அவனை வரவேற்பதற்கு அவள் ஸ்டேஷனுக்கே வந்திருப்பாள். ஏனோ தெரியவில்லை; அவள் எங்காவது தென் படுகிறாளா என்று பிளாட்பாரம் முழுவதும் பார்த்தான். அங்கே இறங்கிவிடலாமென்றும் ஒரு கணம் நினைத்தான்.

வண்டி நகர்ந்தது. விடி ஸ்டேஷனில் கடைசியாக நின்றது. பாஸ்கரன் இறங்கினான். மீண்டும் தயக்கம். "கண்டோன்மென்டா, மல்லேசுவரமா, எங்கே ஐயா போறீங்க?" என்று வண்டிக்காரன் மீண்டும் கேட்டான். கடைசியில் "மல்லேசுவரம்" என்று தீர்மானமாகப் பாஸ்கரன் பதிலளித்தான்.

தொண்டு நிலயத்தை அவன் அடைந்தபொழுது, காலை சுமார் ஐந்து மணி இருக்கும். காலைப் பிரார்த்தனை நடந்து கொண்டிருந்தது. அது முடியட்டும் என்று வராந்தாவில் இருந்த ஒரு நாற்காலியில் அமர்ந்தான்.

நிலயவாசிகளில் ஒருவர் பாட, யாவரும் பின்பற்றிப் பாடினார்கள். பின் வரும் கீர்த்தனை சைந்தவி ராகத்தில் பாடப்பட்டது.

பல்லவி

கதி நீ அல்லால் பதியே தெந்தாய்
கிருபா கரா குகா (கதி)

அநுபல்லவி

மதியா துனை இதுநாளுமே
வந்தே னுயினும் மைந்த னல்லவோ (கதி)

சரணம்

அயன் மாலரன் யாவரும் நீயே
அண்டினேன் உனையே ஆதரிப் பாய்நீயே
சுயஞ் ஜோ தியே சுகவா ரிதியே
சுந்தரர்க் கருள் தந்தவர் நீயே

பல விரதங்களிலும் உழன்றுகொண்டிருந்த பாஸ்கரனுடைய உள்ளத்திற்கு இக்கீர்த்தனமும், தொண்டு நிலயத்தில் குடிகொண்டிருந்த சாந்தியும், எல்லையற்ற அமைதியையும் ஆறுதலையும் அளித்தன.

பிரார்த்தனை முடிந்ததும் வெளியில் வந்த நித்தியானந்தர், ஒரு வாலிபர் தமக்காகக் காத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தார்.

## அத்தியாயம் 19

# இராப்பள்ளிக்கூடம்

"தொண்டு நிலயத்திற்கு என்னை அனுப்பிய விதி நல்விதி தான் போலும்! இங்கே உங்களைப் பார்க்கலாம் என்று நான் கனவிலும் கருதவில்லை. நீங்கள் எவ்வளவு காலமாக இங்கே இருக்கிறீர்கள்? எப்பொழுது இங்கே வந்தீர்கள்?" என்று காந்திமதி பாஸ்கரனைப் பார்த்துக் கேட்டாள்.

இருவருக்கும் ஒருவரை யொருவர் அங்கே பார்க்க ஆச்சரியமாகவே இருந்தது.

அவன் கேட்ட கேள்விகளுக்கு ஒரு புன்முறுவலால் பதிலளித்துவிட்டு, "வீட்டில் தாத்தா, அம்மா எல்லோரும் சௌக்கியந்தானே?" என்று பாஸ்கரன் கேட்டான்.

"எல்லோரும் சௌக்கியந்தான். நீங்கள் இங்கிருப்பது தாத்தாவுக்குத் தெரிந்தால், அவர் வெகு சந்தோஷப்படுவார். உங்களைப் பார்க்கவேண்டுமென்று அவருக்கு ரொம்ப ஆசை. நீங்கள் அவசியம் வீட்டிற்கு வரவேண்டும்."

"அதற்கென்ன, வருகிறேன்" என்றான் பாஸ்கரன். அச் சமயம் அங்கே வந்த நித்தியானந்தர் அவர்கள் இருவரும் அன்னியோன்னியமாகப் பேசிக்கொண் டிருப்பதைப் பார்த்து, "காந்திமதியை உங்களுக்கு முன்பே தெரியுமா?" என்று கேட்டார்.

"தெரியும்" என்று பாஸ்கரன் பதிலளித்தான். அவ னுடைய முகத்தின் நிறம் சற்று மாறியது.

"இவ்வளவு தூரம் தெரிந்திருந்தால் அன்று அப்படி..." என்று நிறுத்தி, நித்தியானந்தர் சிரித்தார். அந்தச் சமயம் மணி அடிக்கவே மூவரும் அவரவர்கள் வேலையைப் பார்க்கச் சென்றனர்.

பாஸ்கரன் தொண்டு நிலயத்தில் ஒரு தொண்டனாகச் சேர்ந்துவிட்டான். பிரார்த்தனை முடிந்ததும் அன்று வெளியில் வந்த நித்தியானந்தர், பாஸ்கரன் வெளியில் காத்துக்கொண்டிருப்பதைப் பார்த்ததும், அவனை உள்ளே அழைத்துக்கொண்டு சென்றார். அவரிடம் பாஸ்கரன் தன் விருத்தாந்தம் முழுவதையுங் கூறித் தான் தொண்டு நிலயத்தில் ஒரு தொண்டனாகச் சேர விரும்புவதாகச் சொன்னான். நித்தியானந்தர் எவ்விதமான ஆக்ஷேபமும் இன்றி அவனை ஏற்றுக்கொண்டார்.

அவன் தொண்டு நிலயத்தில் சேர்ந்ததற்கு மறுதினம் நிலயத்தில் தொண்டர்களின் கூட்டம் ஒன்று நடந்தது. ஒரு பெண் நிலயத்தில் சேர்ந்து தொண்டு செய்ய விரும்புவதாகச் சொல்லி அவளை நிலயத்தில் சேர்த்துக்கொள்ளலாமா என்ற பிரச்னையை நித்தியானந்தர் கிளப்பினார். பாஸ்கரனும் அக் கூட்டத்திற்குச் சென்றிருந்தான். போகும்பொழுது விவாதத்தில் கலந்துகொள்ளும் நோக்கம் அவனுக்கு இல்லை. நிலயத்தில் அவன் புதிதாகச் சேர்ந்திருந்ததாலும், அவனுடைய பழக்க வழக்கங்கள், கொள்கைகள் அவனுக்குப் பூர்ணமாகத் தெரியாததாலும், கூட்டத்தின் நடவடிக்கைகளைக் கவனித்துக்கொண்டிருப்பதற்காகவே சென்றான். ஆனால் அன்றைக் கூட்டத்தின் விஷயம் அவனை வலிய விவாதத்தில் இழுத்து விட்டது. தொண்டர்களில் சிலர் பெண்களை நிலயத்தில் சேர்த்துக்கொள்வதற்குச் சாதகமாக இருந்தனர். ஆனால் பெரும்பான்மையோர் அதற்கு விரோதமாக இருந்தனர். எல்லோரைக் காட்டிலும் மிகத் தீவிரமாக அப்பிரச்னையை எதிர்த்தவன் பாஸ்கரனே. பெண்களைச் சேர்த்தால் நிலயத்தின் தூய்மையும் அமைதியுங் கெட்டுவிடும் என்றும், வெளியில் பலர் பலவிதமாகப் பேசுவார்களென்றும், வீண் அபவாதத்திற்கும் பேச்சுக்கும் இடம் உண்டாகும் என்றும் சொன்னான். ஆனால் நித்தியானந்தர் பிரச்னைக்குச் சாதகமாக இருந்தார். ஏலாக் கற்பினாலும், காணுக் கற்பினாலும் அதிகப் பிரயோசனம் ஏற்படாதென்பதும், ஆடவர்களின் வாழ்க்கை பெண்களினால்தான் பூர்த்தியாக

வேண்டும் என்பதும் அவருடைய அபிப்பிராயம். இதைக் கேட்டபோது பாஸ்கரனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

நித்தியானந்தர் பிரம்மசாரி. அவர் அங்ஙனம் விவாதித்தது அவனுக்கு அதிசயமாகவே இருந்தது. "முற்காலத்திலாகட்டும், தற்காலத்திலாகட்டும்; பெண்களின் தூய்மையான அன்புதான் ஆசிரமங்களின் வளர்ச்சிக்கும் பெருமைக்கும் முக்கிய காரணமாக இருக்கிறது" என்று மேலும் நித்தியானந்தர் கூறினர். ஆகையினல் கடைசியில் ஒரு சமரசத்துக்கு வந்தார்கள். அதாவது பிரஸ்தாபப் பெண்ணை நிலயத்தில் அங்கத்தினராகச் சேர்க்க வேண்டாமென்றும், அப்பெண் தன்னுடைய வீட்டில் இருந்துகொண்டே, நிலயத்தின் இராப் பள்ளிக்கு மட்டும் தொண்டாற்றிவிட்டுச் செல்லட்டும் என்றும் முடிவு செய்தார்கள். காந்திமதியைப்பற்றித்தான் அம்முடிவு செய்யப்படுகிறதென்று அப்பொழுது பாஸ்கரனுக்குத் தெரியாது.

காந்திமதிக்கு இம்முடிவு தெரிவிக்கப்பட்ட பொழுது, சேவை செய்வதற்குத் தனக்குக் கொடுக்கப்பட்ட இச்சிறிய சந்தர்ப்பத்திற்காக அவள் மிகவும் சந்தோஷம் அடைந்தாள். நிலயத்திற்கு வந்து அவள் தொண்டாற்ற ஆரம்பித்தபோது இன்னெரு பிரச்னையும் கிளம்பியது. இராப் பள்ளிக்கூடம் முடிய இரவு ஒன்பது மணியாயிற்று. அந்நேரத்தில் அச்சிறு பெண்ணைத் தனியாக வீட்டிற்கு அனுப்புவது முறையாகத் தோன்றவில்லை. முதலில் காந்திமதியின் தாத்தா அவளுடன் வந்து போவதாக இருந்தது. ஆனல் பின்னல் அது சாத்தியமாக இல்லை. என்ன செய்வதென்று நித்தியானந்தருக்கோ மற்றத் தொண்டர்களுக்கோ ஒன்றும் புரியவில்லை. ஆகையினல் காந்திமதியைக் கேட்பதெனத் தீர்மானித்தார்கள். அவளைக் கேட்டபொழுது, இருளில் தனியாகப் போகத் தனக்குப் பிரியமில்லை என்றும், பாஸ்கரன் தன் குடும்பத்தின் நண்பர் என்றும், அவர் தன்னை வழி யனுப்பி வருவதில் ஆக்ஷேபம் இல்லை என்றும் சொன்னள். அவளுடைய வீடு தொண்டு நிலயத்திலிருந்து

சுமார் மூன்று மைல் தூரத்தில் இருந்தது. ஆகையினால் பாஸ்கரனுக்குத் தினந்தோறும் ஆறு மைல் நடக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது.

"காற்றில் ஏறி அவ் விண்ணையுஞ் சாடுவோம்
காதற் பெண்கள் கடைக்கண் பணியிலே"

என்று பாரதியார் பாடுகிறார். ஆகையினால் காந்திமதி விஷயத்தில் ஆறு மைல் நடை எம்மட்டு? ஆனால் பாஸ்கரனிடம் விஷயத்தைத் தெரிவித்தபோது, அவனுக்கு மனத்தில் உள்ளூற அவனையும் அறியாமல் சந்தோஷம் ஏற்பட்டபோதிலுங்கூட, அரை மனத்துடன் அதற்கு இசைந்தான்.

பாஸ்கரனைக் காந்திமதி தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றாள். அவனைப் பார்த்து வீட்டில் யாவரும் சந்தோஷம் அடைந்தார்கள். காந்திமதியின் தாத்தாதாம் அதிகச் சந்தோஷமடைந்தார். காந்திமதியின் கன்னிப் பருவம் முடியும் காலம் நெருங்கிவிட்டதென்று நினைத்தார் போலும்!

"தம்பி, உனக்கு எழுதப் படிக்கத் தெரியாதென்ற விஷயம் எனக்குச் சமீபத்தில்தான் தெரியவந்தது. நீ அந்த வித்தைகளை இன்னுங் கற்றுக்கொள்ளவில்லையா?" என்று அவர் கேட்டார்.

பாஸ்கரன் விஷயத்தைப் புரிந்துகொண்டு, புன்முறுவல் செய்தான்.

"அப்படிச் சொல்லாதீர்கள், தாத்தா. கோபித்துக் கொள்ளப் போகிறார். அவர்தாம் இப்பொழுது தொண்டு நிலயப் பள்ளியின் தலைமையாசிரியராக இருக்கிறார்" என்று காந்திமதி சிரித்துக்கொண்டே சொன்னாள்.

"எனக்கென்னவோ நம்பிக்கை இல்லை அம்மா. கடிதங்களை வாசித்துப் பதில் எழுதத் தெரியாத பிள்ளை எப்படித் தலைமை உபாத்தியாயராக இருக்கப் போகிறதோ, தெரியவில்லை!"

பாஸ்கரன் பதில் ஒன்றும் பேசவில்லை.

"உன்னையன்றி வேறொருவரையும் கல்யாணம் பண்ண மாட்டேன் என்று தொண்டு செய்யப் புறப்பட்டு விட்டாள், தம்பி, உனக்குத் தெரியுமா?" என்று தாத்தா கேட்டார்.

பாஸ்கரன் ஒன்றும் பேசாமல் தெருப்பக்கம் தன் பார்வையைத் திருப்பினன். அச்சமயம் சமையலறையில் இருந்த காந்திமதி தன்னையே உற்று நோக்கிக்கொண் டிருப்பதை அவன் பார்த்தான்.

அன்றிலிருந்து ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையையும் காந்திமதியின் வீட்டிலேயே பாஸ்கரன் கழித்தான். அத்துடன் விசேஷப் பண்டிகை தினங்களிலும் காந்திமதி தன் வீட்டிற்கு அவனை அழைத்துச் செல்வாள். தீக்ஷண்யமான அறிவுள்ள காந்திமதி வெகு சீக்கிரத்தில் பாஸ்கரனுக்குப் பிரியமான கறி வகைகள் எவை, பலகாரங்கள் எவை என்று தெரிந்துகொண்டு அவைகளைத் தன் கையினலேயே சமைத்து அவனுக்குப் பரிமாறுவாள். காந்திமதியுடன் கழித்த காலமெல்லாம் பாஸ்கரனுக்கு இன்பமாகவே இருந்தது.

பள்ளிக்கூட மாணவர்கள் பள்ளி ஆரம்பிக்கும் நேரத்தை எதிர்பார்ப்பதைவிட, அது முடியும் நேரத்தையே அதிகமாக எதிர்பார்ப்பார்கள். அதுபோல் பாஸ்கரனும் காந்திமதியும் இராப் பள்ளிக்கூடம் முடியும் நேரத்தையே அதிகமாக எதிர் நோக்கலானர்கள். குளிர்ந்த காற்று வீசும் இரவு நேரத்தில், தனியாகப் பேசிக்கொண்டு, பெங்களூரின் நீண்ட, அகன்ற சாலைகளின் வழியாகப் போவதை இருவரும் விரும்பினர். காந்திமதியை வழி யனுப்பும் வேலையை யாரிடமாவது விட்டு விட வேண்டுமென்று ஒவ்வொரு நாளும் பாஸ்கரன் தீர்மானிப்பான். ஆனல் அத்தீர்மானத்தை நிறைவேற்றும் தைரியம் மட்டும் அவனுக்கு வரவில்லை. அதை நிறைவேற்றும் தினத்தை நாள்தோறும் ஒத்திப்போட்டுக் கொண்டே வந்தான். துறவறத்தை நாடி வந்த பாஸ்கரனைக் காந்திமதியின் காந்த சக்தி இல்லறத்தை நோக்கி இழுத்தது. அவளுடைய மையலினின்றும்

தன் மனத்தை அப்பாற்படுத்துவதற்காக ஒவ்வொரு நாளும், இரவில் அவளுடன் செல்லுகையில், சிறந்த தேச பக்தர்கள், தொண்டர்கள், அவர்கள் செய்த தொண்டின் திறம், தங்களுடைய தாய் நாட்டின் அடிமைத் தளையைக் களைவதற்காக அவர்கள் செய்த தியாகம், இவைகளைப் பற்றியே பேசிக்கொண்டு செல்வான். காந்திமதியும் அவன் சொல்வதைக் கவனமாகக் கேட்டுக்கொண்டே நடப்பாள். ஆயினும் அவர்களுடைய உண்மையான கவனமும் ஆர்வமும் அதில் இல்லையென்பது இருவருக்கும் தெரிந்தது. கழைக் கூத்தாடி மிகவும் கவனத்துடன்தான் கொம்பின்மீது ஆடுவதாகத் தோன்றுகிறது. ஆனல் அவனுடைய அந்தரங்கமான நோக்கம் எல்லாம் எதில் இருக்கிறது?

பாஸ்கரன் தன் மனத்தை ஆராய்ந்து பார்க்கலானுன். அவன் விரும்பியது என்ன? அதைப் பற்றி நினைத்த பொழுது, அவனுக்கு மயிர்க்கூச் செறிந்தது. அவனுக்கு விரக்தி ஏற்பட்டு, அவன் வீடுவாசல் மனைவியைத் துறந்து வந்தபொழுது, தனக்கு இப்பேர்ப்பட்ட நிலைமை ஏற்படும் என்று சிறிதேனும் நினைக்கவில்லை. காந்திமதியைத் தனக்கு உரிமையாக்கிக் கொள்ள வேண்டுமென்று அவனுடைய உள்ளம் மிகவும் விழைந்தது. அவளை ஸ்பர்சிக்க வேண்டுமென்று அவனுடைய உள்ளம் மிகவும் விழைந்தது. அவளை ஸ்பர்சிக்க வேண்டுமென்று அவனுடைய மனம் ஒவ்வொரு கணமும் துடிக்கும். ஆனல் அவ்வாசை வெகு நாள் வரையில் நிறைவேருமலே இருந்தது. இறுதியில் ஒரு நாள் காந்திமதியின் கை பாஸ்கரனுடைய கரத்தை லேசாகத் தொட்டு விலகியது.

"ஏன் எடுத்துக்கொண்டாய்?" என்ருன் பாஸ்கரன்.

"என்ன?"

"ஒன்றும் இல்லை" என்ருன் பாஸ்கரன்.

சிறிது நேரத்தில் அவளுடைய கை மீண்டும் அவனுடைய கையுடன் சேர்ந்தது. ஆனல் அப்புறம் விலகவில்லை.

அன்று வீட்டை நெருங்கியதும், காந்திமதி பாஸ்கரனை நோக்கி, "என்னால் உங்களுக்கு அதிகச் சிரமம். தினந்தோறும் இவ்வளவு தூரம் நடக்கவேண்டி யிருக்கிறது. உங்களுக்கு மிக்க வந்தனம். சென்று வருகிறேன்" என்று கைகூப்பி அவனை வணங்கினாள்.

பாஸ்கரனும் திரும்ப அவளை வணங்க ஆரம்பித்தான்.

"ஐயோ! நீங்கள் என்னைக் கும்பிடக் கூடாது" என்று அவனுடைய கைகளைப் பிடித்தாள்.

அன்று வழி நெடுகப் பாஸ்கரன் அவ்வனுபவத்தினால் ஏற்பட்ட இன்பத்திலேயே ஆழ்ந்து சென்றான். அன்றிரவு முழுவதும் கனவிலும் நினைவிலும் அவன் அவ்வின்பத்தையே அனுபவித்துக்கொண் டிருந்தான்.

## அத்தியாயம் 20

# மாரியப்ப செட்டியார் மறைவு

மாரியப்ப செட்டியார் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கை யாகக் கிடந்தார். ராஜேசுவரி வீட்டிற்கு வந்த நாள் முதல், அதே கவலையில் உட்கார்ந்தவர்தாம். அன்ன ஆகாரம் சரியாக உட்கொள்ளவில்லை. அதனல் நாளுக்கு நாள் அவருடைய உடல் மெலிந்தது. ஆகாரம் உட்கொள்ளாததனுலும், உடல் மெலிவினுலும் பல விதமான கோளாறுகள் ஏற்பட்டு, இப்பொழுது அன்னம் தண்ணீர் செல்லாமல் படுத்த படுக்கை யாகக் கிடந்தார்.

பாஸ்கரனுக்குத் தம் பெண்ணைக் கல்யாணம் செய்துவைப் பதற்கு அவர் பட்ட பாடு கொஞ்சநஞ்சமல்ல. அத்தனை கஷ்டங்களும் வீணுகிக் கடைசியில் தம் பெண் வாழாவெட்டி யாக வீட்டில் வந்து உட்கார நேர்ந்துவிட்டதே என்று நினைக்குந் தோறும், அவருடைய துக்கம் அதிகரித்தது.

ராஜேசுவரியைப் பார்க்கும்போது சிற்சில சமயம் அவருக்குக் கோபம் வருவதும் உண்டு. அச்சமயங்களில் எல்லாம் ஒரு காரணமுமின்றி அவள்மீது சீறி விழுவார். “அதிருஷ்டம் கெட்ட கழுதை! அதிருஷ்டம் கெட்ட கழுதை! புருஷனுக்கு அடங்கி ஒடுங்கி இருக்காமல் ஏன் இப்படிக் கழுத்தை அறுப்பதற்கு இங்கே வந்துவிட்டாய்?” என்பார். ராஜேசுவரி பதில் சொல்லாமல் அழ ஆரம்பிப்பாள். அத்தகைய சந்தர்ப்பங்களில் அவளுக்கு ஆறுதல் அளிப்பவள் அவளுடைய தாய்தான். “என் குழந்தையையும் அழவைத்து, நீங்களும் வீணில் மனத்தைப் புண்படுத்திக்கொள்கிறீர்கள்? எல்லாம் அதனதன் வினைப்படி நடக்கிறது! புருஷன் புத்திகெட்டுப்

போனால், அதற்காக அவளா பழி?'' என்று சுப்பம்மாள் சொல்வாள்.

சுப்பம்மாளுடைய கவலை ஒன்றா, இரண்டா? புருஷன் நோயாய்க் கிடந்தார். மூத்தபெண் வாழாமல் வீட்டில் வந்து உட்கார்ந்திருந்தாள். கல்யாணப் பருவத்தை மீறிய இளைய பெண் இன்னும் கல்யாணமாகாமல் இருந்தாள். ராஜேசுவரி வீட்டிற்கு வந்த புதிதில் மாரியப்ப செட்டியாரின் உடம்பு இவ்வளவு மோசமாக இல்லை. அப்பொழுதுதான் நோய் ஆரம்பம். இந்தச் சமயத்தில் சுப்பம்மாளும் அவரைத் தொந்தரவு செய்ய லானாள். ஜயலக்ஷ்மிக்கு வரன் பார்த்து வரும்படி அடிக்கடி துன்புறுத்தினாள். அவளுடைய தொல்லை பொறுக்க மாட்டாமல், இரண்டோர் இடங்களுக்குச் சென்று மாரியப்ப செட்டியார் ஜாதகம் கேட்டார். மூத்தபெண் வாழாமலிருப்பதால், அவர்கள் ஜாதகம் கொடுக்க மறுத்துவிட்டனர். அத்துடன் அவர் அம்முயற்சியை அறவே விட்டுவிட்டார்.

ராஜேசுவரியின் இல்லற வாழ்க்கையைப் பற்றி அவர் எத்தனையோ மனக்கோட்டைகள் கட்டியிருந்தார். மிகக் கௌரவமான பெரிய குடும்பத்தில் நல்ல கல்விகேள்வியுள்ள ஒரு பையனுக்குத் தம் மகளைக் கல்யாணம் செய்துவிட்டதாகவும், மருமகன் தாசில்தாராகவோ, டிப்டி கலெக்டராகவோ ஆகி விடுவான் என்றும் தமக்கு அவளைப்பற்றி இனி ஒரு கவலையும் இல்லை என்றும் எண்ணியிருந்தார். ஆனால் எதிர்பாராத விதமாய் இவ்வளவு சீக்கிரம் அவருடைய மனக்கோட்டைகள் எல்லாம் மண்ணோடு மண்ணாகவே, அவருடைய மனநிலை முற்றும் மாறி விட்டது. மனிதன் தன் முயற்சியினால் சாதிக்க முடியாத காரியம் எதுவும் இல்லை என்ற மனப் பார்வையை இதுவரையில் கொண்டிருந்தவர் அவர். மாரியப்ப செட்டியார் ஒரு காரியத்தை எடுத்தால், அதை முடித்தே தீருவார் என்ற பெயரும் அவருக்கு ஜனங்களிடையே உண்டாகியிருந்தது. ஆனால் இப்பொழுதோ ஒரு சிறிய காரியத்தைக்கூட விடாமுயற்சியுடன் செய்யக்கூடிய தைரியம் அவருக்கு ஏற்படவில்லை. மனிதனுடைய முயற்சி

களுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒரு சக்தி, மனிதனுக்கு விளங்காத ஒரு முறையில், தான் நினைத்தவாறோ, அல்லது முன் வினைப்படியோ காரியங்களை இயங்க வைக்கிறது; மனிதன் எவ்வளவு முயன்றாலும், அச்சக்தி நினைத்தவாறல்லாமல், இம்மியளவாவது வேறு விதத்தில் எந்தக் காரியத்தையும் நடத்தி வைக்க முடியாது என்ற தீவிரமான நம்பிக்கை அவருக்கு ஏற்பட ஆரம்பித்தது. முன்பு அவருக்கு இருந்த மனோதைரியத்தையும், இப்பொழுது அவருக்கு உண்டாகியிருந்த கோழைத்தனத்தையும் நினைக்கச் சுப்பம்மாளுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவரை உற்சாகப்படுத்துவதற்குப் பல விதங்களிலும் முயன்றாள். ஆனால் பயனில்லை. மேன்மேலும் அவருடைய உள்ளமும் உடம்பும் மெலிவடைந்தன.

ஜயலக்ஷ்மி தனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லையே என்று ஏக்கமடைந்திருந்தாள். எல்லோருடைய துன்பத்திற்கும் தானே மூலகாரணமாக இருப்பதை எண்ணி எண்ணி ராஜேசுவரி வருந்தினாள்.

ஒரு நாள் இரவு சுமார் ஒரு மணி இருக்கலாம். தன் பக்கத்தில் படுத்திருந்த ராஜேசுவரியை மாரியப்ப சேட்டியார் எழுப்பி, "அதிகத் தாகமாயிருக்கிறது, கொஞ்சம் தண்ணீர் கொடம்மா" என்றார்.

அடுப்பில் தயாராக இருந்த வெந்நீரில் கொஞ்சம் கொண்டு வந்து அவள் கொடுத்தாள். அதைக் குடித்துவிட்டு, "உட்கார் ஒரு சேதி சொல்லுகிறேன்" என்றார் மாரியப்ப செட்டியார்.

வியாதியஸ்தரிடம் தனியாய் உட்கார்ந்திருக்க பயமாக இருந்ததோ என்னவோ, "எனக்குத் தூக்கம் வருகிறது" என்றாள் ராஜேசுவரி.

களையற்ற ஒரு மெல்லிய சிரிப்புடன், "உட்காரம்மா, சீக்கிரம் சொல்லிவிடுகிறேன்" என்றார் தந்தை.

ராஜேசுவரி உட்கார்ந்தாள்.

"நான் உங்களை விட்டுப் பிரியும் காலம் நெருங்கிவிட்டதம்மா."

ராஜேசுவரி அழுகை பொங்க, "ஐயோ! நான் என்ன செய்வேன்? இதைச் சொல்வதற்காகவா அப்பா உட்காரச் சொன்னீர்கள்?" என்ருள்.

"இல்லை. இன்னொரு சேதி சொல்கிறேன்" என்று ஆரம்பித்தவர் மேலே பேசுவதற்கு முடியாமல், மாலை மாலையாகக் கண்ணீர் விட்டு அழத் தொடங்கினர். சிறிது நேரத்திற்குப் பிறகு, "உன்னை விட்டுப் பிரிவதுதான் எனக்கு மிகுந்த கஷ்டமாக இருக்கிறதம்மா. உன்னை இந்த நிலையில் விட்டு எப்படி நான் நிம்மதியாய்ச் செல்வேன்? ஜயலக்ஷ்மிக்குக் கல்யாணமாகவில்லையே என்ற கவலைகூட எனக்கு இல்லை. பெண்ணென்று இருந்தால், புருஷன் ஒருவன் வராமலா போகிருன்? அவளுக்குக் கல்யாணமாகிவிடும். ஆனல் உன்னைப் பற்றிய கவலைதான் எனக்குப் பெரும் கவலையாக இருக்கிறது" என்ருர்.

ராஜேசுவரி மேன்மேலும் அழுதாள்.

"ஏனம்மா அழுகிருய்? நீ அவசியம் உன் புருஷன் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்துவிடுவாய். அதைச் சொல்வதற்குத்தான் உன்னை இப்பொழுது எழுப்பினேன். பிரபல ஜோஸ்யர் ஒருவரிடம் உன் ஜாதகத்தைக் காட்டிக் கேட்டேன். நான் இறந்த ஒரு வருஷத்திற்குள் நீ உன் புருஷன் வீட்டிற்குப் போய்விடுவாயாம்; உனக்குச் சுகம் உண்டாகுமாம் என்று சொன்னர். அவருடைய ஜோஸ்யம் அவசியம் பலிக்குமென்று எனக்கு இப்பொழுது நிச்சயமாகத் தோன்றுகிறது. அந்த விபூதிச் சம்புடத்தை எடம்மா. உனக்கு விபூதி கொடுக்கிறேன். மீனுக்ஷி சுந்தரேசுவரரை நினைத்துப் பூசிக்கொள்" என்ருர்.

அவர் கொடுத்த விபூதியை ராஜேசுவரி பூசிக்கொண்டாள்.

"அம்மாளையும் தங்கையையும் எழுப்பம்மா" என்ருர். அவர்கள் எழுந்திருந்து வந்தார்கள். அவர்களைப் பார்த்ததும்

மீண்டும் ஒரு முறை மாரியப்ப செட்டியார் விம்மி விம்மி அழுதார். பின்பு அழுகையை நிறுத்திக்கொண்டு, அவர், அவர்களுக்கும் விபூதி கொடுத்து, ராஜேசுவரியிடம் சொன்ன விஷயத்தைச் சொன்னர்.

"உங்கள் பேச்சுத் தேவ வாக்காகப் பலிக்க வேண்டும். ஜயலக்ஷ்மிக்கு என்ன சொல்கிறீர்கள்?" என்றுள் சுப்பம்மாள்.

"நீயே அவளுக்கு ஒரு மாப்பிள்ளை பார்த்துக் கல்யாணம் பண்ணிவை. பெரிய இடம் வேண்டும், பணக்கார வீடு வேண்டும் என்று பார்க்காதே. பெரிய இடத்தில் கொடுத்த பெண் எப்படி இருக்கிறுள் என்பதையும் பார்த்துக்கொண்டோம் அல்லவா? பத்து, இருபது சம்பாத்தியம் பண்ணுகிறவனுய், யோக்கியனுக இருந்தால் போதும். அப்பேர்ப்பட்ட பையனுகப் பார்த்துக் கொடுத்துவிடு."

"நானே ஒரு மாப்பிள்ளை பார்த்து வருகிறேன். உங்கள் கண்ணுள்ள போதே கல்யாணத்தை முடித்துவிட்டால் கவலையற்றிருக்குமே?"

"என் கை கூடிவராத கை. என் கண்ணும் கொள்ளிக் கண். நீயே எல்லாம் செய். எல்லோரும் நன்றுக இருப்பார்கள்."

சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் பின்னும் அவர் விம்மி விம்மி அழுதார். "பெண் பெற்ற உள்ளம் புண் பெற்ற உள்ளம் ஆகிவிட்டதே! கடைசி நேரத்தில் சிறிதுகூடச் சாந்தி ஏற்படவில்லையே! பெண்ணையும் பெண் பெற்றோரையும் மரியாதை செய்யும் வரையில் இந்நாட்டிற்கு விமோசனம் ஏது?" என்று பிரலாபித்து, இவ்வளவு நேரம் பேசிக்கொண்டிருந்த களைப்பினுல் கண்ணயர்ந்தார்.

மறுநாள் மத்தியான்னம் சுமார் ஒரு மணிக்கு அவருடைய ஆவி உடலைவிட்டு நீங்கியது.

மாப்பிள்ளை வீட்டுக்கும், பாஸ்கரனுக்கும், பிற உறவினர்களுக்கும் தந்திகள் சென்றன. பாஸ்கரன் வருவானென்று

அவர்கள் எதிர்பார்க்கவே இல்லை. ஆயினும் ஒருவேளை இரக்கம் ஏற்பட்டு, வந்தாலும் வருவான் என்ற சிறிது நம்பிக்கையினால் பிணத்தை எடுக்காமல் ஒரு நாள் காலம் கடத்தினார்கள். அவன் வரவில்லை.

பாஸ்கரன் வராதது சுப்பம்மாள் எதிர்பார்த்ததுதான். ஆனால் மாப்பிள்ளை வீட்டிலிருந்து ஒருவரேனும் துக்கம் விசாரிக்க வராததுதான் சுப்பம்மாளுக்கு வருத்தத்தை அளித்தது. "இப்படி இழவுக்குக்கூட வராமல் தள்ளிவிட்டார்களே. இந்தப் பெண்ணுக்கு இனி எது விமோசனம்?" என்று அவள் எங்கினாள். கணவன் இறந்த துக்கத்துடன் இதுவும் சேர்ந்து கொள்ளவே, அவள் துயர் ஆற்றாது துடித்தாள்.

## அத்தியாயம் 21

# விடை பெறுதல்

பாஸ்கரன் பெங்களூரில் தொண்டு நிலயத்திற்கு வந்ததற்கு அப்புறம் தன் உறவினர்கள் ஒருவருக்கேனும் கடிதம் எழுதவில்லை. ஆனல் அவனுடைய நண்பர்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதிக்கொண்டிருந்தான். அவர்களிடமிருந்து அவனுக்கு அப்போதைக்கப்போது கடிதங்கள் வந்துகொண்டும் இருந்தன. அவைகளின் மூலமே அவன் தன்னுடைய சுற்றத்தார்களைப்பற்றி அறிந்துகொண்டான். சந்தநாதஞ் செட்டியார் அவனுக்கு இரண்டு கடிதங்கள் எழுதினர். அவன் அவசரப்பட்டு தீர்க்கமாக ஆலோசியாமல் காரியம் செய்துவிட்டானென்றும், சீக்கிரம் ஊர் திரும்பவேண்டியதே அவனுடைய கடமை என்றும் அதில் குறிப்பிட்டிருந்தார். அந்தக் கடிதங்களுக்கு பாஸ்கரன் பதிலளிக்கக்கூட இல்லை. அவனுடைய ஆப்த நண்பர்களில் இரண்டொருவரும் அவன் கட்டாயம் ஊருக்குத் திரும்பி வர வேண்டுமென்று வற்புறுத்தியிருந்தார்கள். அவர்களுக்கு எழுதிய பதிலில் அவன் தனக்குக் கல்யாணம் ஆனதையே மறந்துவிட்டதாகக் கண்டிருந்தான்.

இத்தகைய சந்தர்ப்பத்தில்தான் அவனுடைய மாமனர் இறந்துவிட்டதாக அவனுக்குத் தந்தி கிடைத்தது. அதற்காக ஊருக்குப் போக வேண்டுமென்று அவன் சிறிதளவும் நினைக்கவில்லை. அதைப்பற்றி அவனுடைய உள்ளத்தில் எவ்விதமான உணர்ச்சியும் ஏற்படவில்லை. நித்தியானந்தருக்கு விஷயம் தெரிந்தபோது, அவசியம் அவன் ஊருக்குப் போய்த் திரும்பிவர வேண்டுமென்று வற்புறுத்தினர். ஆனல் பாஸ்கரனே பூரண விரக்தி ஏற்பட்டவன்போல், வேதாந்தம் பேசத்தொடங்கினன். கீதையில் அவன் படித்த விஷயங்களை ஒப்பித்தான். ஒருவன்

சாகிறான் என்று நினைப்பது தவறென்றும், ஆத்மா அழிவற்ற தென்றும், பழைய சட்டையைக் களைந்துவிட்டுப் புதிய சட்டை அணிவதுபோல் ஆத்மா உபயோகமற்ற பழைய உடலை விட்டுப் புதிய உடலை அடையும் பொழுது வருத்தப்படுவதற்கு ஒன்றும் இல்லை என்றும் கூறினான். மேலும் உயிருள்ள ஜீவன்கள் எத்தனையோ பேர் அங்கே கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கும் போது, அவர்களுக்குச் சேவை செய்வதை விட்டுவிட்டு, செத்த பிணத்திற்குரிய கர்மங்களைச் செய்வதற்காக ஒருவன் செல்வது சரியல்ல என்றும் கூறினான். அவன் சேவையில் கொண்டுள்ள ஆர்வத்தைக் கண்டு சிலர் ஆச்சரியமுற்றனர்.

அவனுடைய மனத்தைச் சோதிப்பதே போல் சில வாரங் களுக்கு அப்புறம் இன்னொரு தந்தி வந்தது. அவனுடைய தாத்தா சந்தநாதஞ் செட்டியார் மிக ஆபத்தான நிலைமையில் இருப்பதாகவும், அவன் உடனே புறப்பட்டு வர வேண்டு மென்றும் அதில் கண்டிருந்தது. இந்த விஷயம் அவனைத் தூக்கிவாரிப் போட்டது. அவனை ஊருக்கு வருவிப்பதற்கு இது ஒரு சூழ்ச்சியாக இருக்குமோ என்று அவன் முதலில் நினைத்தான். ஆனால் சந்தநாதஞ் செட்டியார் இத்தகைய சூழ்ச்சி களில் இறங்குபவரல்ல என்பது அவனுக்கு ஞாபகம் வந்தது.

"பாஸ்கரன், நீங்கள் இப்பொழுது அவசியம் ஊருக்குப் போகத்தான் வேண்டும். உங்கள் தாத்தா உங்களைப் பார்க்க வேண்டுமென்று மிகுந்த ஆவலுடன் இருப்பார்" என்று நித்தியானந்தர் கூறினார்.

"நான் அவசியம் போகத்தான் வேண்டுமென்கிறீர்களா?" என்று பாஸ்கரன் கேட்டான்.

"கடைசிக் காலத்தில் பெரியவர்களுடைய விருப்பத்தை நிறைவேற்றி, அவர்களுக்கு மனச்சாந்தி ஏற்படுத்துவது நமது கடமை" என்றார் நித்தியானந்தர்.

நித்தியானந்தருடைய வேண்டுகோளுக்காகப் பாஸ்கரன் போவதாக நடித்தான். ஆனால் உண்மையில் நித்தியானந்தர்

அவனைப் போக வேண்டாமென்று தடுத்திருந்தாலும், அவன் அவசியம் புறப்பட்டே இருப்பான். அவன் ஆடாவிட்டாலும் அவனுடைய சதை ஆடியது.

காலை சுமார் பத்து மணிக்குத் தந்தி வந்தது. அன்றிரவே அவன் புறப்படுவதாக இருந்தான். ஆகையினால், காந்திமதியிடமிருந்து விடைபெற்றுக்கொள்ள வேண்டுமென்று நினைத்து, அவளுடைய வீட்டிற்குப் புறப்பட்டான். அங்கே சென்று பார்த்தபொழுது, வீட்டிலுள்ளோர் யாவரும் மிகுந்த குதூகலத்துடன் இருப்பதைக் கண்டான். காந்திமதியின் தாத்தாதாம் முதலில் பேசினர்:

"இன்று எங்கள் காந்திமதிக்குப் பிறந்த தினம். நேற்றே உன்னை அழைக்கச் சொல்லியிருந்தோம். ஏதேதோ பேசிக் கொண்டிருந்தவள், இதைச் சொல்வதற்கு மறந்துவிட்டாளாம். இப்பொழுது ஆள் விடலாம் என்று இருந்தோம். அதற்குள் நீயே வந்துவிட்டாய்" என்று தன் சந்தோஷத்தை அவர் தெரிவித்தார்.

"நான் தற்செயலாய் இங்கு வந்து சேர்ந்ததால், அவளுக்குப் பரிசொன்றும் கொண்டுவரவில்லையே?" என்றான் பாஸ்கரன்.

"அதற்கென்ன? கல்யாணத்தன்று எல்லாவற்றையும் சேர்த்துக் கொடுத்துவிடேன்."

பாஸ்கரன் காந்திமதியைப் பார்த்து மெல்லச் சிரித்தான். அவளும் அவனை நோக்கிப் புன்முறுவல் செய்தாள்.

"அதிருக்கட்டும். நாங்களே உன் வீட்டாருக்கு விஷயத்தை எழுதவா, நீ எழுதுகிறாயா?"

"அதைப்பற்றிப் பின்னால் பார்த்துக்கொள்ளலாம், தாத்தா."

இந்தப் பதில் காந்திமதிக்குச் சிறிது ஏமாற்றத்தையும் கோபத்தையும் விளைவித்திருக்கலாமோ, என்னவோ? அந்தச் சமயம் தன் கையிலிருந்த சாமானை அவள் 'தட்' டென்று கீழே வைத்தாள்.

பாஸ்கரனைக் காந்திமதி கூர்ந்து கவனித்தபொழுது, அவன் அன்று ஒரு விஷயத்திலும் மனம் செல்லாமல், குதூகல மற்று இருப்பதைக் கண்டாள். அவன் அன்றைய விருந்தை ருசித்து உண்ணவும் இல்லை.

காரியங்களெல்லாம் ஒருவாறு முடிந்தபின், காந்திமதியைப் பாஸ்கரன் ஒரு தனி அறைக்கு அழைத்துச் சென்று, விஷயம் முழுவதையும் கூறித் தந்தியையும் காட்டினான். அவனுடைய தாத்தாவைப்பற்றிய விஷயம் முழுவதும் காந்திமதிக்கு ஏற்கனவே தெரியும். தாயிழந்த பாஸ்கரனுக்குத் தாத்தாதாம் தந்தையாகவும், பாட்டிதான் தாயாகவும் இருக்கிறார்கள் என்ற விஷயம் அவள் அறிந்ததே.

“அவர் இப்படி நோய்வாய்ப்பட்டிருக்கும்பொழுது, நான் எப்படிப் போகாமல் இருக்க முடியும்?” என்று பாஸ்கரன் கேட்டான்.

“இதென்ன வார்த்தை பேசுகிறீர்கள்? நீங்கள் எப்படிப் போகாமல் இருக்க முடியும்? அவசியம் போகத்தான் வேண்டும்” என்றாள் காந்திமதி. பாஸ்கரனுடைய சுக துக்கங்களில் இப்பொழுதே அவளும் பங்கெடுத்துக் கொள்ள ஆரம்பித்து விட்டாள். “நீங்கள் வந்தவுடனேயே என் விஷயத்தைச் சொல்லவில்லை?” - அவளுடைய கண்கள் கலங்கின.

சிறிது நேரத்திற்குப் பின் சற்றுத் திகிலுடன், “ஆனால் நீங்கள் திரும்பவும் பெங்களூருக்கு வருவீர்களா, மாட்டீர்களா?” என்று கேட்டாள்,

“இதென்ன அசட்டுக் கேள்வி கேட்கிறாய்? அவசியம் வருவேன்”

“எப்பொழுது திரும்பி வருவீர்கள்?”

“எவ்வளவு சீக்கிரம் வர முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் வந்துவிடுவேன்.” பின்பு மெல்லச் சிரித்துக்கொண்டு, “உன்னை விட்டு எப்படி அதிக காலம் இருக்க முடியும்?” என்று சொல்லிப் பாஸ்கரன் அவளுடைய கன்னத்தை லேசாய்க் கிள்ளினான்.

காந்திமதி சிறிது நாணத்துடன் சிரித்துக்கொண்டு, "என்னை விட்டுப் பிரிந்து உங்களால் அதிக காலம் எப்படி இருக்க முடியும்? அது முடியாதுதான்; ஆனால் போட்ட கடிதத்திற்குப் பதில் போடாமல் மாதக் கணக்கில் இருந்து விடுவீர்கள்!" என்றாள்.

"அப்பொழுதிருந்த நிலைமை வேறு; இப்பொழுதுள்ள நிலைமை வேறு."

பாஸ்கரன் முறிந்து போன தன்னுடைய மணச் சம்பந்தத்தைக் குறிப்பிட்டான். ஆனால் காந்திமதியோ, தங்களுக்குள் இப்பொழுது வளர்ந்திருக்கும் அன்பை அவன் சுட்டிக் காட்டுவதாக நினைத்துக் கொண்டாள்.

"நான் அங்கே போனதும், உனக்கு விரிவாக ஒரு கடிதம் எழுதுகிறேன்."

"எனக்கென்னவோ நம்பிக்கை இல்லை" என்று காந்திமதி சிரித்தாள்.

குழி விழுந்த அவளுடைய கன்னத்தை மீண்டும் ஒரு தடவை மெல்லக் கிள்ளினான்.

"ஐயோ! தாங்க முடியவில்லை!" என்றாள் காந்திமதி.

"இதைக்கூடத் தாங்க முடியவில்லையா? ஐயோ, நான் மறந்துவிட்டேன். பூப்பட்டாலும் கன்றிப் போகும் மெல்லிய ரோஜாவைப்போன்ற கன்னமல்லவா இது?" என்று சொல்லி அவன் சிரித்தான்.

'ஆடவர்களுக்கே சிறிது புத்தி மட்டுத்தான் போலும். இன்பம் தாங்க முடியவில்லையே என்று சொன்னால், வலி பொறுக்க முடியவில்லை என்று சொல்வதாக நினைத்துக்கொண்டு ஏதேதோ பிதற்றுகிறார்' என்று தனக்குள் எண்ணி மெல்லச் சிரித்துக்கொண்டே, "சீக்கிரம் திரும்பி வந்துவிட வேண்டும்" என்று பாஸ்கரனுக்குக் காந்திமதி விடைகொடுத்து அனுப்பினாள்.

## அத்தியாயம் 22

# கோழையா? தொண்டனா?

பாஸ்கரன் சாத்தூர் போய்ச் சேர்ந்து வீட்டிற்குச் சென்று பார்த்தபோது, சந்தநாதஞ் செட்டியார் படுக்கையில் படுத்திருந்தார். அவர் படுத்திருந்த ஹாலில் அங்கும் இங்குமாகச் சுற்றத்தார்கள் உட்கார்ந்திருந்தனர். பாஸ்கரன் படுக்கையின் அருகில் போய் நின்றான். அவருக்குச் சரியானபடி தம் உணர்வு இல்லை என்பது பாஸ்கரனுக்குத் தெரியவந்தது. அந்த ஸ்திதியில் அவரைப் பார்த்ததும், பொங்கி வந்த அழுகையை அவனால் அடக்க முடியவில்லை. பக்கத்திலிருந்த ஒருவர் சற்று உரத்த குரலில், "பாஸ்கரன் வந்திருக்கிறான்" என்றார். சப்தம் வந்த திக்கை நோக்கிச் சந்தநாதஞ் செட்டியார் மிரள மிரள விழித்தார். அக்கண்களில் ஒளி இல்லை; பார்வையும் இல்லை. குழறிய குரலில், "பாகரனா?" என்றார். 'பாஸ்கரன்' என்ற பெயரைக்கூடச் சரியாக உச்சரிக்க அவருக்குச் சக்தி இல்லை. "ஆமாம், பெங்களூரிலிருந்து வந்திருக்கிறான். தந்தியடிக்கச் சொன்னீர்களல்லவா?" என்றார் பக்கத்திலிருந்தவர். "வா, வா" என்று கையை லேசாய் நீட்டினார். நீட்டிய கையைப் பாஸ்கரன் பிடித்துக்கொண்டான். சிறிது நேரத்துக்குப் பின், "யாயேய்வயி, யாயேய்வயி" என்று இரண்டு முறை கூறினார். குழறிய அவருடைய வார்த்தைகளைக் கேட்டுப் பாஸ்கரனுக்கு இன்னும் பயிற்சி ஏற்படாததால், ஒன்றும் விளங்காமல் நின்றான். "ராஜேசுவரி வந்திருக்கிறாளா என்று தாத்தா கேட்கிறார். பதில் சொல்லு" என்றார் பக்கத்திலிருந்த ஒருவர். பாஸ்கரன் என்ன பதில் சொல்வான்? ஒன்றும் பேசாமல் திகைத்தான். அவருடைய முகம் அவன் பதிலை ஆவலுடன் எதிர் பார்த்தது போல் தோன்றியது. "அவள் வரவில்லை"

என்றான். மிகுந்த ஏமாற்றத்துடன், "வல்லையா?" என்றார் தாத்தா. சிறிது நேர மௌனத்தின் பின், பாஸ்கரன் பிடித்திருந்த கை தானே நழுவியது. பின்பு அவர் கையை வாய்க்கு இரண்டு முறை கொண்டுபோய்க் காட்டினார். "உன்னைச் சாப்பிட்டுவிட்டு வரச் சொல்கிறார் அப்பா. சாப்பிடப் போ" என்றார் பக்கத்திலிருந்தவர்.

சந்தநாதஞ் செட்டியார் படுத்த படுக்கையாய்க் கிடந்தார். மலம் மூத்திரம் எல்லாம் படுத்த படுக்கையிலேயே கழிந்தன. எந்த விதமான ஆகாரமும் உட்செல்லவில்லை.

அவருடைய கண் பார்வைக்கு வேலைக்காரர்கள், குமாஸ்தாக்களெல்லாம் ஒரு காலத்தில் அஞ்சினார்கள். ஆனால் இப்பொழுதோ அதே கண்கள் பிரகாசமற்றுப் பார்வை இழந்து மிரள மிரள விழித்தன. சாதாரணமாகப் பேசும்போதுகூட அவருடைய குரல் கணீரென்று ஒலிக்கும். ஒவ்வொரு வார்த்தையும் மணிகொண்டு அடித்ததுபோல் நாவினின்றும் வெளி வரும். அதே குரல் இப்பொழுது குழறியது. அவருக்கு நாசி இருந்தது; ஆனால் வாசனை இல்லை. செவி இருந்தது; ஆனால் ஓசை இல்லை. நாவிருந்தது; ஆனால் ருசி இல்லை. கால்கள் இருந்தன; ஆனால் சலனமில்லை. இப்படிப் பார்ப்பவர் பரிதவிக்கத்தக்க நிலையை ஒரு நாள் சந்தநாதஞ் செட்டியாரும் அடைவார் என்று யார்தாம் நினைத்திருக்க முடியும்?

அவருக்குக் கொஞ்ச காலமாக நீரிழிவு வியாதி உண்டு. அதனால் அதிகத் தொந்தரவில்லாமல் இதுவரையில் இருந்து வந்தது. பாஸ்கரன் வீட்டை விட்டுப்போன துக்கம் சிறிது சிறிதாக அவருடைய நெஞ்சை அரித்தது. அசையாத அவருடைய மனமும் அசைவு கொடுத்தது. அதனால் உடல் மெலியவே, தேகம் பலவீனமான சமயம் பார்த்து, வியாதி தன் வீரியத்தைக் காட்டிற்று. உடல் நாளுக்கு நாள் இளைத்து இடுப்பில் நீரிழிவுக் கட்டியும் ஏற்பட்டது. கட்டியை ஆபரேஷன் செய்தார்கள். புண் ஆறவில்லை. வேதனை அதி

கரிக்கவே அதனால் புலன்கள் தளர்ச்சி அடைந்து வேலை செய்யச் சக்தி இழந்தன.

செட்டியார் வியாதியாகக் கிடக்கிறார் என்று, அவரை வந்து பார்க்காத ஜனங்கள் சாத்தூரில் பாக்கி இல்லை. அவரால் நன்மை அடைந்தவர் எண்ணிலர். அவரிடம் வியாபாரம் செய்த வியாபாரிகளெல்லாம் அயலூர்களிலிருந்து வந்து பார்த்துச் சென்றனர். சிலர் அவர் அப்படிக் கிடப்பதனால் ஊருக்குப் போக மனமில்லாது, சாத்தூரிலேயே இருந்தனர். சுற்றத்தார்களெல்லாம் வந்து அநேக நாட்களாக வீட்டிலேயே தங்கியிருந்தனர். ஆகையினால் அவருடைய படுக்கையைச் சுற்றிலும் எப்பொழுதும் இருபது முப்பது பேர் சூழ்ந்திருந்தனர். மீனாக்ஷிப்பாட்டி அவருடைய கட்டிலருகில் உட்கார்ந்து அழுத கண்ணும் சிந்திய மூக்குமாக இருந்தாள். பாஸ்கரனும் ஒரு பக்கத்தில் உட்கார்ந்திருந்தான். பாஸ்கரனுடைய தந்தை ஒரு மூலையில் அமர்ந்திருந்தார். ஒருவருடைய முகத்திலாவது ஈ ஆடவில்லை.

பாஸ்கரனை யாவரும் ஒருவிதமாகவே பார்த்தார்கள். சந்தநாதஞ் செட்டியாருக்கு ஏற்பட்டிருக்கும் இந்த நிலைமைக்கு அவன்தான் காரணம் என்று யாவரும் எண்ணினர். செட்டியாருக்கு வயசு அறுபதுக்கு மேல் ஆகிவிட்டது. ஆயினும் பாஸ்கரனுடைய சம்பவம் நிகழ்ந்திருக்காவிடில், இன்னும் பல வருஷங்கள் சுகமாக இருப்பாரென்று யாவரும் நம்பினர். பாஸ்கரனும் குற்றவாளியைப் போலவே விழித்தான்.

பாஸ்கரன் வந்த தினத்திலிருந்து சந்தநாதஞ் செட்டியாருடைய பேச்சு வார்த்தை முற்றும் அடங்கி விட்டது. புலன்களெல்லாம் ஒடுங்கிவிட்டன. பேரனைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையினாலேயே இவ்வளவு நாளும் பெருமுயற்சியின் பேரில் உணர்விழக்காமல் இருந்திருக்கிறார் என்றும், அவ்வாசை பூர்த்தியானதும் பொறிகள் சக்தி இழந்துவிட்டன என்றும் பேசினார்கள். இன்னும் சிலர், ‘ராஜேசுவரி வரவில்லை என்ற அதிர்ச்சி தாங்காமல் உணர்விழந்துவிட்டார்’ என்று பேசினர்.

பிறர் வந்து சென்றது போல, டாக்டர்களும் வந்து சென்றனர். தங்களால் எவ்விதமான பயனும் இனி இல்லை என்று அவர்கள் நம்பினார்கள். தொண்டைக்கும் நெஞ்சுக்கும் சுவாசம் ஓடிக்கொண் டிருந்தது. கடைசிக் காரியத்தை எல்லோரும் எதிர்பார்த்திருந்தார்கள். அது சீக்கிரம் சம்பவிக் காதா என்பதுதான் இப்பொழுது எல்லோருடைய கவலையுமாக இருந்தது. அவருடைய உயிர் போகாமல் இப்படித் தத்தளித் துக்கொண் டிருந்ததற்குத் தீராத ஓர் ஏக்கந்தான் காரணம் என்று யாவரும் நினைத்தனர். இந்நிலையிலேயே அவர் மூன்று நான்கு நாட்களைக் கழித்தார். அவருடைய உயிர் அங்ஙனம் தவித்துக்கொண் டிருப்பதைப் பார்ப்பவர்களுக்கே மிகவும் கஷ்டமாக இருந்தது. கடைசியில் ஒரு நாள் அதிகாலையில் சஞ்சலப்பட்டுக்கொண் டிருந்த அவ்வாத்மாவுக்குச் சாந்தி கிடைத்தது. அன்று சிவராத்திரி! 'புண்ணியாத்மா! இந்தப் புண்ணிய தினம் வரவேண்டுமென்றே காத்துக்கொண் டிருந்திருக்கிறார்' என்று எல்லோரும் வாழ்த்தினார்கள்.

ஈமக் கிரியைகளெல்லாம் மிக்க மரியாதையுடனும் சிறப் புடனும் நிறைவேறின.

* * * *

இரவு நேரம். ஜோலார்ப்பேட்டையில் பெங்களூர் மெயிலுக்காகப் பாஸ்கரன் காத்துக்கொண் டிருந்தான். ஒரே அசதி. தூங்கினால் ரெயில் தவறிவிடும். ஒரு பெஞ்சியின்மீது உட்கார்ந்து, பின்னால் சாய்ந்தான். அவனுடைய உள்ளத்தில் அநேக விதமான எண்ணங்கள் குமுறின. அன்று அவன் கேட்ட சில விஷயங்களே அவ்வெண்ணங்கள் அவனுடைய மனத்தில் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தன.

"புண்ணியவான்! இப்பேர்ப்பட்ட புண்ணியாத்மா இனிப் பிறக்கவா போகிறார்? பாவிப் பயல், அவரை அகாலத்தில் கொன்றுவிட்டான்!" என்றார் ஒருவர்.

"பாவி! தன்னுடைய சொந்த நன்மையைக் கவனித்தானே ஒழியத் தன்னுடைய செய்கையினால் பிறர் எவ்விதம் பாதிக்கப் படுவார் என்பதைக் கொஞ்சமும் நினைத்தானில்லை. சுயநலக் காரன்!" என்றார் இன்னொருவர்.

இந்தப் பேச்சு வெளித் திண்ணையில் நடந்துகொண் டிருந்தது. பாஸ்கரன் உள்ளே இருந்தான்.

"சுயநலத்தையாவது சரிவரக் கவனித்தானா? அதுவும் இல்லையே."

"கோழைப்பயல் ஐயா, கோழைப்பயல்! வாழ்கையைக் கண்டு அஞ்சுபவன். இங்கிலீஷ் படிச்ச இந்தப் பயல்களே இப்படித்தான். வாழ்க்கை தெரியாதவன்கள். வாழ வகையற்ற கழிசிறைகள்!"

"தொண்டு செய்கிறானும், தொண்டு!"

இந்தச் சம்பாஷணை பாஸ்கரனுடைய உள்ளத்தில் 'சுரீர்' என்று தைத்தது. இப்பொழுது ஜோலார்ப்பேட்டையில் ரெயில்வேக் கம்பெனியின் பெஞ்சியின்மீது சாய்ந்துகொண்டு அவன் தன்னைத் தானே கேட்டான்: 'அவன் சுய நலமியா? கோழையா? சொத்து, சுகம், மனைவி எல்லாவற்றையும் வீரத்துடன் துறந்துவிட்டு, எவ்விதமான பிரதிப் பிரயோஜனமும் எதிர்பாராமல், ஏழைகளின் நலனுக்காக அல்லவா அவன் தொண்டாற்றிக்கொண் டிருந்தான்? இதுவா கோழைத்தனம்? இதுவா சுயநலம்? அதுவும் ராஜேசுவரியைப் போன்ற ஒரு மனைவியைத் துறக்க வேறு யாருக்கு மனம் வரும்?' இதற்கு அவனுடைய உள்ளம் பதிலளித்தது: 'வீடு, வாசல், மனைவி எல்லாவற்றையும் நீ ஏன் துறந்தாய்? வாழ்க்கையில் ஏற்படும் மேடுபள்ளங்களை, சுகதுக்கங்களைச் சகித்துக் கொள்வதற்குத் தைரியம் இல்லாததனால்தானே? இது கோழைத்தனம் அல்லவா? நீ ஏன் தொண்டாற்றுகிறாய்? உனக்கு மனச்சாந்தி ஏற்படுவதற்காக! இது சுயநலம் அல்லாமல் வேறென்ன?'

பாஸ்கரன் இந்தப் பதிலைக் கேட்டுத் திகைத்தான். அவனு டைய உள்ளம் பின்னும் பேச ஆரம்பித்தது:

'உன்னுடைய மனச்சாந்தியை நீ தேடினாயே ஒழிய, உன் தாத்தாவின் மனச்சாந்தியோ மாமனாரின் மனச்சாந்தியோ உனக்கு ஒரு பொருளாகத் தோன்றவில்லை. அவர்களுடைய சுகத்தை நீ துச்சமாக மதித்தாய். உன்னுடைய நலனுக்காக இரண்டு உயிர்கள் பலியாயின என்பது உனக்குத் தெரியாதா? ஆம், இரண்டு உயிர்களும், இரண்டு மாங்கல்யங்களும்! தொண்டு செய்கிறானாம், தொண்டு! சந்தநாதஞ் செட்டியார் செய்துகொண்டிருந்த சேவையில் நூற்றில் ஒரு பங்கு ஆகுமா உனது சேவை? அப்பேர்ப்பட்ட தொண்டரை நீ உலகிற்கு இல்லையாக்கினாய்! பார்த்தாயா உன் தொண்டின் லக்ஷணத்தை!'

பாஸ்கரன் திகிலடைந்தான்.

'மேலும், மாங்கல்யத்துடன் கூடிய வைதவ்ய வாழ்க்கையை உன் மனைவியின் மீது சுமத்திவிட்டு, நீ இன்னொரு பெண்ணுடன் சுகித்திருக்கப் போகிறாய். இது சுயநலம் அல்லவா?'

பாஸ்கரனுக்கு இப்பொழுது சிறிது தைரியம் பிறந்தது. 'குற்றவாளி தண்டனை அடைவது நியாயந்தானே? மேலும், சுயநலத்தினாலா நான் காந்திமதியைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போகிறேன்? அவளும் சேவை உணர்ச்சி உள்ளவளாக இருப்பதால், என்னுடைய தொண்டில் அவள் உதவி புரிவாள். அப்பொழுது என் தொண்டு நன்கு நடக்கும் என்பதற்காக அல்லவா அவளை மணக்கப் போகிறேன்?'

தன்னை ஏமாற்றிக்கொள்ள அவனுக்கு இவ்வெண்ணம் உதவியது. தன் உள்ளத்தைப் பாஸ்கரன் சிறிது சமாதானப் படுத்திக் கொண்டான். தான் உண்மையில் வீரனே என்றும், தியாகியே என்றும் நினைத்தான். "நான் கோழை அல்ல, சுயநலக்காரன் அல்ல" என்று பன்முறை தனக்குள் கூறிக்கொண்டான். அது அவனுக்குச் சிறிது சாந்தியளித்தது.

அந்தச் சமயம் பெங்களூர் மெயில் வரவே, அவன் அதில் ஏறிக்கொண்டான்.

## அத்தியாயம் 23

# மறுமண ஏற்பாடு

சந்தநாதஞ் செட்டியாரின் மரணம் பாஸ்கரனுக்கு அதிகத் துயரத்தை விளைவித்தது. மற்றொரு புறம் அவனுக்கு அது ஒரு வகையில் விடுதலையையும் அளித்தது. அவனுடைய வாழ்க்கையில் ஆதிக்கம் செலுத்தக்கூடிய மனிதர் சந்தநாதஞ் செட்டியார் ஒருவர்தாம். அவனுடைய தந்தையுடன் அவனுக்கு இது வரையில் அதிகத் தொடர்பு இருந்ததில்லை. ஆகையினால் காந்திமதியை அவன் கல்யாணம் செய்துகொள்வதில் அவன் யாருடைய சம்மதத்தையாவது கேட்கவேண்டும் என்று நினைத் திருப்பானாகில், அது சந்தநாதஞ் செட்டியாருடைய சம்மதத்தைத் தான். அவருடைய மறைவு இந்த விதத்தில் அவனுக்குச் சுதந்தரத்தை அளித்தது. இப்பொழுது, யோசித்துப் பார்த்த பொழுது, காந்திமதியை மணந்துகொள்ளாமல் அவன் காலம் கடத்திவந்தது அவனுடைய தாத்தாவின் சம்மதத்தைப் பெறுவதிலுள்ள கஷ்டத்தை உத்தேசித்துத்தானோ என்றுகூட நினைத்தான். ஆனால் இப்பொழுதோ தன்னுடைய செய்கைகளுக்குத் தான் ஒருவரையும் கேட்கவேண்டிய அவசியமில்லை என்று அவன் எண்ணினான்.

காந்திமதியின் வீட்டார், அவளுடைய கல்யாணத்தைச் சீக்கிரம் முடித்துவிட வேண்டும் என்று நினைத்தார்கள். காந்திமதி ஒரே பெண்தான். அவளுடைய பெற்றோர்களுக்கு வேறு பிள்ளை இல்லை. ஆகையினாலே மிகச் செல்வமாய் அவளை வளர்த்தார்கள். அவள் இஷ்டப்படியே படிக்கவைத்தார்கள். அவளுக்கு இஷ்டமான மாப்பிள்ளைக்கே அவளைக் கல்யாணம் செய்துகொடுக்க வேண்டும் என்பது அவர்களுடைய விருப்பம். அவள் தேர்ந்தெடுத்த வரன் எவ்வகையிலும் அவளுக்கு

ஏற்றவனாகவும், அவர்களுடைய மனத்துக்குப் பிடித்தவனாகவும் இருக்கவே, அவர்கள் மிக்க சந்தோஷம் அடைந்தனர். இவ்வகையில் காந்திமதிக்கு அவர்கள் கொடுத்திருந்த சுதந்தரம் மற்றவர்களுக்கெல்லாம் அதிக ஆச்சரியமாகவே இருந்தது.

காந்திமதியின் தாத்தா தம் பேத்தியின்மீது அத்தியந்தப் பிரியமுள்ளவர். தம் பேத்தியின் குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடிக்கொண்டிருந்துவிட்டுக் கண்மூட வேண்டும் என்பது அவருடைய ஆசை. ஆகையினால் வெகுசீக்கிரம் கல்யாணத்தை முடிக்கவேண்டும் என்று நினைத்தார். ஆனால் பாஸ்கரனுடைய தாத்தா சமீபத்தில்தான் இறந்திருப்பதால், அவன் அந்தத் துக்கத்தை மறக்க இரண்டு மூன்று மாதங்களாவது கழிய வேண்டும் என்று யாவரும் எண்ணினர்.

காந்திமதி எப்பொழுதும்போல் தொண்டு நிலயத்திற்கு வந்து தொண்டாற்றிக்கொண்டிருந்தாள். அவள் தனக்கு ஏற்படும் சந்தேகங்கள், கஷ்டங்கள் எல்லாவற்றையும் பாஸ்கரனிடம் சொல்லித் தீர்த்துக்கொள்வது வழக்கம். பாஸ்கரன் சில நாட்கள் இல்லாமல் போகவே, இயற்கையாகவே நிலயத்தலைவர் நித்தியானந்தரை அவள் அணுகினாள். அந்தப் பழக்கம் பாஸ்கரன் வந்தபிறகுங்கூட நீடித்தது. ஒருநாள் நித்தியானந்தருடன் அவள் ஏதோ பேசிக்கொண்டிருந்ததைப் பார்த்த பாஸ்கரன், "அவருக்கு எத்தனையோ வேலைகள்! அவரை ஏன் தொந்தரவு செய்கிறாய்? ஏதாவது உனக்குக் கஷ்டமிருந்தால் என்னிடத்தில் சொல்லேன்?" என்று கூறினான். இன்னொரு சமயம், "இனியும் நீ தொண்டு நிலயத்திற்கு ஏன் வரவேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை" என்றான். "ஆம், நானும் அதைத்தான் சொல்கிறேன். நீங்களும் இதை விட்டு வந்துவிடுங்களேன்?" என்றாள் காந்திமதி. "அதெப்படிச் சாத்தியமாகும்?" என்று பாஸ்கரன் பதிலளித்தான். மதி நுட்பமுள்ள காந்திமதி விஷயத்தை ஊகித்து அறிந்துகொண்டு, அன்றுடன் நித்தியானந்தரோடு பேசுவதை நிறுத்திக் கொண்டாள்.

காந்திமதியின் வீட்டிற்கு ஒரு நாள் பாஸ்கரன் சென்றிருந்தபொழுது, "இந்த வைகாசி மாதம் முகூர்த்தத்தை வைத்துவிடலாம் என்று நினைக்கிறோம். உன்னுடைய அபிப்பிராயம் என்ன?" என்று காந்திமதியின் தாத்தா வினவினார்.

"உங்களுக்குச் சம்மதமானது எனக்கும் சம்மதந்தான்" என்று பாஸ்கரன் பதில் அளித்தான்.

அதன்மேல் வைகாசி மாதத்தில் ஒரு முகூர்த்தநாள் தீர்மானிக்கப்பட்டது. கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் நடைபெற்று வந்தன.

"உன் சுற்றத்தார் யார் யாருக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும்?" என்று பாஸ்கரனைக் கேட்டார்கள்.

"ஒருவருக்கும் தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லை" என்று முதலில் அவன் கூறினான். பின்பு சற்று யோசித்து தன் தகப்பனருக்கும், இன்னொரு குடும்பத்திற்கும் தெரிவிக்க வேண்டும் என்றும், அவர்களுக்குத் தானே கடிதம் எழுதிவிடுவதாகவும் கூறினான். இன்னொரு குடும்பம் என்று அவன் குறிப்பிட்டது, அவனுடைய மாமனார் குடும்பத்தை.

கல்யாண ஏற்பாடுகள் செய்வதற்காக என்னும் காரணத்தைக் கொண்டு, பாஸ்கரன் தொண்டு நிலயத்திலிருந்து ஒரு மாத ரஜா எடுத்துக்கொண்டான். பாஸ்கரனுக்கும் காந்திமதிக்கும் இடையிலிருந்த உறவிலிருந்து, இந்தக் கல்யாணம் தொண்டு நிலயத் தொண்டரால் எதிர் பார்க்கப்பட்டதாக இருந்த போதிலும், உண்மையில் அது நடக்கப் போகிறது என்று அறிந்தபோது, அது அவர்களுக்குப் புதுமையாகவும், சற்றுக் குதூகலமாய்ப் பேசுவதற்குரிய விஷயமாகவும் இருந்தது. பாஸ்கரனுடைய சில மாதத் தொண்டிற்கே இத்தகைய பலன் கிடைத்தால், தங்களுடைய தொண்டிற்கெல்லாம் அதைவிடச் சிறந்த பலன் கிடைக்கும் என்று அவரவர்கள் வேடிக்கையாகப் பேசிக் கொண்டார்கள்!

தங்கள் ஒரே செல்வப் புதல்வியின் கல்யாணத்தை மிக்க விமரிசையாக நடத்த வேண்டும் என்பது காந்திமதி குடும்பத்தாரின் விருப்பம். காந்திமதி படித்தவளாகவும், விஷயம் அறிந்தவளாகவும் இருந்ததால், மேளம், சங்கீதக் கச்சேரி, அழைப்புத்தாள் அச்சிடுதல் முதலிய சில விஷயங்களை அவளிடமே விட்டுவிட்டார்கள். அவளிடம் விடுவதென்ருல், அது பாஸ்கரனிடம் விடுவதற்குச் சமானமாகும். தங்களுடைய கல்யாண ஏற்பாடுகளை வேறு யார் செய்வது என்று நினைத்து, அவர்கள் இருவரும் சேர்ந்தே எல்லாக் காரியங்களையும் கவனிக்க ஆரம்பித்தார்கள்.

அழைப்புத்தாள் புது முறையில் அச்சிட வேண்டும் என்பது அவர்களுடைய விருப்பம். பாஸ்கரன் ஒரு யோசனை கூறினுன். "வெற்றிலை பாக்கு வைத்துத்தானே கல்யாணத்திற்கு அழைப்பது வழக்கம்? இரண்டு மூன்று வெற்றிலைகள் மாதிரி அச்சிட்டு, அவைகளின் மீது திருமண அழைப்பை அச்சிடவேண்டும்" என்ருன்.

"பக்கத்தில் இரண்டு மூன்று பாக்கு இருக்கிறுற் போலவும் இருக்க வேண்டும்" என்று காந்திமதி கூறினுள்.

சிறிது நேரத்திற்குப் பின் காந்திமதி மிகுந்த குதூகலத்துடன், "புஷ்பமும் வைத்து அழைப்பது உண்டல்லவா? அடியில் ஒரு ரோஜாப் புஷ்பத்தில், 'தங்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்ப்போர்' என்று பெயர்கள் அச்சிடவேண்டும்' என்ருள்.

"அதுவும் நல்ல யோசனைதான்" என்ருன் பாஸ்கரன்.

இவ்விதம் ஏற்பாடுகள் தீவிரமாய் நடந்துகொண்டிருந்தன. காதலர்களின் காலமும் உல்லாசமாகக் கழிந்தது. பெங்களூரிலுள்ள ஏரிகளும் சிங்கார வனங்களும் அவர்களுக்குப் பொழுது போக்கு ஸ்தலங்களாய் அமைந்திருந்தன.

இங்ஙனம் இருக்கையில் பாஸ்கரன் தன் தந்தைக்கும், தன் மாமனுர் குடும்பத்திற்கும் தன் கல்யாணத்தைத் தெரிவித்துக்

கடிதங்கள் எழுதினன். மாமியாருக்கு எழுதிய கடிதத்தில் தான் மறுமணம் செய்துகொள்வதுபோல், ராஜேசுவரிக்கும் மறு கல்யாணம் செய்துகொள்ள உரிமை உண்டென்றும், அங்ஙனம் அவள் செய்துகொள்வதில் தனக்கு எவ்விதமான ஆக்ஷேபமும் இல்லை என்றும் எழுதியிருந்தான். அவ்விதம் எழுதியதில் தான் பெரிய தியாகம் செய்வதாகவும் அதை யாவரும் மெச்சுவார்கள் என்றும் எண்ணினன்.

கல்யாணதினம் நெருங்கிக்கொண்டிருந்தது.

# அத்தியாயம் 24

# மனமாற்றம்

முகூர்த்தத்திற்கு இன்னும் ஐந்தாறு தினங்கள் இருந்தன. அன்று காலையில் எழுந்திருந்தது முதல் ஒரு வேலையிலும் மனம் செல்லாமல் பாஸ்கரன் உத்ஸாகம் இழந்திருந்தான். முந்தின இரவு முழுவதும் பாஸ்கரனுக்குத் தூக்கமே இல்லை. அவனுடைய மனத்தில் ஒரு பெரிய போராட்டம் நடந்து கொண்டிருந்தது. காலையில் எழுந்திருப்பதற்குச் சற்று முன்பு தான் ஒரு முடிவுக்கு வந்திருந்தான். தன்னுடைய தீர்மானத்தைக் காந்திமதிக்குத் தெரியப்படுத்த வேண்டும் என்பது அவனுடைய விருப்பம். அதற்குரிய தைரியம் தனக்கு வருமா என்று சந்தேகித்தான். ஆனல் எப்படியாவது கட்டாயம் செல்லத்தான் வேண்டுமென்று தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

காந்திமதியுடன் தனியாக இருக்கும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்கவே, அதை நழுவ விடக்கூடாதென்று, விஷயத்தைச் சொல்ல நினைத்தான். ஆனல் தைரியம் வரவில்லை. நெஞ்சு படபடத்தது. அதற்குள் காந்திமதி அவனைக் கவனியாமல் போய்விட்டாள்.

அடுத்த தடவை அவளைச் சந்தித்தபோது, திடத்துடன் ஆரம்பித்தான்: "காந்திமதி, நான் உனக்குப் பெரிய அபராதம் இழைத்துவிட்டேன். தயவு செய்து என்னை நீ மன்னிப்பாயா?" என்று கேட்டான்.

காந்திமதி ஒன்றும் விளங்காமல் விழித்தாள். பாஸ்கரன் மேலும் கூறலானன்: "நான் உன்னிடம் அதிகச் சுதந்தரத்துடன் நடந்து வந்திருக்கிறேன். அப்படி நடந்திருக்கக்

கூடாது. அது தவறுதான். ஆனால் அந்தத் தவறு இப்பொழுதும் திருத்தக்கூடிய நிலைமையில்தான் இருக்கிறது.”

காந்திமதிக்கு இன்னும் ஒன்றும் விளங்கவில்லை.

“உன்னை நான் நிச்சயம் கல்யாணம் பண்ணிக் கொள்ள லாம் என்ற நம்பிக்கையுடன்தான் சற்றுச் சுதந்தரத்துடன் நடந்துகொண்டேன்.”

‘ஆனால் இப்பொழுது?’ என்று காந்திமதி நினைத்தாள். ஒன்றும் பதில் சொல்லவில்லை.

“காந்திமதி, நீ என்னை மன்னிப்பாயா? எனக்கு ஏற்கனவே கல்யாணமாகிவிட்டது! இதை உனக்கு நான் முன்பே சொல்லி யிருக்க வேண்டும். ஆனால் ஏனோ சொல்லவில்லை.”

காந்திமதி திடுக்கிட்டாள்!

மேலும் பாஸ்கரன்தான் பேசினான்: “என்னைப் பெங்க ளூருக்கு வருமாறு நீ எழுதிய கடிதம் ஒன்று என் கல்யாண தினத்தன்று கிடைத்தது. உன்னுடைய கடிதங்களுக்கு நான் ஏன் பதில் எழுதவில்லை என்பது இப்பொழுது விளங்குகிற தல்லவா? ஆனால் உன்னுடன் இந்த நாடகத்தை ஏன் நான் நடத்தினேன் என்பது உனக்கு விளங்காது” என்று சொல்லி, அவன் தன்னுடைய மனைவியை விட்டுப் பிரிய நேர்ந்த சம்பவத் தைச் சுருக்கமாகக் கூறினான். “அதன் பின்புதான் உன் னுடன் நான் அளவளாவ ஆரம்பித்தேன். அந்தச் சமயத்தில் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளலாமென்று நிச்சயமாக நம்பியிருந்தேன். என்னுடைய தாத்தாவின் மறைவும் அதற்குச் சாதகமாகவே ஏற்பட்டிருக்கிறதே என்றுகூட நினைத்தேன். அனல் அது தவறு என்பது எனக்கு ‘இப்பொழுதுதான் விளங்கு கிறது. என்றும் இல்லாத வகையில், இன்று என் மனம் என் மனைவியின்பால் இழுக்கப்படுவதை நான் உணர்கிறேன். இது எனக்கே புதுமையாக இருக்கிறது. குற்றவாளி தண்டனையை அனுபவிப்பது நியாயந்தானே என்று ஒரு சமயம் நினைத்தேன்.

ஆனல் இப்பொழுதோ, ஒரு பெண்ணினுடைய வாழ்க்கையைப் பாழ்படுத்திவிட்டதாக என் மனச்சாக்ஷி என்னைத் துன்புறுத்து கிறது. ஒரு பெண் அங்கே மனம் புகைந்து, புழுங்கி வாடும் போது, நான் இங்கே உன்னுடன் சுகித்திருப்பது பெரும்பாவ மாகும். என் மனநிலையை நீ உணர்வாய் என்று நம்புகிறேன். ஒரு கணமும் இனி என்னல் இங்கே இருக்க முடியாது. நான் இன்றே புறப்படவேண்டும். இனி நடக்கவிருக்கும் நமது சம்பந்தத்தினின்றும் என்னை விடுவித்து, எனக்குத் தயவுசெய்து விடை கொடுத்து அனுப்பவேண்டும்'' என்று பாஸ்கரன் முடித்தான்.

என்ன சொல்வதென்று தோன்ருமல் காந்திமதி அழத் தொடங்கினுள்.

“தயவு செய்து நீ என்னை மன்னிக்க வேண்டும். உன்னை விட்டுப் பிரிவது எனக்கு மிகுந்த சஞ்சலத்தை உண்டாக்கு கிறது. ஆயினும் கடமை அதை வற்புறுத்துவதால், வேறு வழி இல்லை.''

இருவரும் அந்நிலையிலேயே வெகுநேரம் வரைக்கும் மௌனமாக இருந்தனர்.

கடைசியில் தன் மனத்தை ஒருவாறு சமாதானப்படுத்திக் கொண்டு, “இதை என் தாயிடமும் தாத்தாவிடமும் நான் எப்படிச் சொல்வேன்?'' என்று காந்திமதி கூறினுள்.

“அந்தக் கவலை உனக்கு வேண்டாம். அதை நானே ஏற்றுக்கொள்கிறேன்'' என்று பாஸ்கரன் கூறிக் கடைசியாக, “உன் குணத்திற்கும் அழகுக்கும் ஏற்ற நல்ல கணவன் உனக்குக் கிடைக்க வேண்டும் என்பதே என் பிரார்த்தனை'' என்ருன்.

## அத்தியாயம் 25

# பிரிந்தவர் கூடுதல்

காந்திமதியின் குடும்பத்தாரிடம் விஷயத்தைச் சொல்லி, அவர்களைச் சமாதானப்படுத்தி, ஒருவாறு விடை பெற்றுக்கொண்டு, பாஸ்கரன் நேராக மதுரை வந்துசேர்ந்தான். மாமனர் வீட்டுக்குச் சென்றபோது, அவன் கண்ட காட்சி அவனைக் கதிகலங்கச் செய்தது. நகை மறந்த இதழ்களும், பொட்டிழந்த நெற்றியும், பூவிழந்த கூந்தலும், பொலிவிழந்த முகமும், பூரிப்பற்ற மேனியுமாகக் காட்சியளித்தாள் ராஜேசுவரி. அத்தனைக்கும் தானே காரணம் என்று பாஸ்கரன் தன்னை நொந்துகொண்டான்.

அவன் வரவு அந்தக் குடும்பம் முழுதுக்கும் ஆனந்தமளித்தது. ராஜேசுவரிக்கு விமோசனம் ஏற்படும் என்று அவர்கள் நினைக்கவே இல்லை. மாரியப்பச் செட்டியார் இருக்கும் வரைக்கும் எப்படியாவது மகளைக் கணவனிடம் சேர்த்துவிடுவார் என்ற நம்பிக்கை இருந்தது. அவர் இறப்பதற்குப் பின்பு, சந்தநாதஞ் செட்டியார் தம் பேரனுக்குப் புத்திமதி சொல்லுவார் என்ற எண்ணம் அவர்களுக்கு வாழ்க்கையில் சிறிது ஆசை ஊட்டிக்கொண் டிருந்தது. அவரும் இறக்கவே, இனி ராஜேசுவரிக்குக் கதி மோக்ஷமே இல்லை என்று அவர்கள் துக்க சாகரத்தில் ஆழ்ந்திருந்த சமயம், திடீரென்று பாஸ்கரன் வந்து சேரவே, அவர்கள் அளவுகடந்த ஆனந்தம் அடைந்தனர்.

"ராஜேசுவரியைக் கூட்டிக்கொண்டு செல்வதற்காக வந்திருக்கிறேன்" என்று பாஸ்கரன் கூறினான். அவனுடைய வார்த்தைகளைக் கேட்டவுடன் எல்லோருடைய வயிற்றிலும் பால் வார்த்தது போல இருந்தது.

பட்ட மரம் தளிர்க்க ஆரம்பித்தது. ஜயலக்ஷ்மி ராஜேசுவரியை மாடிக்கு அழைத்துச் சென்று அலங்கரிக்க ஆரம்பித்தாள்.

மாலை மூன்று மணி சுமாருக்குப் பாஸ்கரன் மாடிக்குச் சென்றான். அங்கு அவன் கண்டது என்ன? வாலிபன் ஒருவன் ராஜேசுவரியின் தோளின்மீது கைபோட்டுக்கொண்டு அவளுடைய காதில் ரகசியமாக என்னவோ சொல்லிக்கொண் டிருந்தான். ராஜேசுவரியை விட்டுப் பாஸ்கரன் பிரிந்ததற்குக் காரணமாக இருந்த அதே வாலிபன்தான்! அதைக் கண்டதும் பாஸ்கரனுக்கு உடம்பெல்லாம் படபடத்தது. ஆனாலும் இன்று அவன் ஓடவில்லை. உறுத்து நோக்கினான்.

"இந்த அபாக்கியவதியை உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதா அத்தான்?" என்று ஆண் வேடம் தரித்திருந்த ஜயலக்ஷ்மி கேட்டாள்.

"அப்படியானால், அன்றும்........" பாஸ்கரன் ஸ்தம்பித்து நின்றான்.

"அன்றும் இதேதான் நடந்தது, அத்தான். உங்களைத் தமாஷ் செய்யவேண்டுமென்று நினைத்தது இப்படி விபரீதமாய் முடிந்துவிட்டது. வெளியில் போயிருந்த நீங்கள் வீட்டிற்கு வந்ததும் அக்காளை வெகு ஆவலாய்த் தேடுவீர்கள்; கீழே அவளைக் காணாததும், மாடிக்கு வருவீர்கள்; அப்படி நீங்கள் மாடிக்கு வந்ததும், அக்காளைப் பிடித்து நான் முத்தமிட வேண்டும்; நீங்கள் மிகுந்த கோபத்துடன் என்மீது பாய்வீர்கள். அப்பொழுது, 'சில மாதங்களுக்கு முன்பு கல்யாணம் செய்து கொண்ட உங்களுக்குள் உரிமை, கூடப் பிறந்து வருஷக் கணக்காக உடன் வளர்ந்த எனக்கு இல்லையா, அத்தான்?' என்று நான் கேட்டு உங்களைக் கேலிபண்ண வேண்டுமென்று நினைத்திருந்தேன். ஆனால் அது இப்படி முடியுமென்று நான் நினைக்கவில்லை! இந்தப் பாவியை மன்னிப்பீர்களா, அத்தான்?" என்றாள் ஜெயலக்ஷ்மி.

பாஸ்கரன் பதில் ஒன்றும் பேச நா எழாமல், அப்படியே உட்கார்ந்துவிட்டான். தன்னுடைய அவசர புத்திதான் இத்தனை துன்பங்களுக்கும் காரணமா என்றும் எங்கினன். அவன் யாரைக் குற்றவாளி என்று உணர்ச்சி வேகத்தில் ஆத்திரப்பட்டு மதித்தானே, அவள் குற்றமற்று இருந்தாள். தன்னையும் அறியாமல் தவருன பாதையில் சென்றுகொண்டிருந்த தன்னைத் தடுத்தாட்கொண்ட ஈசனை வாயார வாழ்த்தினன்.

அன்று மாலைப் பிரார்த்தனைக்கு அவன் உட்கார்ந்த போது, அவனுடைய மனம் என்றும் இல்லாதபடி சாந்தியடைந்திருந்தது. "எனக்கு நல்வழி காட்டிய நாயகனே! வாழ்க்கை முழுவதும் நீயே எனக்கு வழிகாட்டியாக அமைய வேண்டும். எது சரி, எது தவறு, எது மெய், எது பொய் என்று அறியும் ஆற்றல் இல்லாதவன் அடியேன். எல்லாம் எனக்குத் தெரியும் என்று நான் ஒரு காலத்தில் அகங்காரம் கொண்டிருந்தேன். ஆனால் இன்றோ, எனக்கு ஒன்றும் தெரியாது என்பதை உணர்ந்திருக்கிறேன். வாழ்க்கைப் பாதை இருள் ஆழ்ந்திருக்கிறது. அதில் வழி தெரியாது விழிக்கிறேன். எங்கே நடப்பது, எப்படி நடப்பது என்பது ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. நீயே என்னை நடத்து. நீயே என் கடமையை உணர்த்து. அடியேன் உன் அடிகளில் சரணமடைகிறேன்" என்று பாஸ்கரன் பிரார்த்தனையை முடித்தான்.

மறுநாள் மாலை அவனுக்கு ஒரு தந்தி வந்தது. அதில் காந்திமதி தனக்குக் கல்யாணம் நிச்சயமாகிவிட்டதென்றும், வரன் நல்ல வரன்தானென்றும், தனக்குப் பிடித்திருக்கிறதென்றும் தெரிவித்திருந்தாள். ஆயினும் முதலில் பாஸ்கரனிடம் தன் மனத்தைப் பறிகொடுத்த பின்பு, இப்பொழுது அவள் செய்து கொள்ளப் போகும் திருமணத்தை அவள் மறுமணமாகவே கருதுவதாகக் குறிப்பிட்டிருந்தாள்.

அவளுடைய கல்யாணத்திற்குப் பாஸ்கரன் ஒரு ஜடை வில்லையைப் பரிசாக அனுப்பினன்!

ஏறக்குறைய ஒரு வருஷத்திற்குப் பின்பு, தன் மனைவியுடன் மீண்டும் சேர்ந்ததைப் பாஸ்கரனும் தன்னுடைய மறுமணமாகவே கருதினன். கொட்டு முழக்கு இல்லாத மௌனக் கல்யாணமே!

அன்றிரவு அவன் ஒரு கனவு கண்டான். ஒரு பெரிய மணப்பந்தல். நடுவில் நன்கு அலங்கரிக்கப்பட்ட மணவறை. மேளவாத்தியங்கள் முழங்கிக்கொண் டிருந்தன. மணவறையைச் சுற்றிலும் ஆடவரும் பெண்டிரும் குழுமியிருக்கின்றனர். ஹோம குண்டத்தினின்றும் எழும் நறும்புகை எங்கும் சூழ்ந்திருக்கிறது. மணவறையில் பாஸ்கரன் உட்கார்ந்திருக்கிருன். அவனுக்கு இடது புறத்தில் ராஜேசுவரி அமர்ந்திருக்கிருள். திடீரென்று கெட்டி மேளம்! பாஸ்கரன் திருமாங்கல்யத்தைக் கையில் வாங்கி ராஜேசுவரியின் கழுத்தில் கட்டினன். சூழ்ந்திருந்த யாவரும் பூமாரி பொழிந்தார்கள். இதென்ன? உயரே யார்? பாஸ்கரன் மேலே பார்த்தான். ஒரு புறத்தில் சந்தாநாதஞ் செட்டியாரும், இன்னொரு புறத்தில் மாரியப்ப செட்டியாரும் தெய்விக உருவத்தில் நின்றுகொண்டு புஷ்பமாரி பொழிந்து கொண் டிருந்தார்கள்!

பாஸ்கரன் தூக்கம் கலைந்து எழுந்திருந்து, தன் திருமணத்தை நிறைவேற்றிய தாத்தாவே மீண்டும் வந்து, மேள வாத்தியத்துடன் தன் மறுமணத்தையும் நிறைவேற்றி விட்டாரென்று நினைத்து அவரை வணங்கினன்.

பக்கத்தில் ராஜேசுவரி படுத்திருந்தாள். அவளை உற்று நோக்கினன். அவளுடைய இதழ்களில் லேசாக ஒரு புன்னகை அரும்பியிருந்தது. அவளும் அம்மாதிரி ஒரு கனவைக் கண்டு கொண்டிருந்தாளா என்று நினைத்துப் புன்முறுவல் பொங்கிய அப்பூவிதழ்களில் ஒரு பொன்முத்தமிட்டான் பாஸ்கரன்!

முற்றும்.



## ஆசிரியர்

ஸ்ரீ சு. குருசாமி தொழில் முறையில் பள்ளி ஆசிரியர். பல அருமையான நூல்களுக்கும் இவர் ஆசிரியர் என்பதைத் தமிழ் நாடு நன்கு அறியும். தமிழ், ஆங்கிலம், ஹிந்தி முதலிய மொழிகளில் நல்ல பயிற்சி பெற்றவர். கிராம மக்களின் இயல்புகளையும் ஆசைகளையும் அடிப்படையாகக்கொண்ட இவருடைய கதைகளைப் பலரும் படித்து இன்புற்றிருக்கிறார்கள்.

வேறு சில நாவல்களையும் இவர் எழுதியிருக்கிறார்.